திருக்குர்ஆனுக்கு திருக்குர்ஆனே தரும் விளக்கம்

# சூரத்துல் ப∴க்ரா (பசு)

அத்தியாயம் – 2

திருக்குர்ஆனின் மூலமொழியான அரபியில் உள்ள ஒவ்வொரு சொல்லும் பாதுகாக்கப்பட்டுள்ளது இதை பாதுகாக்கும் பொறுப்பை அல்லாஹ்வே ஏற்றியிருக்கின்றான் (பாரக்க: 15:9). ஆனால் . . திருக்குர்ஆனை மொழி பெயர்த்தவர்கள் தங்கள் மனதில் ஏற்கனவே உள்ள கருத்திற்கு (mind set) ஏற்ப அல்லது தாங்கள் சார்ந்துள்ள பிரிவுகளின் நம்பிக்கைக்கு ஏற்ப மொழி பெயர்த்துள்ளார்கள். ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு சொல்லுக்கும் பல அர்த்தங்கள் வருகின்றன. அவரவர்கள் தங்களுக்குத் தேவையான, சாதகமான அர்த்தங்களை மட்டும் எடுத்துக் கொள்கின்றனர். இதனால் திருக்குர்ஆனின் உண்மையான விளக்கங்கள் கிடைக்காமல் வெறும் குழப்பங்களும் முரண்பாடுகளும் தான் மிஞ்சுகின்றன. திருக்குர்ஆன் உண்மையான இறை வேதம் என்பதற்கு முதல் ஆதாரமே அதில் முரண்பாடுகள் எதுவும் இல்லை என்பதுதான் (பார்க்க: *4:82*). ஆனால் திருக்குர்ஆன் மொழி பெயர்ப்புகளில் ஏராளனமான முரண்பாடுகள் இருப்பதை காண்கிறோம். இவற்றை தவிர்க்கவும் திருக்குர்ஆனின் உண்மையான விளக்கத்தை பெறவும் நாம் என்ன செய்ய வேண்டும்?

திருக்குர்ஆனின் விளக்கம் பெற திருக்குர்ஆனே போதுமானது. திருக்குர்ஆனின் ஒரு வாசகத்தை முற்பகுதியில் அல்லது பிற்பகுதியில் வரும் (connected verses) தொடர்புள்ள வாசகங்கள் அழகுபட விளக்குகின்றன. இது திருக்குர்ஆனின் மாபெரும் அற்புதமாகும். திருக்குர்ஆனின் விளக்கும் பொறுப்பையும் அல்லாஹ்வே ஏற்றிருக்கிறான். (பார்க்க: *75:17-19)*. யாரும் விளக்கத் தேவையில்லை. ஆகவே இதன் விளக்க உரையில் ஒரு வாசகத்தை விளக்கும் போது அதை ஆதரித்து விளக்கும் மற்ற வாசகங்களையும் பக்கத்தில் தந்துள்ளோம். திருக்குர்ஆன் மொழி பெயர்ப்பை பக்கத்தில் வைத்துக் கொண்டு புரிந்துக்கொள்ள வேண்டும். திருக்குர்ஆனை சரியாக புரிந்துக் கொள்ள இந்த வழிமுறை பெரிதும் உதவுகிறது. இவ்வாறாக நாம் அளித்துள்ள விளக்கங்களுக்கு திருக்குர்ஆனே ஆதாரமாகும்.

திருக்குர்ஆனின் அத்தியாயங்கள் மக்கா அத்தியாயம் மதினா அத்தியாயம் என இரண்டாக பரிக்கப்பட்டுள்ளது. மக்கா அத்தியாயங்கள் அல்லாஹ்வின் கொள்கை கோட்பாடுகளும் வரலாற்றுச் சான்றுகளும் பிரபஞ்ச படைப்பின் சான்றுகளும் வருகின்றன. மதினா அத்தியாயங்களில் ஆட்சி அமைப்பின் சட்டங்களும் கட்டளைகளும் வழிகாட்டுதல்களும் உள்ளன.

மூலமொழி விளக்க உரை – **Gulamhmed Parvez**
தமிழாக்கம் – **N.Roohulla, Chennai-82**
சரிபார்த்தல் – **M.P.Rafeeq Ahmed, Chennai-5 & M.Noor Mohamed, Chennai-82**
தேதி : 24-03-2009.

# பகுதி 1

## அத்தியாயம் 2

سُورَةُ البَقَرَةِ مَدَنِيَّةٌ وَهِيَ مِائَتَانِ وَسِتٌّ وَثَمَانُونَ آيَةً وَأَرْبَعُونَ رُكُوعًا

### ஸூரத்துல் பகரா - பசு மாடு

2

ருகூஃ : 40 மதனீ வசனங்கள் : 286

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடை யோனுமாகிய அல்லாஹ்வின் திருப் பெயரால் (துவங்குகின்றேன்).

*அல்லாஹ்வின் வழிகாட்டுதலின் அடிப்படையில் மதீனாவில் முதல் முறையாக சமூகஅமைப்பு மற்றும் ஆட்சிமுறை அமைக்கப்படும் காலக்கட்டத்தில் இந்த அத்தியாயம் இறக்கியருளப்பட்டது.*

الٓمّٓ ۚ 1

1. அலிஃப், லாம், மீம்.

1. அலீப் லாம் மீம் – அளவிலா அருளாளனாகிய அல்லாஹ்வால் முஹம்மது நபி அவர்கள் மூலம் இது இறக்கி அருளப்பட்ட வேதமிது.

ذٰلِكَ الْكِتٰبُ لَا رَيْبَ ۛ فِيْهِ ۛ هُدًى لِّلْمُتَّقِيْنَ ۙ 2

2. இது, (அல்லாஹ்வின்) திரு வேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பய பக்தியுடையோருக்கு (இது) நேர் வழிகாட்டி யாகும்.

2. இந்த வேதம் நேர்வழியை காட்டும் என்பது நிச்சயம் (பார்க்க: 10:57). இதில் எவ்வித சந்தேகமும் கொள்ளத் தேவையில்லை. இது மனித வாழ்வின் உயர் இலட்சியத்தை அடைய விரும்பும் முத்தஃகீன்களுக்கு நேர்வழியினை வழங்குகிறது

الَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْغَيْبِ وَ يُقِيْمُوْنَ الصَّلٰوةَ وَ مِمَّا رَزَقْنٰهُمْ يُنْفِقُوْنَ ۙ 3

3. (பயபக்தியுடைய) அவர்கள், (புலன் களுக்கு எட்டா) மறைவானவற்றின் மீது நம்பிக்கை கொள்வார்கள்; தொழுகையை யும் (உறுதியாக முறைப்படிக்) கடைப் பிடித்து ஒழுகுவார்கள்; இன்னும் நாம் அவர் களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழியில்) செலவும் செய்வார்கள்.

3. இந்த முத்தஃகீன்கள் மறைவானவற்றை – மரணத்திற்குப் பின் உள்ள வாழ்வு, அங்கு கிடைக்கவிருக்கும் சுவர்க்கம், நரகம், மேலும் வானுலக படைப்புகள் போன்ற நிரூபணமாகும் உண்மைகள், தற்சமயம் மனித அறிவிற்கு புலப்படாமல் இருக்கலாம், இருப்பினும் அவற்றைப் பற்றி குர்ஆன் குறிப்பிடும்போது, அவையாவும் உண்மையே என்று மனதார ஏற்றுக்கொள்வார்கள். மேலும் இவர்கள் ஸலாத்தை நிலை நிறுத்துவார்கள். ஸலாத் என்றால் அல்லாஹ் திருக்குரானில் வகுத்துத் தந்துள்ள வாழ்க்கை நெறிமுறைகளை சமுதாயத்தில் நிலைநிறுத்த தொடர்ந்து உழைத்துக்கொண்டே இருப்பது. மேலும் இதற்காக அல்லாஹ் இவர்களுக்கு வழங்கிய செல்வங்களிலிருந்து தம் அத்தியாவசிய தேவைக்குப் போக மிகுதியானவற்றை தலைச்சிறந்த சமுதாயம் உருவாக செலவு செய்த வண்ணம் இருப்பார்கள். (பார்க்க: 2:219)

وَالَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِمَآ اُنْزِلَ اِلَيْكَ وَمَآ اُنْزِلَ مِنْ قَبْلِكَ ۚ وَبِالْاٰخِرَةِ هُمْ يُوْقِنُوْنَ ۗ 4

4. (நபியே!) இன்னும் அவர்கள் உமக்கு அருளப்பெற்ற (வேதத்)தின் மீதும்; உமக்கு முன்னர் அருளப்பட்டவை மீதும் நம்பிக்கை கொள்வார்கள்; இன்னும் ஆகிரத்தை (மறுமையை) உறுதியாக நம்புவார்கள்.

4. உலக மக்களை நேர்வழிபடுத்த இறைச் செய்திகளை தன் தூதர்கள் மூலமாக அனுப்புவது இறைவனுடைய செயல்திட்டமாக இருந்துவந்தது. இந்த இறைச் செய்தியை வஹீ என்றும், இதன் தொகுப்பை வேதம் அல்லது அல்கிதாப் என்றும் திருக்குர்ஆன் குறிப்பிடுகிறது. அவ்வாறு அனுப்பப்பட்ட இறை வழிகாட்டுதலை இந்த முத்தஃகீன்கள் உறுதியாக நம்புவார்கள். இது மட்டுமின்றி இதற்கு முன்னர் பல இறைத்தூதர்கள் மூலமாக உலகம் முழுவதும் உள்ள அனைத்து சமுதாயங்களுக்கும் இறக்கியருளப்பட்டதும் இதனடிப்படியே என்பதையும் மனதார ஏற்றுக்கொள்வார்கள் (பார்க்க: 14:4). அத்துடன் ஆஃகிரத் என்பது என்றும் நிரூபணமாகும் சத்திய உண்மையே என்பதையும் உறுதியாக நம்புவார்கள்.

*ஆ:.கிரத் என்றால் மனித வாழ்க்கை மரணத்திற்கு பின்பும் தொடர்கிறது. மரணத்திற்கு பின் கிடைக்கும் வாழ்க்கைக்கு ஆ:.கிரத் அல்லது மறுமை என்பார்கள். இவ்வுலகில் செய்து வரும் செயல்களுக்கு ஏற்ப வாழ்க்கை அவனுக்கு அங்கு கிடைக்கிறது. (பாாக்க.45 : 26-31) திருக்குர்ஆன் பல இடங்களில் இன்னொரு ஆகிரத்தைப் பற்றியும் பேசுகிறது. அதாவது மனித செயல்களுக்கான விளைவுகள் இவ்வுலகிலும் ஏற்பட்டவண்ணம் இருக்கின்றன என்பதே அதன் கூற்று. (பாாக்க: 2:201 & 202) நற்செயல்களுக்கு நற்பலன்கள் – தீயச் செயல்களின் விளைவு அழிவும் துயரமும். இறைத்தூதர்கள் மக்களை ஆக்கப்பூர்வமான நற்செயல்களின் பக்கம் அழைப்பு விடுக்கிறார்கள். அதை ஏற்று நடக்கும் சமுதாயங்களுக்கு சந்தோசமான வாழ்க்கை கிடைக்கிறது. அதை ஏற்க மறுத்து மாறு செய்யும் சமுதாயங்கள் துயரத்திற்குள்ளாகி அழிந்து போகின்றன.(பார்க்க: 3:85) எனவே ஆ:.கிரத் என்றால்* ***மனித செயல்களுக்கு ஏற்ற இறுதி விளைவுகள்*** *என்று ஆகிறது. இது* ***மனித செயல் வினைச் சட்டம்*** *எனப்படும். முஸ்லிம்கள் மத்தியில் மரணத்திற்கு பின் வரும் ஆ:.கிரத்தை பற்றி மட்டும் பேசுகிறார்கள். கவலைப்படுகிறார்கள். ஆனால் திருக்குர்ஆன் அதிகமாக இந்த உலக வாழ்க்கைப் பற்றிதான் பேசுகிறது. அதாவது மனித குலம் எவ்வாறு சந்தோஷமாக சுபிட்சமாக சகோதர மனப்பான்மையுடன் வாழ முடியும் என்பதற்கான வழிகாட்டுதலை அதிகம் தருகிறது. இந்த வாழ்வு மரணத்திற்கு பின்பும் தொடர்கிறது என்பதே திருக்குர்ஆனின் கூற்றாகும்.*

5 أُولَٰئِكَ عَلَىٰ هُدًى مِّن رَّبِّهِمْ ۖ وَأُولَٰئِكَ هُمُ الْمُفْلِحُونَ ○

*5. இவர்கள் தாம் தங்கள் இறைவனின் நேர் வழியில் இருப்பவர்கள்; மேலும் இவர்களே வெற்றியாளர்கள்.*

5. இப்படிப்பட்டவர்கள்கள் தாம் தங்கள் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள். இவர்களே தம் வாழ்வில் வெற்றிகொண்டவர்கள் ஆவார்கள். (பார்க்க: 23:1-11 , 31:2 - 5)

6 إِنَّ الَّذِينَ كَفَرُوا سَوَاءٌ عَلَيْهِمْ أَأَنذَرْتَهُمْ أَمْ لَمْ تُنذِرْهُمْ لَا يُؤْمِنُونَ ○

*6. நிச்சயமாக காஃபிர்களை (இறைவனை நிராகரிப்போரை) நீர் அச்சமூட்டி எச்சரித்தாலும் (சரி) அல்லது எச்சரிக்கா விட்டாலும் சரியே! அவர்கள் ஈமான் (இறை நம்பிக்கை) கொள்ள மாட்டார்கள்.*

6) இதற்கு மாறாக மற்றொரு பிரிவினர் இருக்கிறார்கள். இறைவழிகாட்டுதலின் நன்மைகளை இவர்களுக்கு எடுத்துக் கூறியும் அவற்றை ஏற்க மறுத்து விடுகின்றனர். காரணம் இவர்களிடமுள்ள மனோஇச்சை, முன்னோர்கள் வழிபாடு, ஆணவம், பொறாமை, சுயநலம் போன்றவையாகும். இவற்றிற்கு அடிமைப்பட்டு வாழ்வதால் (பார்க்க: 2:90-91 , 27:14 , 35:42-43 , 47:32) இவர்கள் தாமும் வழிகெட்டு பிறரையும் வழிதவறச் செய்வார்கள் (பார்க்க: 2:26 , 41:26) இத்தகையவர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்தும் பலனில்லாமல் போயிவிடுகிறது. ஆக இவர்கள் இறைவனின் போதனைகளை ஒருபோதும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

7 خَتَمَ اللَّهُ عَلَىٰ قُلُوبِهِمْ وَعَلَىٰ سَمْعِهِمْ ۖ وَعَلَىٰ أَبْصَارِهِمْ غِشَاوَةٌ ۖ وَلَهُمْ عَذَابٌ عَظِيمٌ ○

*7. அல்லாஹ் அவர்களின் இதயங்களிலும், அவர்களின் செவிப்புலன்களிலும் முத்திரை வைத்துவிட்டான்; இன்னும் அவர்களின் பார்வை மீது ஒரு திரை கிடக்கிறது; மேலும் அவர்களுக்குக் கடுமையான வேதனையுமுண்டு.*

7. இவர்களுடைய இப்படிப்பட்ட தவறான போக்குகளினால் அல்லாஹ்வின் நியதிப்படி எதையும் கேட்டு சிந்தித்து சீர்தூக்கிப் பார்க்கும் ஆற்றல்களை இழந்து விடுகிறார்கள்.(பார்க்க: 4:155) மேலும் இவர்களுடைய மனோ இச்சையின் போக்கு இவர்களுடைய சிந்தனைப் புலன்களை நல்வழி பெறுவதிலிருந்து மறைத்துவிடுகிறது.(பார்க்க: 2:88 , 74:43-46, 18:57 , 41:4, 45:23 , 83:14) இவர்கள்தான் வாழ்க்கையின் சந்தோஷங்களை இழந்து அழிவின் படுகுழியில் விழுந்துவிடுபவர்கள் ஆவார்கள். இவையாவும் இறைவனால் ஏற்படுத்தியுள்ள "*மனித செயல்களுக்கு ஏற்ற விளைவுகள்*" என்ற நியதிப்படி நிகழ்வதாகும் (பார்க்க: 17:45,46, 18:57, 41:4-5, 45:23 & 83:14)

8 وَمِنَ النَّاسِ مَن يَقُولُ آمَنَّا بِاللَّهِ وَبِالْيَوْمِ الْآخِرِ وَمَا هُم بِمُؤْمِنِينَ ○

**ருகூஃ 2**

*8. இன்னும் மனிதர்களில் "நாங்கள் அல்லாஹ்வின் மீதும், இறுதி(த் தீர்ப்பு) நாள் மீதும் ஈமான் (நம்பிக்கை) கொள்கிறோம்" என்று கூறுவோரும் இருக்கின்றனர்; ஆனல் (உண்மையில்) அவர்கள் நம்பிக்கை கொண்டோர் அல்லர்.*

8) இறை வழிகாட்டுதலை ஏற்றுக்கொள்பவர்கள் – மற்றொன்று அதை முற்றிலும் நிராகரிப்பவர்கள். இதை தவிர்த்து மூன்றாம் பிரிவினர்களும் மக்களுள் சிலர் இருக்கின்றனர். இவர்கள் அல்லாஹ்வின் வழிகாட்டுதலையும் "*மனித செயல்களுக்கு ஏற்ற இறுதி விளைவுகள்*" என்ற கோட்பாட்டையும் ஏற்றுக்கொள்வதாக உதட்டளவில் கூறுவார்கள். உண்மையில் இவர்கள் மனதளவில் ஏற்றுக்கொள்வதில்லை. இவர்கள் தாம் சந்தர்ப்பவாதிகள் (முனா:.பிக்குகள்).

9 يُخٰدِعُوْنَ اللّٰهَ وَالَّذِيْنَ اٰمَنُوْاۚ وَمَا يَخْدَعُوْنَ اِلَّآ اَنْفُسَهُمْ وَمَا يَشْعُرُوْنَ ○

*9. (இவ்வாறு கூறி) அவர்கள் அல்லாஹ்வையும், ஈமான் (இறை நம்பிக்கை) கொண்டோரையும் ஏமாற்ற நினைக்கின்றனர்கள்; ஆனால் அவர்கள் (உண்மையில்) தம்மைத்தாமே ஏமாற்றிக்கொள்கிறார்களே தவிர வேறில்லை; எனினும் அவர்கள் (இதை) உணர்ந்து கொள்ளவில்லை.*

9) அல்லாஹ் நிர்ணயித்துள்ள திட்டங்கள் செயலாக்கம் பெற ஒரு சமூகஅமைப்பை ஏற்படுத்த இறை வழிகாட்டுதலை ஏற்றுக்கொண்டவர்கள் உழைக்கிறார்கள். அனால் இவர்களிடம் இந்த சந்தர்ப்பவாதிகள் தாங்களும் உழைப்பதாக கூறி ஏமாற்றுகின்றனர். ஆனால் உண்மையில் அவர்கள் உழைப்பதில்லை. மாறாக இந்த மூ:.மின்களை நல்ல விதமாய் ஏமாற்றி விட்டோம் என்று எண்ணிக் கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் சிந்தித்துப் பார்த்திருந்தால் தம்மைத் தாமே ஏமாற்றிக்கொள்ளும் உண்மை விளங்கி இருக்கும். எனினும் இந்த உண்மையை இவர்கள் உணர்ந்துக்கொள்வதாக இல்லை

10 فِىْ قُلُوْبِهِمْ مَّرَضٌ ۙ فَزَادَهُمُ اللّٰهُ مَرَضًا ۚ وَلَهُمْ عَذَابٌ اَلِيْمٌ ۙ بِمَا كَانُوْا يَكْذِبُوْنَ ○

*10. அவர்களுடைய இதயங்களில் ஒரு நோயுள்ளது; அல்லாஹ் (அந்த) நோயை அவர்களுக்கு இன்னும் அதிகமாக்கி விட்டான்; மேலும் அவர்கள் பொய் சொல்லும் காரணத்தினால் அவர்களுக்குத் துன்பந்தரும் வேதனையுமுண்டு.*

10) இவர்களிடமுள்ள இரட்டை வேடமிடும் நோய் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. ஆக இவர்கள் அல்லாஹ்வின் செயல்முறை திட்டங்களுக்கு எதிராக செயல்பட செயல்பட அதன் விளைவாக இவர்களுடைய சிந்தனைசக்தி மங்கிவிடுகிறது. மேலும் தங்கள் தவறான போக்குகளை நியாயப்படுத்த பேச்சிற்கு ஒரு பொய் சொல்ல ஆரம்பித்து விடுகிறார்கள். இடத்திற்கு தகுந்தாற்போல் வேடமிட வேண்டியுள்ளது. இப்படியாக மார்கத்தை பொய் ஆக்குபவர்களின் வாழ்க்கைத் தரம் படுமோசமான நிலைக்கு தள்ளப்படுகிறது.

11 وَاِذَا قِيْلَ لَهُمْ لَا تُفْسِدُوْا فِى الْاَرْضِ ۙ قَالُوْٓا اِنَّمَا نَحْنُ مُصْلِحُوْنَ ○

*11. "பூமியில் குழப்பத்தை உண்டாக்காதீர்கள்" என்று அவர்களிடம் சொல்லப்பட்டால் "நிச்சயமாக நாங்கள் தாம் சமாதானவாதிகள்" என்று அவர்கள் சொல்கிறார்கள்.*

11) சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்தி சமூக அமைதியை சீர்குலைக்காதீர்கள்(1) என்று இவர்களிடம் கூறினால் அவர்கள், "நாங்கள் எங்கு சீர்குலைக்கிறோம்? நிச்சயமாக நாங்கள்தாம் சமுதாயத்தில் அமைதியையும் சமாதானத்தையும் ஏற்படுத்தி வருகிறோம்" என்று பறைசாற்றிக் கொள்கிறார்கள்.

*(சமுதாயத்தில் சமூக சமன்பாடு – சமூக ஒற்றுமை – இருப்போர் இல்லாதோர் என்ற வேற்றுமையை அகற்றி –மக்கள் அனைவரும் ஓரினத்தவர்களே என்ற அடிப்படையில் சமூக அமைப்பு ஏற்படுத்தி அதன் அடிப்படையில் ஆட்சி முறை கொண்டு வர இறைத்தூதர்கள் பாடுபடுகிறார்கள். ஆனால் இந்த இரட்டை வேடம் போடும் இந்த விஷமிகளின் செயல்பாடுகளால் இந்த சமுதாய சமச்சீர்நிலை பாதிக்கப்பட்டு காலப்போக்கில் குழப்பங்கள் ஏற்பட்டுவிடுகின்றன.)*

12 اَلَآ اِنَّهُمْ هُمُ الْمُفْسِدُوْنَ وَلٰكِنْ لَّا يَشْعُرُوْنَ ○

*12. நிச்சயமாக அவர்கள் தாம் குழப்பம் உண்டாக்குபவர்கள் அன்றோ; ஆனால் அவர்கள் (இதை) உணர்கிறார்களில்லை.*

12) நினைவில் கொள்ளுங்கள்! இப்படிப்பட்டவர்கள் தாம் சமுதாயத்தில் குழப்பங்களையும் சீர்கேடுகளையும் விளைவிப்பவர்கள். இவர்களுடைய சொல்லுக்கும் செயலுக்கும் எத்தனை முரண்பாடுகள்! இதையும் அவர்கள் உணர்ந்துக் கொள்வதில்லை.

13 وَاِذَا قِيْلَ لَهُمْ اٰمِنُوْا كَمَآ اٰمَنَ النَّاسُ قَالُوْٓا اَنُؤْمِنُ كَمَآ اٰمَنَ السُّفَهَآءُ ۗ اَلَآ اِنَّهُمْ هُمُ السُّفَهَآءُ وَلٰكِنْ لَّا يَعْلَمُوْنَ ○

*13. (மற்ற) மனிதர்கள் ஈமான் கொண்டது போன்று நீங்களும் ஈமான் கொள்ளுங்கள் என்று அவர்களிடம் சொல்லப்பட்டால், "மூடர்கள் ஈமான் (நம்பிக்கை) கொண்டது போல், நாங்களும் ஈமான் (நம்பிக்கை) கொள்ள வேண்டுமா?" என்று அவர்கள் கூறுகிறார்கள்; (அப்படியல்ல;) நிச்சயமாக இ(ப்படிக் கூறுப)வர்களே மூடர்கள். ஆயினும் (தம் மடமையை) இவர்கள் அறிவதில்லை.*

13) அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்று நடப்பவர்களைப் போன்று நீங்களும் வாழுங்கள் என்று அறிவுறுத்தினால் இரட்டை வேடமிடும் இவர்கள், "தன் நலத்தில் எந்த அக்கறையும் கொள்ளாத மூடர்கள் நீங்கள்; எளிய முறையில் கிடைக்கக்கூடிய சொத்து சுகங்களை விட்டுவிட்டு இலட்சியவாதிகள் என்ற பெயரில் மடத்தனமாக வாழும் உங்களைப் போன்றா நாங்களும் வாழவேண்டும்." என்று கேட்கிறார்கள். நினைவில் கொள்ளுங்கள். வாழ்வின் உண்மையான இலாப நஷ்டம் தெரியாத அறிவிலிகள் இவர்களே. வருங்கால நலனுக்காக தற்காலிக சந்தோஷங்களை தவிர்த்துக்கொள்ளச் சொல்வது இவர்களுடைய நன்மைக்கே என்ற உண்மையை இவர்கள் அறிவதில்லை (2 : 86 )

14 وَإِذَا لَقُوا الَّذِينَ آمَنُوا قَالُوا آمَنَّا وَإِذَا خَلَوْا إِلَىٰ شَيَاطِينِهِمْ قَالُوا إِنَّا مَعَكُمْ إِنَّمَا نَحْنُ مُسْتَهْزِئُونَ ○

*14. இன்னும் (இந்தப் போலி விசுவாசிகள்) ஈமான் கொண்டிருப்போரைச் சந்திக்கும் போது, "நாங்கள் ஈமான் கொண்டிருக்கிறோம்" என்று கூறுகிறார்கள்; ஆனால் அவர்கள் தங்கள் (தலைவர்களாகிய) ஷைத்தான்களுடன் தனித்திருக்கும்போது, "நிச்சயமாக நாங்கள் உங்களுடன் தான் இருக்கிறோம்; நிச்சயமாக நாங்கள் (அவர்களைப்) பரிகாசம் செய்பவர்களாகவே இருக்கிறோம்" எனக் கூறுகிறார்கள்.*

14) இரட்டை வேடமிடும் இவர்களின் போக்கு எவ்வாறு உள்ளது என்றால் இவர்கள் இறை வழிகாட்டுதலை ஏற்று நடப்பவர்களை சந்திக்கும் போதெல்லாம் நாங்களும் உங்களைப் போன்று நடப்பவர்கள்தாம் என்று கூறுகின்றனர். ஆனால் தீய வழியில் இருக்கும் தங்கள் தலைவர்களான ஷைத்தானியர்களை தனிமையில் சந்திக்கும்போது "நிச்சயமாக நாங்கள் உங்களோடுதான் இருக்கிறோம். நாம் அங்கு செல்வது அவர்களை முட்டாளாக்கி ஏளனம் செய்யவே" என்று கூறுகின்றனர்.

15 اللَّهُ يَسْتَهْزِئُ بِهِمْ وَيَمُدُّهُمْ فِي طُغْيَانِهِمْ يَعْمَهُونَ ○

*15. அல்லாஹ் இவர்களைப் பரிகசிக்கிறான். இன்னும் இவர்களின் வழிகேட்டிலேயே கபோதிகளாகத் தட்டழியும்படி விட்டு விடுகிறான்.*

15. இறை வழிகாட்டுதல்களை ஏற்று நடப்பவர்களை அவர்கள் என்ன ஏளனம் செய்ய முடியும்?. அல்லாஹ் நிர்ணயித்துள்ள "*மனித செயல்களுக்கு ஏற்ற விளைவுகள்*" என்ற நியதியின்படி அவர்களே பரிகாசத்திற்கு ஆளாவார்கள். செல்வம் மற்றும் அதிகார பலத்தின் மமதையில் அவர்கள் வரம்பு மீறி சட்ட விரோதமாக செயல்படுகிறார்கள். இதன் விளைவு–அவர்கள் கபோதிகளாக நிம்மதியை இழந்து தவிப்பார்கள். காலம் செல்லச்செல்ல தங்கள் வாழ்வின் இலட்சியத்தை விட்டு வெகுதூரம் சென்றுவிடுவார்கள்.

16 أُولَٰئِكَ الَّذِينَ اشْتَرَوُا الضَّلَالَةَ بِالْهُدَىٰ فَمَا رَبِحَت تِّجَارَتُهُمْ وَمَا كَانُوا مُهْتَدِينَ ○

*16. இவர்கள் தாம் நேர்வழிக்கு பதிலாகத் தவறான வழியைக் கொள்முதல் செய்து கொண்டவர்கள்; இவர்களுடைய (இந்த) வியாபாரம் இலாபம் தராது; மேலும் இவர்கள் நேர்வழி பெறுபவர்களும் அல்லர்.*

16. இவர்கள்தாம் நேர்வழிக்கு பகரமாக தவறான வழியை தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள். பிறரை மோசம் செய்து எளிதாக செல்வத்தை ஈட்டிக்கொள்ளும் இவர்களின் இந்த வியாபாரம் ஒருபோதும் நிரந்தர பலனை தராது. மேலும் இவர்கள் நேர்வழி பெறவும் மாட்டார்கள்.

17 مَثَلُهُمْ كَمَثَلِ الَّذِي اسْتَوْقَدَ نَارًا فَلَمَّا أَضَاءَتْ مَا حَوْلَهُ ذَهَبَ اللَّهُ بِنُورِهِمْ وَتَرَكَهُمْ فِي ظُلُمَاتٍ لَّا يُبْصِرُونَ ○

*17. இத்தகையோருக்கு ஓர் உதாரணம் நெருப்பை மூட்டிய ஒருவனின் உதாரணத்தைப் போன்றது. அ(ந் நெருப்பான)து அவனைச் சுற்றிலும் ஒளி வீசியபோது, அல்லாஹ் அவர்களுடைய ஒளியைப் பறித்துவிட்டான்; இன்னும் பார்க்க முடியாத காரிருளில் அவர்களை விட்டு விட்டான்.*

17. இந்த சந்தர்ப்பவாதிகளின் நிலை கும்மிருட்டில் நெருப்பை மூட்டிய ஒருவனின் உதாரணத்தைப் போன்றது. அந்த ஒளி அவனைச் சுற்றியுள்ள இடத்தை வெளிச்சமாக்குகிறது. அதன்பின் சற்று நேரத்தில் ஒளி மறைந்து எதையும் பார்க்கமுடியாதபடி இன்னும் அதிகமான இருள் சூழ்ந்துகொள்கிறது.

அது போல சமுதாயத்தில் ஏற்படும் பிரச்சனைகளுக்கு இவர்களால் தற்காலிக தீர்வை மட்டுமே தர முடிகிறது. அந்த தீர்வினால் மென்மேலும் பிரச்சனைகள் உருவாகிவிடுகின்றன. (24:40) அந்த பிரச்சனைகளுக்கு மூலக்காரணம் என்ன என்பதை கண்டறிந்து நிரந்தர தீர்வு காணும் ஞானம் மனிதர்களிடம் இருப்பதில்லை. ஆனால் அல்லாஹ்வின் செயல் திட்டங்களோ மனித பிரச்சனைகளுக்கு நிரந்தர தீர்வு தரக்கூடிய வல்லமையுடையது.

18 صُمٌّۢ بُكْمٌ عُمْىٌ فَهُمْ لَا يَرْجِعُوْنَۙ

*18. (அவர்கள்) செவிடர்களாக, ஊமையர்களாக, குருடர்களாக இருக்கின்றனர் எனவே அவர்கள் (நேரான வழியின் பக்கம்) மீள மாட்டார்கள்.*

18. இப்படியாக இந்த சந்தர்ப்பவாதிகள் வாழ்வின் சரியான பாதையின் பக்கம் மீள முடியாமல் தவிக்கின்றனர். இவர்களுக்கு காதுகள் இருந்தும் செவிடர்களாய், வாயிருந்தும் ஊமைகளாய், கண்களிருந்தும் குருடர்களாய் வாழ்கின்றனர். இப்படிப்பட்டவர்களின் வாழ்க்கைத் தரம் மிருகங்களை விட மோசமாக போய் விடுகிறது. (8:22) இவர்கள் மனோ இச்சைக்கு அடிமையாகி வாழ்வதால் எதையும் சிந்தித்து செயலாற்றும் திறமை இவர்களிடம் இருப்பதில்லை (16:76)

19 اَوْ كَصَيِّبٍ مِّنَ السَّمَآءِ فِيْهِ ظُلُمٰتٌ وَّرَعْدٌ وَّبَرْقٌ ۚ يَجْعَلُوْنَ اَصَابِعَهُمْ فِىْٓ اٰذَانِهِمْ مِّنَ الصَّوَاعِقِ حَذَرَ الْمَوْتِ ؕ وَاللّٰهُ مُحِيْطٌ ۢ بِالْكٰفِرِيْنَ

*19. அல்லது, (இன்னும் ஓா உதாரணம:) காரிருளும், இடியும், மின்னலும் கொண்டு வானத்திலிருந்து கடுமழை கொட்டும் மேகம்; (இதிலகப்பட்டுக்கொண்டோர்) மரணத்திற்கு அஞ்சி இடியோசையினால், தங்கள் விரல்களைத் தம் காதுகளில் வைத்துக் கொள்கிறார்கள்; ஆனால் அல்லாஹ் (எப்போதும் இந்த) காஃபிர்களைச் சூழ்ந்தவனாகவே இருக்கின்றான்.*

19. அல்லது இவர்களே உருவாக்கி வைத்துள்ள சமூக அமைப்பில் சிக்கல்கள் ஏற்படும்போது அவற்றை தங்கள் சுயநல அறிவைக் கொண்டு அதன் ஓட்டைகளை அடைக்க முயல்கின்றனர். இவ்வாறு செய்வதின் மூலம் தம் பிரச்சனைகள் தீர்ந்துவிட்டன. இனி நமக்கு எந்த ஆபத்தும் வராது என்று எண்ணிக்கொள்கின்றனர். ஆனால் இவர்களுடைய இந்த சுயநல போக்கினால் ஏற்படும் சீர்கேடுகள் சமுதாயம் முழுவதும் சூழ்ந்திருப்பது பற்றி இவர்களுடைய அறிவுப்புலன்களுக்கு எட்டுவதில்லை. இவர்களைப் பற்றி ஓர் உதாரணத்தைக் கொண்டு விளங்கிக்கொள்ளலாம்

காரிருளும், பலமான இடியும், மின்னலும் கொண்ட பயங்கர மழை பெய்கிறது. இடி மின்னல்களால் தம் உயிருக்கு ஆபத்து வந்துவிடுமோ என அஞ்சி தம் காதுகளை தம் விரல்களால் அடைத்துக்கொள்கிறார்கள். எதோ காது வழியாகத்தான் தம் உயிர் போய்விடுவது போல். ஆனால் இடி மின்னல்களின் தாக்கமும் கடுமழையினால் ஏற்படும் பயங்கர வெள்ளத்திலிருந்து அனைவரையும் பாதுகாக்கும் முயற்சியில் இறங்குவதில்லை. இந்த உதாரணத்தைப் போலவே அல்லாஹ் நிர்ணயித்த *மனித செயல்களுக்கு ஏற்ற விளைவுகள்* எப்போதும் சமுதாயம் முழுவதும் சூழ்ந்தவையாகவே இருக்கின்றன. இவைகளிலிருந்து பாதுகாத்துக் கொள்ள எந்த வழியையும் தேடுவதில்லை. (பார்க்க: 30:24).

20 يَكَادُ الْبَرْقُ يَخْطَفُ اَبْصَارَهُمْ ؕ كُلَّمَآ اَضَآءَ لَهُمْ مَّشَوْا فِيْهِ ۙ وَاِذَآ اَظْلَمَ عَلَيْهِمْ قَامُوْا ؕ وَلَوْ شَآءَ اللّٰهُ لَذَهَبَ بِسَمْعِهِمْ وَاَبْصَارِهِمْ ؕ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ

*20. அம்மின்னல் அவர்களின் பார்வைகளைப் பறித்துவிடப் பார்க்கிறது. அ(ம் மின்னலான)து அவர்களுக்கு ஒளி தரும் போதெல்லாம், அவர்கள் அதி(ன் துணையினா)ல் நடக்கிறார்கள்; அவர்களை இருள் சூழ்ந்து கொள்ளும் போது (வழியறியாது) நின்று விடுகிறார்கள்; மேலும் அல்லாஹ் நாடினால் அவர்களுடைய கேள்விப் புலனையும், பார்வைகளையும் போக்கி விடுவான்; நிச்சயமாக அல்லாஹ் எல்லாவற்றின் மீதும் பேராற்றல் உடையவன்.*

20. ஒரு வேளை இவர்கள் தம் காதுகளை மூடிக்கொள்வதினால் இடியின் பேரோசையிலிருந்து தப்பித்துக்கொள்ளலாம். ஆனால் அந்த மின்னல் அவர்கள் பார்வையை பறித்து விடுமே. அதாவது அவர்கள் ஒரு பிரச்சனைக்கு தீர்வு கண்டெடுத்தால் மறுபுறத்திலிருந்து வேறு பிரச்சனைகள் உருவாகி விடுகிறதே. அல்லது அந்த இருளில் மின்னல் ஒளியின் துணையைக் கொண்டு கொஞ்ச தூரம்தான் நடக்க முடிகிறது. பிறகு மீண்டும் இருள் சூழ்ந்துக் கொள்கிறது. மனிதனின் சுய அறிவைக் கொண்டு பிரச்சனைகளுக்கு தற்காலிக தீர்வை மட்டும் காண முடிகிறது. நிரந்தர தீர்வு காண முடிவதில்லை. அவர்களுடைய செவிப் புலன்களையும் பார்வைப் புலன்களையும் உடனே போக்கிவிடுவது என்பது அல்லாஹ்வின் நாட்டமாக (செயல்திட்டமாக) இருந்திருந்தால் அவ்வாறு செய்யப்பட்டிருக்கும். ஆனால் அல்லாஹ்வின் செயல்திட்டம் அவ்வாறு இல்லை. படைக்கப்பட்ட ஒவ்வொன்றிலும் நிரந்தர நிலைமாறா விதிமுறைகள் நிர்ணயிக்கப்பட்டு

அவையாவும் அந்தந்த விதிமுறைகளின்படியே செயல்பட வைக்கப்பட்டுள்ளன. மனித விஷயத்திலும் அவ்வாறே நிர்ணயிக்கப்பட்டுள்ளன. அதாவது மனித செயல்கள் மற்றும் அதற்கேற்ற விளைவுகள் என நிர்ணயிக்கப்பட்டுள்ளது(7:182-183).

21 يَا أَيُّهَا النَّاسُ اعْبُدُوا رَبَّكُمُ الَّذِي خَلَقَكُمْ وَالَّذِينَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ ۝

(ருகூஉ 3

*21. மனிதர்களே! நீங்கள் உங்களேயும் உங்களுக்கு முன்னிருந்தோரையும் படைத்த உங்கள் இறைவனேயே வணங்குங்கள். (அதனுல்) நீங்கள் தக்வா (இறையச்சமும் தூய்மையும்) உடையோராகலாம்.*

21. மனிதர்களே! உங்களையும் உங்களுக்கு முன் சென்றோரையும் படைத்த உங்கள் இறைவனை மட்டுமே வணங்கி நடந்துக்கொள்ளுங்கள். அதாவது இறைவனின் வழிகாட்டுதல்களுக்கு அடிபணிந்து வாழுங்கள். இதனால் மிகச் சிறந்த செயல் வீரர்களாக (தக்வா உடையவர்களாக) ஆகலாம். மேலும் உங்களுக்கு பாதுகாப்பான வாழ்க்கையும் கிடைக்கும்.

22 الَّذِي جَعَلَ لَكُمُ الْأَرْضَ فِرَاشًا وَالسَّمَاءَ بِنَاءً وَأَنْزَلَ مِنَ السَّمَاءِ مَاءً فَأَخْرَجَ بِهِ مِنَ الثَّمَرَاتِ رِزْقًا لَكُمْ فَلَا تَجْعَلُوا لِلَّهِ أَنْدَادًا وَأَنْتُمْ تَعْلَمُونَ ۝

*22. அ(ந்த இறை)வனே உங்களுக்காக பூமியை விரிப்பாகவும், வானத்தை விதானமாகவும் அமைத்து, வானத்தினின்றும் மழை பொழியச் செய்து; அதனின்று உங்கள் உணவிற்காகக் கனி வர்க்கங்களே வெளிவரச் செய்கிறுன்; (இந்த உண்மைகளையெல்லாம்) நீங்கள் அறிந்து கொண்டே இருக்கும் நிலேயில் அல்லாஹ்வுக்கு இணேகளே ஏற்படுத்தாதீர்கள்.*

22 இறை வழிகாட்டுதலுக்கு நாம் ஏன் கட்டுபட வேண்டும் என்ற கேள்வி எழலாம். ஏனெனில் நீங்கள் வாழும் இந்த பூமியை உருண்டையாக இருப்பினும் வாழ்வதற்கு வசதியாக விரிப்பாகவும், வான் மண்டலங்களில் பல கோள்களை படைத்து ஒன்றுக்கொன்றின் புவிஈர்ப்பில் நிலைத்து செயல்பட விதானமாகவும், வானத்திலிருந்து மழை பொழியச் செய்து அதன் மூலம் உணவிற்காக கனி வகைகளையும் விளையச் செய்வதும் இறைவனே. இவை எல்லாம் உங்களிடமிருந்து யாதொரு பிரதிபலனையும் எதிர்பாராமல் இறைவனால் உருவாக்கப்பட்டவையே. இந்த உண்மைகளை எல்லாம் தெரிந்துக் கொண்ட நீங்கள் அல்லாஹ்விற்கு பதிலாக வேறெந்த கொள்கைகளையும் இணையாக வைத்து கடைபிடிக்காதீர்கள். அதாவது உங்கள் உழைப்பின் மூலம் கிடைக்கின்ற வாழ்வாதாரங்களை பயன்படுத்த மட்டுமே உங்களுக்கு அனுமதி அளிக்கப்படுகிறது. ஆனால் அவற்றின் மீது சொந்தம் கொண்டாட உங்களுக்கு எந்த அனுமதியும் கிடையாது. ஏனெனில் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அனைத்து ஏற்பாடுகளும் இருப்பதால்தான் அதில் நீங்கள் உழைத்து உங்கள் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள முடிகிறது.

23 وَإِنْ كُنْتُمْ فِي رَيْبٍ مِمَّا نَزَّلْنَا عَلَىٰ عَبْدِنَا فَأْتُوا بِسُورَةٍ مِنْ مِثْلِهِ وَادْعُوا شُهَدَاءَكُمْ مِنْ دُونِ اللَّهِ إِنْ كُنْتُمْ صَادِقِينَ ۝

*23. இன்னும், [முஹம்மது (ஸல்) என்ற] நம் அடியாருக்கு நாம் அருளியுள்ள (வேதத்)தில் நீங்கள் சந்தேகம் உடையோராக இருப்பீர்களானுல், (அந்த சந்தேகத்தில்) உண்மை உடையோராகவும் இருப்பீர்களானுல் அல்லாஹ்வைத் தவிர உங்கள் உதவியாளர்களே (யெல்லாம் ஒன்ருக) அழைத்து (வைத்து)க் கொண்டு இது போன்ற ஓர் அத்தியாயமேனும் கொண்டு வாருங்கள்.* 10:38.

23. இன்னும் வஹீ என்னும் இறை வழிக்காட்டுதல்கள் மூலமாக மனிதகுல மேம்பாட்டிற்கான வாழ்க்கைத் திட்டங்கள் இவ்வேதத்தில் அருளப்பட்டுள்ளன. இது இந்த உலக வாழ்க்கைக்கு ஒத்துவராது என்று நீங்கள் சந்தேகித்தால், இது அல்லாத வேறு வழி முறைகளை ஏற்படுத்தி பரிசீலித்துப் பார்த்துக் கொள்ளுங்கள். இதை விட சிறந்த வாழ்க்கை திட்டங்கள் கொள்கை கோட்பாடுகளை கொண்டு வர முடியும் என்ற வாதத்தில் நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால், தனிப்பட்ட முறையிலோ அல்லது உங்களிலுள்ள அறிவு ஜீவிகளையும் நிபுணர்களையும் ஒருங்கிணைத்து முயற்சி செய்துப் பாருங்கள். இதை ஒரு சவாலாகவே ஏற்றுக்கொள்ளுங்கள்.(பார்க்க: 10:38, 11:13)

24 فَإِنْ لَّمْ تَفْعَلُوْا وَلَنْ تَفْعَلُوْا فَاتَّقُوا
النَّارَ الَّتِىْ وَقُوْدُهَا النَّاسُ وَالْحِجَارَةُ ۖ
أُعِدَّتْ لِلْكٰفِرِيْنَ ○

*24. (அப்படி) நீங்கள் செய்யாவிட்டால் -அப்படிச் செய்ய உங்களால் திண்ணமாக முடியாது- மனிதர்களையும் கற்களையும் எரி பொருளாகக் கொண்ட நரக நெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள். (அந்த நெருப்பு, இறைவனையும் அவன் வேதத்தையும் ஏற்க மறுக்கும்) காஃபிர்களுக்காகவே அது சித்தப்படுத்தப்பட்டுள்ளது.*

24. ஆக மனிதகுல மேம்பாட்டிற்கான இது போன்ற சிறந்த, எல்லா வரையிலும் முழுமையான, எந்த குறையுமற்ற வேறு வழிமுறைகளை உங்களால் ஒருபோதும் கொண்டு வர முடியாது. இதை விட்டுவிட்டு நீங்கள் சுயமாக வழிமுறைகளை ஏற்படுத்தி அவற்றை பின்பற்றினால் காலப்போக்கில் நீங்கள் நஷ்டமடைவீர்கள். உங்கள் சமுதாய சீரழியும். உங்கள் மத்தியில் கலகமும், கலவரமும் தான் ஏற்படும். அதன் விளைவாக துப்பாக்கி சூடு, குண்டு வெடிப்பு, ஏவுகணை தாக்குதல் போன்ற எரி கற்களை எதிர்கொள்ள வேண்டி வரும். ஆக இறைவனின் நல்வழியை விட்டுவிடுவதன் இறுதி விளைவு சமுதாய சீரழிவும் நாசமும் என்கின்ற நரக வாழ்க்கையே.

25 وَبَشِّرِ الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا
الصّٰلِحٰتِ أَنَّ لَهُمْ جَنّٰتٍ تَجْرِىْ
مِنْ تَحْتِهَا الْأَنْهٰرُ ۖ كُلَّمَا رُزِقُوْا
مِنْهَا مِنْ ثَمَرَةٍ رِّزْقًا ۙ قَالُوْا هٰذَا
الَّذِىْ رُزِقْنَا مِنْ قَبْلُ ۙ وَأُتُوْا بِهٖ
مُتَشَابِهًا ۖ وَلَهُمْ فِيْهَا أَزْوَاجٌ
مُّطَهَّرَةٌ ۙ وَّهُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○

*25. (ஆனால்) நம்பிக்கை கொண்டு நற் கருமங்கள் செய்வோருக்கு நன்மாராயங்கள் கூறுவீராக; சதா ஓடிக் கொண்டிருக்கும் ஆறுகளைக் கொண்ட சுவனச் சோலைகள் அவர்களுக்காக உண்டு; அவர்களுக்கு உண்ண அங்கிருந்து ஏதாவது கனி கொடுக் கப்படும் போதெல்லாம் "இதுவே முன்னரும் நமக்கு (உலகில்) கொடுக்கப்பட்டிருக்கிறது" என்று கூறுவார்கள்; ஆனால் (தோற்றத்தில்) இது போன்றதுதான் (அவர்களுக்கு உலகத் திற்) கொடுக்கப்பட்டிருந்தன; இன்னும், அவர்களுக்கு அங்கு தூய துணைவியரும் உண்டு; மேலும் அவர்கள் அங்கே நிரந்தர மாக வாழ்வார்கள்.*

25. மாறாக இறை வழிகாட்டுதல்களை ஏற்று அதன்படி ஆக்கப்பூர்வமான செயல்களை திறம்பட செய்யும் சமுதாயங்களுக்கு நிரந்தர சந்தோஷங்களும் தாராளமான பொருளாதார வசதிகள் கொண்ட சுவன வாழ்வு ஜீவ நதிபோல் வற்றாமல் கிடைத்துக் கொண்டே இருக்கும். நபியே! இந்த நற்செய்தியை மக்களுக்கு எடுத்துரைப்பீராக. இந்த உலகில் இப்படிப்பட்ட தலைசிறந்த சமுதாயம் இதற்கு முன்னரும் பல முறை அந்தந்த காலக்கட்டங்களில் உருவாகியுள்ளது. (பாரக்க: 24:55, 39:74). அப்படி ஒரு சிறந்த வாழ்க்கை ஏற்படும் போது இது போன்றுதான் இதற்கு முன்னரும் அந்த மக்களுக்கு கொடுக்கப்பட்டிருந்தது என்று சுவனவாசிகள் கூறிக்கொள்வார்கள். இன்னும் தூய உள்ளம் கொண்ட உண்மையான தோழர்களும் அவர்களிடம் வந்து இணைந்துக் கொள்வார்கள். இப்படியாக ஒரு சமுதாயம் எதுவரை இறைக் வழிகாட்டுதலின்படி செயல்படுகிறதோ அது வரை இது போன்று பன்மடங்கு பலன்களை பெற்றுக்கொண்டே இருக்கும்.

26 إِنَّ اللّٰهَ لَا يَسْتَحْىٖٓ أَنْ يَّضْرِبَ
مَثَلًا مَّا بَعُوْضَةً فَمَا فَوْقَهَا ۚ
فَأَمَّا الَّذِيْنَ اٰمَنُوْا فَيَعْلَمُوْنَ أَنَّهُ
الْحَقُّ مِنْ رَّبِّهِمْ ۚ وَأَمَّا الَّذِيْنَ
كَفَرُوْا فَيَقُوْلُوْنَ مَاذَآ أَرَادَ اللّٰهُ
بِهٰذَا مَثَلًا ۘ يُضِلُّ بِهٖ كَثِيْرًا ۙ
وَّيَهْدِىْ بِهٖ كَثِيْرًا ۚ وَمَا يُضِلُّ
بِهٖٓ إِلَّا الْفٰسِقِيْنَ ۙ○

*26. நிச்சயமாக அல்லாஹ் கொசுவையோ, அதிலும் (அற்பத்தில்) மேற்பட்டதையோ உதாரணம் கூறுவதில் வெட்கப்படமாட்டான். (இறை) நம்பிக்கை கொண்டவர்கள் நிச்சயமாக அ(வ்வுதாரண*

26. மேலே சொன்ன வாசகத்தில் தாராள பொருளாதாரத்தைக் குறிக்க சதா ஓடிக்கொண்டிருக்கும் ஜீவநதிகள் என்ற சொற்களால் உவமானமாக கூறப்பட்டுள்ளது. அதேபோல் நிரந்தரமான சந்தோஷங்களையும் சுபிட்சங்களையும் குறிக்க இனிய கனிவர்க்கங்களை தரும் மரங்களாக சித்தரிக்கப்பட்டுள்ளது. காரணம் – மனித சிந்தனைய புலன்களுக்கு எட்டாத உண்மைகளை விளக்க நிச்சயமாக அல்லாஹ் ஒரு சாதாரண கொசுவையோ அல்லது அதைவிட அற்பமானதையோ உதாரணமாக மேற்கோள்காட்டி விளக்குவதில் தயங்குவதில்லை. இறை நம்பிக்கை கொண்டவர்கள் அந்த உதாரணங்கள் அனைத்தும் தம்மை பரிபாலிக்கும் இறைவனிடமிருந்து வந்த உண்மைகளே என்று நம்பி அதன் பின்னனியில் உள்ள உண்மைகளை கண்டறிந்து செயல்பட முயலுவார்கள். ஆனால் இறை நிராகரிப்பவர்கள் அந்த உதாரணங்களின் மூலம் அல்லாஹ் என்ன நாடுகின்றான் என்று எதிர் மறையாக கேள்வி கேட்டு கேலி செய்வார்கள். ஆக ஒரே விஷயத்தை

மான)து தங்கள் இறைவனிடமிருந்து வந்துள்ள உண்மையென்பதை அறிவார்கள்; ஆனால் (இறை நம்பிக்கையற்ற) காஃபிர்களோ, "இவ்வித உதாரணத்தின் மூலம் இறைவன் என்ன நாடுகிறான்?" என்று (ஏளனமாகக்) கூறுகிறார்கள். அவன் இதைக் கொண்டு பலரை வழிகேட்டில் விடுகிறான்; இன்னும் பலரை இதன்மூலம் நல்வழிப் படுத்துகிறான்; ஆனால் தீயவர்களைத் தவிர (வேறு யாரையும்) அவன் அதனால் வழிகேட்டில் ஆக்குவதில்லை.

இருவேறு கோணத்தில் சிந்திக்க முடியும் என்பது புலனாகிறது. இப்படி எதிர்மறையாக சிந்திப்பவர்கள் அல்லாஹ் ஏற்படுத்தியுள்ள நியதியின்படி வழிகேட்டில் சென்றுவிடுகிறார்கள். ஆக்கப் பூர்வமாக சிந்திப்பவர்கள் நல்ல படிப்பினைகள் கிடைத்து வாழ்க்கையின் நேர்வழி பெறுகிறார்கள். ஆக தீய எண்ணங்களைக் கொண்டவர்கள் (∴பாசிக்குகள்) மட்டும்தான் தமக்காக வேறு சட்டங்களை உருவாக்கி தவறான பாதையில் சென்று சீரழிகிறார்கள்.

27 الَّذِيْنَ يَنْقُضُوْنَ عَهْدَ اللّٰهِ مِنْۢ بَعْدِ مِيْثَاقِهٖ ۖ وَيَقْطَعُوْنَ مَآ اَمَرَ اللّٰهُ بِهٖٓ اَنْ يُّوْصَلَ وَيُفْسِدُوْنَ فِى الْاَرْضِ ؕ اُولٰٓئِكَ هُمُ الْخٰسِرُوْنَ ○

27. இ(த் தீய)வர்கள் அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தத்தை, அது உறுதிப்படுத்தப்பட்ட பின்னர் முறித்து விடுகின்றனர். அல்லாஹ் ஒன்றிணைக்கப்பட வேண்டும் என்று கட்டளை இட்டதைத் துண்டித்து விடுவதுடன் பூமியில் குழப்பத்தையும் உண்டாக்குகிறார்கள்; இவர்களே தாம் நஷ்டவாளிகள்.

27. இந்த ∴பாசிக்குகள் யார் என்பதையும் தெரிந்துக்கொள்ளுங்கள். மக்கள் அனைவரும் ஓரினத்தவரே. அதாவது சமஉரிமை பெற்றவர்களே. எனவே சமுதாயத்திலுள்ள எல்லா ஏற்றத் தாழ்வுகளையும் நீக்கி அனைத்து தரப்பு மக்களும் ஓரினத்தவரே என்ற நிலை உருவாக்கி செயல்பட அல்லாஹ்விடம் வாக்குறுதி அளித்தனர் (பாாக்க: 13:21, 25) ஆனால் தாம் எடுத்துக் கொண்ட இந்த மாபெரும் பொறுப்புகளை தட்டிகழிக்கவே வேறு வழிமுறைகளை கையாளுகிறார்கள். இப்படியாக இவர்கள் அல்லாஹ்விடம் ரசூல்கள் மூலமாக செய்துக்கொண்ட ஒப்பந்தத்தை முறித்துவிட்டு தன்னிச்சையாக செயல்படுபவர்களே ∴பாசிக்குகளாகிறார்கள்.

இப்படியாக மக்கள் அனைவரும் ஓரினத்தவரே என்ற மனிதச் சங்கிலியை உடைத்து விட்டு சுயநலம் என்ற அடிப்படையில் வாழ ஆரம்பித்து விடுகிறார்கள்(பார்க்க:2:213, (10:19) இப்படி வாழ்வதால் குழப்பங்கள் ஏற்பட்டு இறுதியில் பெரும் நஷ்டத்திற்கு ஆளாகிறார்கள்.

28 كَيْفَ تَكْفُرُوْنَ بِاللّٰهِ وَكُنْتُمْ اَمْوَاتًا فَاَحْيَاكُمْ ۚ ثُمَّ يُمِيْتُكُمْ ثُمَّ يُحْيِيْكُمْ ثُمَّ اِلَيْهِ تُرْجَعُوْنَ ○

28. நீங்கள் எப்படி அல்லாஹ்வை நம்பு மறுக்கிறீர்கள்? உயிரற்றோராக இருந்த உங்களுக்கு அவனே உயிரூட்டினான்; பின்பு அவன் உங்களை மரிக்கச் செய்வான்; மீண்டும் உங்களை உயிர் பெறச் செய்வான்; இன்னும் நீங்கள் அவன் பக்கமே திருப்பிக் கொண்டுவரப் படுவீர்கள்.

28. நீங்கள் உங்களின் பிறப்பு இறப்பு பற்றி சற்று சிந்தித்துப் பாத்தால் ஒரு உண்மை விளங்கும். அதாவது இதற்கு முன் எதற்கும் தகுதியில்லாத உயிரற்ற நிலையில் இருந்ததை மறுக்க முடியாது. (76:1) அதன்பின் அல்லாஹ்வின் செயல்திட்டத்தின்படி உங்களுக்கு ஒரு வாழ்வு கிடைத்தது. இந்த வாழ்வினை நீங்களே உருவாக்கிக் கொண்ட ஒன்றல்ல. இதன் பின் ஒரு நாள் மரணிக்க இருக்கிறீர்கள். இவ்வளவு செய்யக்கூடிய அல்லாஹ்விற்கு உங்களை மீண்டும் உயிர்ப்பிப்பதில் என்ன சிரமம் இருக்கபோகிறது (37:58), (40:11) & (44:56) ஆக மரணத்தோடு உங்கள் வாழ்வு முடிந்துவிட்டது என்று நினைத்துக் கொள்கிறீர்களா? இல்லை. மரணத்திற்கு பின்பும் வாழ்க்கை தொடர்கிறது. இது அல்லாஹ்வால் நிலைநிறுத்தப்பட்ட சட்டமாகும். இதிலிருந்து யாரும் தப்பமுடியாது. யார் எங்கு எப்படி செயல்பட்டாலும் அவன் உருவாக்கிய சட்டத்தின் வளையத்திற்குள் தான் வர வேண்டியிருக்கும். மேலும் உங்களுடைய ஒவ்வொரு செயலும் அசைவும் அவன் நிர்ணயித்த விளைவுகளை நோக்கியே செல்லும். உண்மை விஷயம் இவ்வாறிருக்க, மக்களே நீங்கள் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை எவ்வாறு நிராகரிக்கிறீர்கள்.

# ஆதம் (மனித இனம்)

29 هُوَ الَّذِىْ خَلَقَ لَكُمْ مَّا فِى الْاَرْضِ جَمِيْعًا ثُمَّ اسْتَوٰٓى اِلَى السَّمَآءِ فَسَوّٰٮهُنَّ سَبْعَ سَمٰوٰتٍ ‌ؕ وَهُوَ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ ‏

*29. அ(வ்விறை)வன் எத்தகையவன் என்றால் அவனே உலகத்திலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்; பின் அவன் வானத்தின் பக்கம் முற்பட்டான்; அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்காக்கினான். அன்றியும் அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கறிபவனாக இருக்கின்றான்.*

29. இந்த வழிகாட்டுதல்கள் அறிவுரைகள் சட்டதிட்டங்கள் உங்கள் அனைவரையும் படைத்து பரிபாலித்து வரும் இறைவனிடமிருந்து வருபவையாகும். உங்களை படைத்ததோடு மட்டுமின்றி நீங்கள் உயிர்வாழத் தேவையான அனைத்து வசதிகளையும் உங்களுக்காக இந்த பூமியில் ஏற்படுத்தியதும் இறைவனே. அதோடு வானங்கள் பலவற்றையும் படைத்து தம் நேரடி கட்டுப்பாட்டிற்குள் செயல்படும்படி வைத்திருக்கும் அல்லாஹ்விடம் அனைத்து படைப்புகளின் செயல்பாடுகளைப் பற்றி நன்கு அறியும் வல்லமை உள்ளது.

அதேபோல் மனித செயல்களுக்கு ஏற்ற விளைவுகள் மிகச்சரியாக ஏற்படும்படி தக்க ஏற்பாடுகள் அந்த ஏக இறைவனால் செய்யப்பட்டுள்ளன( பார்க்க:11:7 & 53:31) வான் மண்டலங்களிலுள்ள படைப்புகளுக்கும் மற்றும் மனித இனத்திற்கும் இடையே உள்ள தொடர்பு மற்றும் மகத்தான அந்தஸ்து ஆகியவைப் பற்றி ஆதமின் படைப்பு என்கின்ற என்ற உவமான கதையின் மூலம் விளக்கப்படுகிறது.

30 وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓٮِٕكَةِ اِنِّىْ جَاعِلٌ فِى الْاَرْضِ خَلِيْفَةً ‌ؕ قَالُوْٓا اَتَجْعَلُ فِيْهَا مَنْ يُّفْسِدُ فِيْهَا وَيَسْفِكُ الدِّمَآءَ ۚ وَنَحْنُ نُسَبِّحُ بِحَمْدِكَ وَنُقَدِّسُ لَـكَ ‌ؕ قَالَ اِنِّىْٓ اَعْلَمُ مَا لَا تَعْلَمُوْنَ‏

(ருகூஉ 4

*30. (நபியே!) இன்னும், உம் இறைவன் வானவர்களை நோக்கி "நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதிநிதியை அமைக்கப் போகிறேன்" என்று கூறிய போது, அவர்கள் "(இறைவா!) நீ அதில் குழப்பத்தை உண்டாக்கி, இரத்தம் சிந்துவோரையா அமைக்கப் போகிறாய்? இன்னும் நாங்களோ உன் புகழ் ஓதியவர்களாக உன்னைத் துதித்து, உன் பரிசுத்தத்தைப் போற்றியவர்களாக இருக்கின்றோம்" என்று கூறினார்கள்; அ(தற்கு இறை)வன் "நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நிச்சயமாக நான் அறிவேன்" எனக் கூறினான்.*

30. அல்லாஹ்வின் மஷீயத் என்னும் செயல் திட்டத்தின்படி இதற்கு முன்னிருந்த படைப்பினத்திற்கு பின்தோன்றலாக (பார்க்க: 15:26-27) மனிதஇன படைப்பு உருவானது. இந்த புதிய படைப்பு உருவாவது பிரபஞ்ச சக்திகளான மலக்குகளுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. ஏனெனில், காலம் காலமாக அல்லாஹ்வின் கட்டளைக்கு மட்டுமே அடிபணிந்து அவனின் செயல்திட்டங்கள் சிறப்பாக நிறைவேற பணியாற்றி வந்தன. மேலும் அந்த செயல்திட்டங்கள் போற்றுதலுக்கு உரியவைகளாக ஆக்குவதில் தீவரமாக செயல்பட்டு வந்தன. ஆனால் இந்த மானிட புதிய படைப்பிற்கு முழு சுதந்திரம் கொடுக்கப்படுவதால் இறைவனின் கட்டளைகளுக்கு மாறு செய்து பூமியில் குழப்பத்தை ஏற்படுத்தி இரத்தம் சிந்தக்கூடிய நிலை ஏற்படுமே என்ற அச்சம் மலக்குகளுக்கு இருந்தது. ஆனால் அல்லாஹ்வின் புதிய செயல்திட்டம் பற்றி அவைகளுக்கு புரியவில்லை. அனைத்தையும் அறியக்கூடிய வல்லமை அல்லாஹ்விற்கு மட்டுமே உள்ளது.

31 وَعَلَّمَ اٰدَمَ الْاَسْمَآءَ كُلَّهَا ثُمَّ عَرَضَهُمْ عَلَى الْمَلٰٓٮِٕكَةِ فَقَالَ اَنْۢبِئُوْنِىْ بِاَسْمَآءِ هٰٓؤُلَآءِ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ‏

*31. இன்னும், (இறைவன்) எல்லாப் (பொருட்களின்) பெயர்களையும் ஆதமுக்கு கற்றுக் கொடுத்தான்; பின் அவற்றை வானவர்கள் முன் எடுத்துக்காட்டி, "நீங்கள் (உங்கள் கூற்றில்) உண்மையாளர்களாயிருப்பின் இவற்றின் பெயர்களை எனக்கு விவரியுங்கள்" என்றான்.*

31. அல்லாஹ்வின் செயல்திட்டத்தின்படி பிரபஞ்சத்திலுள்ள அனைத்து படைப்பினங்களையும் ஆய்வுசெய்து அதன் செயலாக்க முறையை அறிந்துக்கொள்ளும் ஞானம் மனிதனுள் வைக்கப்பட்டது. இதனால் இயற்கை படைப்புகளை தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரும் தகுதி மனிதனுக்கு கிடைத்தது. இந்த தனிப்பெரும் ஞானம் மற்ற எந்த படைப்பினத்திற்கும் கொடுக்கப்படவில்லை. அப்படிப்பட்ட ஆற்றல்கள் மலக்குகளிடம் உள்ளனவா என்று கேட்கப்பட்டது.

32 قَالُوا سُبْحَانَكَ لَا عِلْمَ لَنَا إِلَّا مَا عَلَّمْتَنَا ۖ إِنَّكَ أَنتَ الْعَلِيمُ الْحَكِيمُ ○

*32. அவர்கள் "(இறைவா!) நீயே தூயவன். நீ எங்களுக்குக் கற்றுக்கொடுத்தவை தவிர எதைப்பற்றியும் எங்களுக்கு அறிவு இல்லே. நிச்சயமாக நீயே பேரறிவாளன்; விவேகம் மிக்கோன்" எனக் கூறினர்கள்.*

32. இதற்கு பிரபஞ்ச சக்திகளான மலக்குகள், "இறைவா! நீ தூயவன். உன்னுடைய செயல்திட்டங்கள் யாவும் நமக்கு அளிக்கப்பட்ட ஞானத்திற்கு அப்பாற்பட்டவைகளாகும். நம்மிடமுள்ள ஞானம் நீ கொடுத்த அளவோடு சரி. அதைவிட அதிகமாய் அறிந்துக்கொள்ளும் ஆற்றல் நம்மிடமில்லை. பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு படைப்பைப் பற்றிய முழு ஞானத்தையும் பெற்றவன் நீயே" என்று சிரம்பணிந்தன.

33 قَالَ يَا آدَمُ أَنبِئْهُم بِأَسْمَائِهِمْ ۖ فَلَمَّا أَنبَأَهُم بِأَسْمَائِهِمْ قَالَ أَلَمْ أَقُل لَّكُمْ إِنِّي أَعْلَمُ غَيْبَ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَأَعْلَمُ مَا تُبْدُونَ وَمَا كُنتُمْ تَكْتُمُونَ ○

*33. "ஆதமே! அப் பொருட்களின் பெயர் களே அவர்களுக்கு விவரிப்பீராக!" என்று (இறைவன்) சொன்ஞன்; அவர் அப்பெயர் களே அவர்களுக்கு விவரித்தபோது "நிச்சய மாக நான் வானங்களிலும், பூமியிலும் மறைந்திருப்பவற்றை அறிவேன் என்றும், நீங் கள் வெளிப்படுத்துவதையும், நீங்கள் மறைத் துக் கொண்டிருப்பதையும் நான் அறிவேன் என்றும் உங்களிடம் நான் சொல்லவில்லேயா?" என்று (இறைவன்) கூறினன்.*

33. பிரபஞ்ச படைப்புகளைப் பற்றிய முழுஞானமும் – அவற்றிலுள்ள தன்மைகள், அவற்றை பயன்படுத்திக் கொள்ளும் வழிமுறைகள் மனிதனுள் வளர ஆரம்பித்தன. இறைவன் மலக்குகளை நோக்கி, "நிச்சயமாக அகிலமும் இதில் படைத்துள்ள இன்னும் படைக்க உள்ள அனைத்து படைப்புகளைப் பற்றியும் நாம் அறிவோம். ஆனால் அவற்றுள் மறைந்திருக்கும் ஆற்றல் மற்றும் சக்திகள் பற்றிய ஞானம் உங்களிடம் இல்லை என்பதை நாம் ஏற்கனவே சொல்லவில்லையா?" என்று கேட்டான்.

34 وَإِذْ قُلْنَا لِلْمَلَائِكَةِ اسْجُدُوا لِآدَمَ فَسَجَدُوا إِلَّا إِبْلِيسَ أَبَىٰ وَاسْتَكْبَرَ وَكَانَ مِنَ الْكَافِرِينَ ○

*34. பின்னர் நாம் மலக்குகளே நோக்கி, "ஆதமுக்குப் பணி(ந்து ஸுஜூது செய்)யுங் கள்" என்று சொன்னபோது இப்லீஸைத் தவிர மற்ற அனேவரும் சிரம் பணிந்தனர்; அவன் (இப்லீஸு) மறுத்தான்; ஆணவமும் கொண்டான்; இன்னும் அவன் காஃபிர்களேச் சார்ந்தவனுகி விட்டான்.*

34. இதனடிப்படையில் பிரபஞ்ச சக்திகளான மலக்குகள் (1) மனிதனின் கட்டுப்பாட்டிற்குள் வர ஆரம்பித்தன. இன்றைக்கும் கட்டுபட்டு செயல்படுகின்றன. ஆனால் மனிதனுள் இயங்கி வரும் ஷைத்தானிய குணங்கள் இவனுக்கு கட்டுப்பட மறுத்தன. இன்றைக்கும் மறுத்து வருகின்றன. இந்த ஷைத்தானிய குணம்தான் இறைக் கட்டளைக்கும் மாறுசெய்தது. அதாவது சஜ்தா செய்ய மறுத்தது. இதுதான் மனிதனுள் செயல்பட்டு வரும் மனோஇச்சை என்ற தீய குணமாகும். மனிதன் இந்த மனோஇச்சைக்கு அடிமையாகிவிட்டால் அவனது அறிவு, ஆற்றல்கள் மற்றும் சிந்தனைச் சக்தி மங்கிவிடுகிறது. எவ்வளவு பெரிய சக்தியாக இருந்தாலும் அதை அடக்கியாளும் தகுதி பெற்றவனான மனிதன் தனக்குள் இருக்கும் மனோ இச்சை என்னும் ஷைத்தானுக்கு அடிபணிந்து எதற்கும் இயலாதவனாக ஆகி பல தோல்விகளை சந்தித்துக்கொள்கிறான்.

*இங்கு மலாயிக்கா என்ற அரபிச் சொல்லுக்கு மலக்குகள் என்று மொழி பெயர்க்கப்படுகிறது. ஆனால் இந்த அரபிச் சொல்லின் வேர்ச்சொல்லான அலகுன் என்பதற்கு பொருள் பிரபஞ்ச இயற்கைசக்திகள். அல்லாஹ்வின் ஒவ்வொரு படைப்பும் அதற்கே உரிய சக்திகள் பெற்றவைகளாக இருக்கின்றன. உதாரணத்திற்கு தண்ணீரில் ஹைட்ரோஜன் மற்றும் ஆக்ஸிஜன் ஆகிய இரு சக்திகள் அடங்கியுள்ளன. ஹைட்ரோஜனைப் பயன்படுத்தி அணுசக்தி, மின்சாரம், நீராவி போன்ற பலனுள்ள பொருட்களை உருவாக்கலாம். ஆக்ஸிஜன் இன்றி எந்த உயிரனமும் உயிர் வாழமுடியாது. இதே போல் இறைவனின் ஒவ்வொரு படைப்பைப்பற்றியும் ஆய்வு செய்தால் அவற்றில் ஒன்று அல்லது அதற்கு மேல் பல சக்திகள் அவற்றின் தன்மைகளாக (properties) அடங்கியுள்ளதை பார்க்க முடியும்.*

35 وَقُلْنَا يَآدَمُ اسْكُنْ أَنْتَ وَزَوْجُكَ الْجَنَّةَ وَكُلَا مِنْهَا رَغَدًا حَيْثُ شِئْتُمَا وَلَا تَقْرَبَا هَٰذِهِ الشَّجَرَةَ فَتَكُونَا مِنَ الظَّالِمِينَ ○

*35. மேலும் நாம், "ஆதமே! நீரும் உம் மனைவியும் இச்சுவனபதியில் குடியிருங்கள். மேலும் நீங்கள் இருவரும் விரும்பியவாறு அதிலிருந்து தாராளமாக புசியுங்கள்; ஆனால் நீங்கள் இருவரும் இம்மரத்தை மட்டும் நெருங்க வேண்டாம்; (அப்படிச் செய்தீர்களானால்) நீங்கள் இருவரும் அக்கிரமக்காரர்களில் நின்றும் ஆகிவிடுவீர்கள்" என்று சொன்னோம்.*

35. ஆக இத்தனை ஆற்றல்களை தந்து மனிதனை இறைவன் இந்த உலகை அவன் வாழ்வதற்கு தகுதியான இடமாக அமைத்துக் கொடுத்தான். மனிதனுடைய ஆரம்பக்கால வாழக்கையில் அனைத்து வசதிகளும் தாராளமாக கிடைத்துக் கொண்டு இருந்தன (பார்க்க: 20 : 118-119). எனவே அக்கால மனித வாழ்வில் அவர்களுக்கிடையே போட்டி பொறாமை, சண்டை, சச்சரவு, கருத்து வேற்றுமை எதுவும் இருந்ததில்லை(பார்க்க: 2:213 & 10:19). ஆக. " மனித இனமே! நீ உன் மனைவி மக்களுடன் இச்சுவனத்தில் தாராளமாக உண்டு மகிழு. ஆனால் உங்களுக்கிடையே குலம் கோத்திரம் உயர்வு தாழ்வு என்ற அடிப்படையில் பிரிவினையை (ஷஜரா) ஏற்படுத்திக்கொள்ளாதீர்கள். அவ்வாறு உருவாக்கிக் கொண்டால் உங்களுக்கிடையே பகைமை வளர்ந்து ஒருவருக்கு ஒருவர் அநியாயம் செய்ய ஆரம்பித்து விடுவீர்கள். இதனால் இப்போது நீங்கள் வாழ்ந்துக் கொண்டிருக்கும் இந்த சுவன வாழ்க்கை பறிபோயிவிடும். நீங்கள் உங்களுடைய அத்தியாவசிய தேவைகளை கூட நிறைவேற்றிக்கொள்ள மிகவும் சிரமப்பட வேண்டியிருக்கும் (பார்க்க: 20:124)" என்று இறைவன் புறத்திலிருந்து எச்சரிக்கை செய்யப்பட்டது.

36 فَأَزَلَّهُمَا الشَّيْطَانُ عَنْهَا فَأَخْرَجَهُمَا مِمَّا كَانَا فِيهِ ۖ وَقُلْنَا اهْبِطُوا بَعْضُكُمْ لِبَعْضٍ عَدُوٌّ ۖ وَلَكُمْ فِي الْأَرْضِ مُسْتَقَرٌّ وَمَتَاعٌ إِلَىٰ حِينٍ ○

*36. இதன்பின், ஷைத்தான் அவர்கள் இருவரையும் அதிலிருந்து வழி தவறச் செய்தான்; அவர்கள் இருவரும் இருந்த(சொர்க்கத்)திலிருந்து வெளியேறுமாறு செய்தான்; இன்னும் நாம், "நீங்கள் (யாவரும் இங்கிருந்து) இறங்குங்கள்; உங்களில் சிலர் சிலருக்கு பகைவராக இருப்பீர்கள்; பூமியில் ஒரு குறிப்பிட்ட காலம் வரை உங்களுக்குத் தங்குமிடமும் அனுபவிக்கும் பொருள்களும் உண்டு" என்று கூறினோம்.*

36. ஆனால் இறைவனின் எச்சரிக்கையை மறந்து (பார்க்க: 20:115) காலப்போக்கில் ஷைத்தானிய சுயநலப்போக்கு வளர்ந்துவிடவே மனிதன் சுயமாக வாழ்க்கை முறைகளை உருவாக்கி வாழ ஆரம்பித்தான். இதனால் குலம் கோத்திரம் உயர்வு தாழ்வு என்ற நிலை உருவாகி விரோதம் குரோதம் ஏற்பட்டு மனிதன் பல பிரிவுகளாக பிரிந்து போனான். ஒவ்வொரு பிரிவும் மற்ற பிரிவுகளின் எதிரிகளாகிவிட்டனர். இதனால் மனிதனுக்கு இவ்வுலகில் கிடைத்த சுவன வாழ்வு பறிபோய், உயர்ந்த நிலையிலிருந்து மிகவும் தாழ்ந்த நிலைக்கு இறங்கிவிட்டான்.

இருப்பினும் மனித வாழ்க்கை என்பது ஒரு குறிப்பிட்ட காலம் வரை நீடிக்க வேண்டும் என்பது இறைவனின் (மஷீயத் என்னும்) செயல் திட்டமாகும். ஆகவே அவனுக்கு தேவையான வாழ்வாதாரங்களும் வசதிகளும் இறைவன் புறத்திலிருந்து கிடைக்கின்றன. ஆனால் மனிதனுக்கு கிடைத்து வந்த அந்த உயர்வும் அந்தஸ்தும் பறிபோய்விட்டது.

37 فَتَلَقَّىٰ آدَمُ مِنْ رَبِّهِ كَلِمَاتٍ فَتَابَ عَلَيْهِ ۚ إِنَّهُ هُوَ التَّوَّابُ الرَّحِيمُ ○

*37. பின்னர் ஆதம் தம் இறைவனிடமிருந்து சில வாக்குகளைக் கற்றுக் கொண்டார்; (இன்னும், அவற்றின் மூலமாக இறைவனிடம் மன்னிப்புக்கோரினார்;) எனவே இறைவன் அவரை மன்னித்தான்; நிச்சயமாக அவன் மிக மன்னிப்போனும், கருணையாளனும் ஆவான்.*

37. மனிதன் தன் கரங்களால் ஏற்படுத்திக் கொண்ட சிக்கல்களுக்கு தீர்வு உண்டு. ஆனால் அது மனிதனுடைய அறிவுப் புலன்களுக்கு அப்பாற்பட்டவையாக இருக்கிறது. ஏனெனில் மனித அறிவு தம் வரை பாதுகாப்பு பற்றிய வழிமுறைகளை மட்டுமே வகுத்துத்தரும். ஆனால் முழு மனிதஇனத்தின் சுமூகமான வாழ்க்கைக்கு தீர்வு காண முடியாது. மனித பிரச்சனைகளுக்கு தீர்வு இறைவன் புறத்திலிருந்து வஹீ என்னும் வழிகாட்டுதல்கள் மூலம் மட்டுமே கிடைக்கும். மனித வாழ்க்கைக்கான இந்த வழிகாட்டுதலை எந்த சமுதாயம் பின்பற்றுமோ

அது தம் பிரச்சனைகள் தீர்ந்து, பறிபோன சுவனம் **(Paradise Lost)** மீண்டும் கிடைக்கும்.

38 قُلْنَا اهْبِطُوْا مِنْهَا جَمِيْعًا ۚ فَاِمَّا يَاْتِيَنَّكُمْ مِّنِّيْ هُدًى فَمَنْ تَبِعَ هُدَايَ فَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ ○

38. (பின்பு, நாம் சொன்னோம்: "நீங்கள் அனைவரும் இவ்விடத்தை விட்டும் இறங்கி விடுங்கள்; என்னிடமிருந்து உங்களுக்கு நிச்சயமாக நல்வழி(யைக் காட்டும் அறவுரைகள்) வரும்போது, யார் என்னுடைய (அவ்) வழியைப் பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு எத்தகைய பயமும் இல்லை, அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்."

38. ஆக மனிதனுக்கு அளிக்கப்பட்டிருந்த சுவன வாழ்க்கை பறிபோயிவிட்டது என்று கவலைப்பட தேவையில்லை. அதை மீண்டும் மீட்டு தருவதற்கு இறைவன் புறத்திலிருந்து செயல்திட்டம் உள்ளது. அதுதான் இறை வழிகாட்டுதல்கள் என்பதாகும். அவற்றை இறைத்தூதர்கள் மூலமாக மனிதனுக்கு அளிக்கப்படுகிறது (பாாக்க: 7:35) ஆக எந்த சமுதாயம் இறைவன் வகுத்துத்தந்துள்ள வழிகாட்டுதலை பின்பற்றுகிறதோ அது தம் வாழ்வில் பயம் நீங்கி சுகமான நிம்மதியான சுவனவாழ்வு கிடைக்கும். அவர்களிடமுள்ள துன்பங்களும் துயரங்களும் நீங்கும் என்று சொல்லப்பட்டது.

39 وَالَّذِيْنَ كَفَرُوْا وَكَذَّبُوْا بِاٰيٰتِنَآ اُولٰٓئِكَ اَصْحٰبُ النَّارِ ۚ هُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○

39. அன்றி யார் (இதை ஏற்க) மறுத்து, நம் அத்தாட்சிகளை பொய்ப்பிக்க முற்படுகிறார்களோ அவர்கள் நரக வாசிகள்; அவர்கள் அ(ந் நரகத்)தில் என்றென்றும் தங்கி இருப்பர்.

39. எந்த சமுதாயம் அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை ஏற்க மறுத்து அதை பொய்யாக்குமோ அது மீளா நரக வேதனைக்கு ஆளாகும். அதாவது அதன் நிகழ்கால வாழ்வும் வருங்கால வாழ்வும் துயர்மிக்கதாய் அமையும்.

படிப்பினைகள் :

*1. மேலே வரும் 30 லிருந்து 36 வரையில் உள்ள வசனங்களின் நேரடி மொழிபெயர்ப்பை கவனிக்கும் போது இந்த சம்பவம் ஏதோ ஒரு நாளில் நடந்து முடிந்ததுப் போல் எண்ணத் தோன்றும். ஆனால் அல்லாஹ்வை பொறுத்தவரையில் அவனது ஒரு நாள் என்பது நம் கணக்குப்படி ஐம்பதாயிரம் வருடங்களாகும் (பார்க்க: 70 : 4) மேலும் மனித படைப்பு பற்றி மலக்குகளிடம் அல்லாஹ் கலந்து ஆலோசிப்பது போல் உள்ளது. ஆனால் அல்லாஹ்வைப் பொருத்தவரையில் எப்போதும் தான் நாடியதைச் செய்யக்கூடியவன். தன்னுடைய செயல்திட்டங்களில் யாரையும் கலந்து கூட்டாக்கிக் கொள்வதில்லை.(பாாக்க: 18 : 26). மனிதன் தன் நிலைப்பற்றி சரியாகப் புரிந்துக்கொள்ள வேண்டும் என்பதற்காகவே இந்த வசனங்கள் உரையாடல் வடிவில் உவமானம் முறையில் குர்ஆனில் இடம் பெற்றுள்ளன என்பதுதான் உண்மை நிலை.*

*2. (மலக்குகள்) பிரபஞ்ச இயற்கைசக்திகள் மனித கட்டுப்பாட்டிற்குள் வரக் கூடியவையே. அறிவாற்றல் மற்றும் ஆராய்ச்சிகளால் அந்த சக்திகளை மனிதன் தம் வசப்படுத்தி பயன்படுத்திக் கொள்ளமுடியும்.*

*3. அல்லாஹ்வின் படைப்புகள் என்பது வானம் பூமியிலுள்ள எண்ணற்ற படைப்புகள், பிரபஞ்ச சக்திகள், உயிரினங்கள் மற்றும் மனித இனம் ஆகியவை அடங்கும். அந்த படைப்பினங்களில் மனிதனுக்கு மட்டும் அளிக்கப்பட்ட தனிச்சிறப்பு 'சுய அதிகாரம், சுதந்திரம்' மற்றும் அனைத்தையும் தெரிந்துக் கொள்ளும் ஆற்றல் (கல்வி) என்பதாகும். அதாவது மனிதனும் தான் நாடியதை செய்யக்கூடியவனாக இருக்கிறான். (பாாக்க: 18:29)*

*4. மனிதனின் கட்டளைக்கு அடிபணிந்து செயல்படும் பிரபஞ்ச சக்திகள் ஒருபுறம். அதே சமயம் மனிதனை ஆட்டி படைக்கும் மனித சரீரத்தில் இயங்கி வரும் மனோஇச்சை என்னும் சைத்தானிய குணங்கள் மறுபுறம். மனிதன் பிரபஞ்ச சக்திகளை தம் கட்டுப்பாடடிற்குள் கொண்டு வந்து அல்லாஹ்வின் கட்டளைக்கு இணங்கி செயல்பட்டு நிரந்ர சந்தோஷங்களைப் பெற்று சீரும் சிறப்புமாக வாழ விரும்புகின்றானா அல்லது ஷைத்தானிய மனோ இச்சைக்கு அடிபணிந்து அழிவைத் தேடிக்கொள்கின்றானா என்பதுதான் மனிதன் முன் உள்ள கேள்வி. மனிதன் எடுக்கும் எந்த தீர்மானத்திலும் அல்லாஹ்வின் தலையீடு இருப்பதில்லை. ஆனால் அவன் எடுக்கும் தீர்மானத்தின்படி செயல்படும்போது அதனால் ஏற்படும் விளைவுகள் அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயல்களுக்கு ஏற்ற விளைவுகள் என்ற நியதிப்படிதான் ஏற்படும். அந்த விளைவுகளை இவ்வுலகிலும்*

*மரணத்திற்குப்பின் வரவிருக்கின்ற மறுமை வாழ்விலும் அவன் நிச்சயம் சந்திக்க வேண்டிவரும். இதிலிருந்து அவன் தப்பவே முடியாது.*

*5. மனிதன் சதா சுவனத்தில் வாழ வேண்டும் என்பதுதான் அல்லாஹ்வின் நாட்டம். சுவனம் என்பது பிரச்சனையற்ற நிம்மதியான சந்தோஷங்களைக் கொண்ட வாழ்க்கை. இது தனி நபர் முயற்சியினால் மட்டும் கிடைக்காது. கூட்டு வாழ்க்கை முறையினால்தான் முடியும். சமூக கூட்டு வாழ்க்கை முறையில் பெண்களுக்கும் சமபங்கு உண்டு. எனவே ஆதமும் அவரது மனைவியும் (ஆண், பெண்) ஆகிய இருவரும் இறைக்கட்டளைக்கு மாறு செய்ததனால் அவர்களின் சுவனவாழ்வு பறிபோயிவிட்டதாக குறிப்பிடப்பட்டுள்ளது.(பாாக்க : 2:36)*

*6. இழந்துவிட்ட சுவனத்தை மீண்டும் பெற மனிதர்கள் அனைவரும் ஒருங்கிணைந்து இறைச்சட்டத்திற்கு உட்பட்டு வாழ முயற்சி மேற்கொள்ள வேண்டும். மரக்கிளைகள் போல் பிரிந்து, குலம் கோத்திரம், தொழில் ரீதியான உயர்வு தாழ்வு என்ற அடிப்படையில் பிரிவினை (ஷஜராவை) ஏற்படுத்திக்கொண்டால் சுவனம் நிச்சயமாக கிடைக்காது.*

***7. ஆதமுக்கு (மனிதனுக்கு) பிரபஞ்ச இயற்கை சக்திகளை அடக்கியாளும் அந்தஸ்து தரப்பட்டுள்ளது. இவன் பிரபஞ்ச சக்கதிகளுக்கு அடிமை அல்ல. பிரபஞ்ச சக்திகள்தான் இவனுக்கு அடிமைகளாக இருக்கின்றன. தன்னுடைய இந்த உயர் அந்தஸ்தை சிந்திக்காத மனிதனை என்னவென்று சொல்வது?***

(குர்ஆன் இறக்கியருளப்படும் காலகட்டத்தில் அரேபிய தீபகண்டத்தில் பனி இஸ்ராயீலர்கள் என்ற சமுதாயம் வாழ்ந்துக் கொண்டிருந்தது. இவர்கள் இறை வழிகாட்டுதலை எதிர்ப்பதில் முன்னோடியாக இருந்தனர். (2:41) எனவே இவர்களை நோக்கி இனி வரும் வசனங்கள் பேசுகிறது. )

40 يٰبَنِيٓ اِسۡرَآءِيۡلَ اذۡكُرُوۡا نِعۡمَتِيَ الَّتِيۡٓ اَنۡعَمۡتُ عَلَيۡكُمۡ وَاَوۡفُوۡا بِعَهۡدِيۡٓ اُوۡفِ بِعَهۡدِكُمۡ وَاِيَّايَ فَارۡهَبُوۡنِ ○

ருகூஃ 5

*40. இஸ்ராயீலின் சந்ததியினரே! நான் உங்களுக்கு அளித்த என்னுடைய அருட்கொடையை நினைவு கூருங்கள்; நீங்கள் என் வாக்குறுதியை நிறைவேற்றுங்கள்; நான் உங்கள் வாக்குறுதியை நிறைவேற்றுவேன்; மேலும், நீங்கள் (வேறெவருக்கும் அஞ்சாது) எனக்கே அஞ்சுவீர்களாக.*

40. "அனைத்து தரப்பு மக்களும் ஒன்றுபட்டு ஒற்றுமையுடன் வாழ வேண்டும் என்ற இறைவனுடன் செய்துக்கொண்ட ஒப்பந்தத்தை (பார்க்க:2:27) நிறைவேற்றி வந்தகாலமெல்லாம் உங்களுக்கு இறைவன் புறத்திலிருந்து கிடைத்துக் கொண்டிருந்த அருட்கொடைகள் பற்றி எண்ணிப்பாருங்கள். இஸ்ரவேலர்களே! உங்களுக்கு தாராள பொருளாதார வசதி மற்றும் தலைசிறந்த ஆட்சி அதிகாரம் வழங்கப்பட்டது (பார்க்க: 2:47). நீங்களும் அவற்றை நன்றாக அனுபவித்து வந்தீர்கள். அதன் பின் காலப்போக்கில் நீங்கள் இறைக் கட்டளைகளை புறந்தள்ளிவிட்டீர்கள். இதனால் வறுமையும் இழிவும் உங்களை பீடித்துக் கொண்டது. இஸ்ரவேலர்களே! இழந்து விட்ட அந்த சிறந்த வாழ்க்கை வசதிகளைப் மீண்டும் பெற விரும்பினால் நீங்கள் இறைக் கட்டளைக்கு அடிபணிந்து வாழ முன்வாருங்கள். அப்போது உங்களுக்கு இறைவனால் அளிக்கப்பட்ட வாக்குறுதி (பாாக்க: 24:55) நிறைவேற்றப்படும்."

41 وَاٰمِنُوۡا بِمَآ اَنۡزَلۡتُ مُصَدِّقًا لِّمَا مَعَكُمۡ وَلَا تَكُوۡنُوۡٓا اَوَّلَ كَافِرٍۢ بِهٖ وَلَا تَشۡتَرُوۡا بِاٰيٰتِىۡ ثَمَنًا قَلِيۡلًا وَاِيَّاىَ فَاتَّقُوۡنِ ○

*41. இன்னும் நான் இறக்கிய (வேதத்)தை நம்புங்கள்; இது, உங்களிடம் உள்ள (வேதத்)தை மெய்ப்பிக்கின்றது; நீங்கள் அதை (ஏற்க) மறுப்பவர்களில் முதன்மையானவர்களாக வேண்டாம்; மேலும் என் திரு வசனங்களைச் சொற்ப விலைக்கு விற்று விடாதீர்கள்; இன்னும் எனக்கே நீங்கள் அஞ்சி (ஒழுகி) வருவீர்களாக.*

41. " இதற்காக நீங்கள் இந்த வழிகாட்டுதல்களை (குர்ஆனை) மனதார ஏற்று செயல்பட முன் வாருங்கள். ஏனென்றால் இப்போது உங்களிடமுள்ள வேதத்தில் உண்மையானவை எவை என்பதை இந்த குர்ஆன் எடுத்துரைக்கிறது. இந்த உண்மையை நீங்கள் அறிந்துக் கொண்டதும் அதை ஏற்று செயல்பட்டிருக்க வேண்டும். ஆனால் நீங்களோ இதை மறுத்து எதிர்ப்போரில் மற்றவர்களைவிட முன்னொடியாக இருக்கிறீர்கள். நீங்களே உருவாக்கிக் கொண்ட சடங்கு, சம்பிரதாயங்களை வைத்துக் கொண்டு குறுகிய கால அற்ப

ஆதாயங்களை பெற்று வருகிறீர்கள். இதற்காக இறைக் கட்டளைகளை பகரமாக ஆக்குகிறீர்கள். அவ்வாறு செய்வதனால் ஏற்படும் பயங்கர விளைவுகளை எண்ணி பாரக்க மறந்துவிட்டீர்கள். இறைவன் ஏற்படுத்தியுள்ள இந்த விளைவுகளுக்கு அஞ்சிக்கொள்ளுங்கள்."

42 وَلَا تَلْبِسُوا الْحَقَّ بِالْبَاطِلِ وَتَكْتُمُوا الْحَقَّ وَأَنْتُمْ تَعْلَمُونَ

42. நீங்கள் அறிந்து கொண்டே உண்மையைப் பொய்யுடன் கலக்காதீர்கள்; உண்மையை மறைக்கவும் செய்யாதீர்கள்.

42. "மேலும் உண்மை விஷயங்கள் மக்கள் முன் வராதபடி நீங்கள் மூடி மறைத்து வருகிறீர்கள் (பாரக்க: 2:159). மேலும் உண்மை விஷயங்களோடு நீங்களே உருவாக்கிய சடங்கு சம்பிரதாயங்களையும் கற்பனை கதைகளையும் கலந்து உண்மை விஷயம் போன்று மக்களிடம் கூறி வருகிறீர்கள். உங்கள் சுய இலாபத்திற்காக இவ்வாறு உண்மைகளை மறைக்காதீர்கள்."

43 وَأَقِيمُوا الصَّلَوٰةَ وَآتُوا الزَّكَوٰةَ وَارْكَعُوا مَعَ الرَّاكِعِينَ

43. தொழுகையைக் கடைப் பிடியுங்கள; ஜகாத்தையும் (ஒழுங்காகக்) கொடுத்து வாருங் கள்; ருகூஃ செய்வோரோடு சேர்ந்து நீங்களும் ருகூஃ செய்யுங்கள்.

43. " நீங்கள் உங்களுடைய இந்த தவறான போக்கை விட்டுவிடுங்கள். இந்த குர்ஆனை உங்கள் வாழ்வின் வழிகாட்டியாகக் கொண்டு உங்கள் வாழ்க்கையை சீரமைத்துக் கொள்ளுங்கள். இதன் அடிப்படையில் சலாத்தை நிலை நாட்டுங்கள். அதாவது ஒட்டு மனித குலம் வளம் பெற இறை வழிகாட்டுதலின்படி சமூக அமைப்பை ஏற்படுத்துங்கள். மேலும் ஒட்டுமொத்த மனிதஇனத்தின் வாழ்க்கை வளம் பெருக உங்கள் செல்வங்களை (ஜகாத்) (பார்க்க: 2:219) வழங்குங்கள். இவ்வாறாக அல்லாஹ்வின் சட்ட திட்டங்களை மனதார ஏற்றுக் கொண்டு செயல்படுபவர்களோடு சேர்ந்து (ருக்கூ) நீங்களும் செயலாற்றுங்கள்". (பார்க்க: 9:119)

44 أَتَأْمُرُونَ النَّاسَ بِالْبِرِّ وَتَنْسَوْنَ أَنْفُسَكُمْ وَأَنْتُمْ تَتْلُونَ الْكِتَابَ ۚ أَفَلَا تَعْقِلُونَ

44. நீங்கள் வேதத்தையும் ஓதிக் கொண்டே, (மற்ற) மனிதர்களை நன்மை செய்யுமாறு ஏவி, தங்களையே மறந்து விடுகிறீர்களா? நீங்கள் சிந்தித்துப் புரிந்து கொள்ள வேண்டாமா?

44. "வேதத்திலுள்ள உண்மைகளை மறைத்தல், உண்மைக்கு முரணான விஷயங்களை கலந்துவிடுதல் போன்ற தவறான செயல்களால் உங்கள் சொல்லிலும் செயலிலும் அநேக முரண்பாடுகள் தோன்றுகின்றன. இதனால் பொறுப்புகளை தட்டிக்கழிக்கும் பழக்கங்களும் உங்களிடம் வளர்ந்துள்ளன. நீங்கள் மக்களிடம் தாராள மனப்பான்மையுடன் நன்மையான காரியங்களை செய்யும்படி அறிவுறுத்தி வருகிறீர்கள். ஆனால் அப்படிப்பட்ட காரியங்கள் உங்கள் பொறுப்பில் வரும்போது அவற்றை தட்டி கழிக்கிறீர்கள். அதே சமயம் நாங்கள்தாம் வேதமுடையவர்கள் என்றும் பறைசாற்றிக் கொள்கிறீர்கள். இப்படிப்பட்ட இரட்டைவேடப் போக்கை கடைபிடிக்கக் உங்கள் வேதம் உங்களுக்கு கற்றுத் தருகிறதா? இதை நீங்கள் சிந்தித்து பார்க்க வேண்டாமா?"

45 وَاسْتَعِينُوا بِالصَّبْرِ وَالصَّلَوٰةِ ۚ وَإِنَّهَا لَكَبِيرَةٌ إِلَّا عَلَى الْخَاشِعِينَ

45. "நீங்கள் மனஉறுதியோடு விடாமுயற்சியுடன் இறைச்செயல் திட்டங்களுடன் ஒருங்கிணைந்து செயல்பட்டால் தான் உங்களுடைய சிந்தனை மற்றும் ஆற்றல்கள் சரியான அளவில் வளர்ந்து உங்கள் சமுதாயத்தில் சமச்சீர் நிலை ஏற்படும். (பார்க்க: 2:153) பிறர் உழைப்பில் உண்டு கொழுக்கும் பழக்கமுடையவர்களுக்கு இது

45. மேலும் பொறுமையைக் கொண்டும், தொழுகையைக் கொண்டும் (அல்லாஹ்விடம்) உதவிதேடுங்கள்; எனினும், நிச்சயமாக இது உள்ளச்சம் உடையோர்க்கன்றி மற்றவர்களுக் குப் பெரும் பாரமாகவேயிருக்கும்.

கடினமாகத்தான் இருக்கும்.(பார்க்க: 70:17-27), உண்மை யாதெனில் அல்லாஹ்விற்கு அஞ்சி அடிபணிந்து நடப்போரைத் தவிர மற்றவர்களுக்கு இது பெரும் பாரமாகவே இருக்கும்.''

46 الَّذِينَ يَظُنُّونَ أَنَّهُم مُّلَاقُوا رَبِّهِمْ وَأَنَّهُمْ إِلَيْهِ رَاجِعُونَ ۝

46. (உள்ளச்சமுடைய) அவர்கள் தாம, "திடமாக (தாம்) தங்கள் இறைவனைச் சந் திப்போம்; நிச்சயமாக அவனிடமே தாம் திரும்பச்செல்வோம்" என்பதை உறுதியாகக் கருத்தில் கொண்டோராவர்.

46. " இறைவனின் இந்த வழிகாட்டுதல்களை விட்டுவிட்டு வேறு எந்த வழிமுறையினாலும் உங்கள் சமுதாயத்தில் சமச்சீர்நிலை கொண்டுவரவே முடியாது. மாறாக சமூக சீர்கேடுகள்தான் பெருகும். ஏனெனில் உங்களின் ஒவ்வொரு செயலும் அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைகள் என்ற இலக்கை நோக்கியே செல்கிறது. எனவே இதைப்பற்றி சிந்திப்பீர்களானால் உங்களுடைய தவறான போக்கினை விட்டுவிட்டு இறைக்கட்டளைக்கு இணங்கி வருவீர்கள்.''

47 يَا بَنِي إِسْرَائِيلَ اذْكُرُوا نِعْمَتِيَ الَّتِي أَنْعَمْتُ عَلَيْكُمْ وَأَنِّي فَضَّلْتُكُمْ عَلَى الْعَالَمِينَ ۝

ருகூஉ 6

47. இஸ்ராயீல் மக்களே! (முன்னர்) நான் உங்களுக்கு அளித்த என்னுடைய அருட் கொடையையும், உலகோர் யாவரை யும் விட உங்களை மேன்மைப்படுத்தினேன் என்பதையும் நினைவு கூருங்கள்.

47. "இஸ்ரவேலர்களே! இறைவன் வகுத்துள்ள செயல் திட்டங்களின்படி செயல்படுவதால் ஏற்படும் நன்மைகளைப் பற்றி உங்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை. காரணம் நீங்கள் ஆண்டு அனுபவித்த வரலாற்றுச் சான்றுகளே உங்களிடம் உள்ளன. அக்காலத்தில் உலகில் வாழ்ந்த மற்ற சமுதாயங்களை விட நீங்கள் எல்லா விதத்திலும் மேன்மை பெற்று திகழ்ந்தீர்கள். மேலும் உங்களுக்கு நிகராக வேறு எந்த சமுதாயமும் அக்காலத்தில் மேன்மை பெற்றிருக்கவில்லை" (பார்க்க: 2:122)

48 وَاتَّقُوا يَوْمًا لَّا تَجْزِي نَفْسٌ عَن نَّفْسٍ شَيْئًا وَلَا يُقْبَلُ مِنْهَا شَفَاعَةٌ وَلَا يُؤْخَذُ مِنْهَا عَدْلٌ وَلَا هُمْ يُنصَرُونَ ۝

48. இன்னும், ஓர் ஆத்மா மற்றோர் ஆத்மாவிற்குச் சிறிதும் பயன்பட முடியாதே (அந்த) ஒரு நாளை நீங்கள் அஞ்சி நடப்பீர் களாக! (அந்த நாளில்) எந்தப் பரிந்துரை யும் அதற்காக ஏற்றுக் கொள்ளப்பட மாட் டாது; அதற்காக எந்தப் பதிலீடும் பெற்றுக் கொள்ளப்பட மாட்டாது; அன்றியும் (பாவம் செய்த) அவர்கள் உதவி செய்யப் படவும் மாட்டார்கள்.

48. "ஆனால் நீங்கள் பிற்காலத்தில் இறை வழிகாட்டுதல்களை விட்டுவிட்டீர்கள். அதனால் உங்கள் சமுதாயத்தில் சட்டம் ஒழுங்கு சீரழிந்துவிட்டது. அதை சீரமைக்கும் எண்ணமும் உங்களிடம் இல்லாமல் போய்விட்டது. உங்களுடைய இந்த போக்கு இனியும் நீடிக்காது. இப்போது குர்ஆனிய ஆட்சி முறை ஏற்பட்டுவிட்டது. இனி குற்றம் செய்யும் எந்த குற்றவாளியும் தண்டனையிலிருந்து தப்பிவிட முடியாது. ஒருவன் செய்யும் குற்றம், மற்றவன் மேல் சுமத்தி தப்பிக்கமுடியாது. (பார்க்க: 6:164) குற்றவாளிகள் யாருடைய பரிந்துரையின் பேரிலும் தப்பிச் செல்லவும் முடியாது. லஞ்சமாக காசு பணம் பெற்றுக் கொண்டு குற்றவாளிக்கு ஆதரவாக செயல்படுவது இனி ஒரு போதும் நடக்காது.'' குர்ஆனிய ஆட்சி முறையின்படி இவ்வுலகிலும் அல்லாஹ்வின் செயல்திட்டத்தின்படி மறுவுலகிலும் இதே சட்டம்தான் நடைமுறையில் இருக்கும்.

49 وَإِذْ نَجَّيْنَاكُم مِّنْ آلِ فِرْعَوْنَ يَسُومُونَكُمْ سُوءَ الْعَذَابِ يُذَبِّحُونَ أَبْنَاءَكُمْ وَيَسْتَحْيُونَ نِسَاءَكُمْ ۚ وَفِي ذَٰلِكُم بَلَاءٌ مِّن رَّبِّكُمْ عَظِيمٌ ۝

49. " உங்கள் நாட்டில் ∴பிர்அவுன் மன்னர்கள் ஆண்டு வந்த காலத்தில் நீங்கள் அடிமைகளாக ஆக்கப்பட்டு கேவலமான வாழ்க்கை வாழ்ந்த அந்த கசப்பான அனுபவம் உங்கள் நினைவிலிந்து நீங்கி இருக்காது. நீங்கள் அவர்களுடைய ஆட்சியில் கடுமையான பல சித்தரவதைகளுக்கு ஆளானீர்கள். உங்களுக்குள் பலப்

49. உங்களைக் கடுமையாக வேதனைப் படுத்தி வந்த ஃபிர்அவ்னின் கூட்டத்தாரிடமிருந்து உங்களை நாம் விடுவித்ததையும் (நினைவு கூருங்கள்); அவர்கள் உங்கள் ஆண் மக்களைக் கொன்று, உங்கள் பெண்மக்களை (மட்டும்) வாழவிட்டிருந்தார்கள்; அதில் உங்களுக்கு உங்கள் இறைவனிடமிருந்து ஒரு பெரும் சோதனை இருந்தது.

பிரிவினைகளை உண்டாக்கி உங்கள் மத்தியில் பகைமையை ஏற்படுத்தி உங்களை பலவீனப்படுத்தி வைத்திருந்தார்கள் (பார்க்க: 28:4). உங்களில் உயர்வும் கண்ணியமும் வீரமும் கொண்டவர்களால் எங்கே தங்களுக்கு ஆபத்து ஏற்படுமோ என்று அஞ்சி இப்படிப்பட்ட ஆண்மக்களை இழிவுபடுத்தி வைத்திருந்தார்கள். (பார்க்க: 27:34). குறிப்பாக மூசா நபி மீது ஈமான் கொண்டவர்களை இவ்வாறு செய்தார்கள். (பார்க்க: 40:25) ஆனால் வீரமற்ற கோழைகளை தம்முடன் சேர்த்துக் கொண்டார்கள். இப்படியாக ஒட்டு மொத்த சமுதாயம் நாளுக்கு நாள் பலவீனமானது. (பார்க்க: 28:5). இப்படியாக நீங்கள் மிக மோசமான நிலமையில் இருந்தீர்கள். அதன் பின் மூசா நபி வந்தார்கள். இறைச்சட்டங்களை மக்கள் மத்தியில் பரப்ப நீங்கள் அவற்றை பின்பற்ற ஆரம்பித்தீர்கள். இதனால் நீங்கள் ∴பிர்அவுனின் வேதனையிலிருந்து காப்பாற்றப்பட்டீர்கள். உங்களுக்கு அடிமை விலங்கிலிருந்து விடுதலை கிடைத்தது. சுதந்திர பிரஜைகளாக வாழும் பாக்கியமும் கிடைத்தது. (பார்க்க: 7:149)

50 وَاِذْ فَرَقْنَا بِكُمُ الْبَحْرَ فَاَنْجَيْنٰكُمْ وَاَغْرَقْنَآ اٰلَ فِرْعَوْنَ وَاَنْتُمْ تَنْظُرُوْنَ○

50. மேலும் உங்களுக்காக நாம் கடலைப பிளந்து, உங்களை நாம் காப்பாற்றி, நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே ஃபிர்அவ்னின் கூட்டத்தாரை அதில் மூழ்கடித்தோம் (என்பதையும் நினைவு கூருங்கள்).

50. மேலும் ∴பிர்அவுனுடன் வாக்குவாதம் மற்றும் மோதலுக்குப் பின் உங்கள் நாடான எகிப்து நாட்டை விட்டு வெளியேறும் நேரம் வந்தது. ∴பிர்அவுனும் அவனுடைய படையினரும் உங்களை துரத்திக்கொண்டு பின் தொடர்ந்து வந்தனர். நீங்கள் எகிப்திய நாட்டின் எல்லையை கடக்க கடற்கரையை அடைந்த போது ∴பிர்அவுனுடைய படை உங்களை நெருங்கி வந்துக் கொண்டிருந்தது. இறைவனின் வழிகாட்டுதலின்படி ஆழம் குறைந்த வழித்தடத்தை கண்டு பிடித்து கடலை கடந்துச் சென்று நீங்கள் காப்பாற்றப்பட்டீர்கள். (10:90), (20:77), (26:63) & (44:24) அதுமட்டுமின்றி ∴பிர்அவுனும் அவனது படையினரும் கடலை கடந்து செல்லும் போது பெரும் கடல் அலைகள் அவர்களை சூழ்ந்துக் கொண்டன. இதனால் அவர்கள் உங்கள் கண்ணெதிரே மூழ்கடிக்கப்பட்டார்கள்.

51 وَاِذْ وٰعَدْنَا مُوْسٰٓى اَرْبَعِيْنَ لَيْلَةً ثُمَّ اتَّخَذْتُمُ الْعِجْلَ مِنْۢ بَعْدِهٖ وَاَنْتُمْ ظٰلِمُوْنَ○

51. மேலும் நாம் மூஸாவுக்கு (வேதம் அருள) நாற்பது இரவுகளை வாக்களித்தோம்; (அதற்காக அவர் சென்ற) பின்னர் காளைக் கன்(று ஒன்)றைக் (கடவுளாக) எடுத்துக் கொண்டீர்கள்; (அதனால்) நீங்கள் அக்கிரமக் காரர்களாகி விட்டீர்கள்.

51. அதை அடுத்து வாழ்வின் உயர் இலட்சியமான ஒழுக்க மாண்புகள் மற்றும் தற்காப்புக்கான பயிற்சிகளை பெற சினாய் மலை அடிவாரத்தில் தங்கி இருந்தீர்கள். அது சமயம் இறைக் கட்டளையின்படி நாற்பது இரவுகள் உங்களை விட்டு மூசா பிரிந்துச் செல்ல நேர்ந்தது. (பார்க்க: 7:142) அப்போது அந்த குறுகிய காலத்திற்குள் நீங்கள் எகிப்திய தெய்வமான காளைக் கன்றை கடவுளாக எடுத்துக்கொண்டு இறைவனின் கட்டளைக்கு மாறுசெய்தீர்கள்.

52 ثُمَّ عَفَوْنَا عَنْكُمْ مِّنْ بَعْدِ ذٰلِكَ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ ○

*52. இதன் பின்னரும், நீங்கள் நன்றி செலுத்துவதற்காக நாம் உங்களை மன்னித்தோம்.*

53 وَ اِذْ اٰتَيْنَا مُوْسَى الْكِتٰبَ وَ الْفُرْقَانَ لَعَلَّكُمْ تَهْتَدُوْنَ ○

*53. இன்னும், நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு நாம் மூஸாவுக்கு வேதத்தையும் (நன்மை தீமைகளைப் பிரித்து அறிவிக்கக் கூடிய) ஃபுர்க்கானையும் அளித்தோம் (என்பதையும் நினைவு கூருங்கள்).*

54 وَ اِذْ قَالَ مُوْسٰى لِقَوْمِهٖ يٰقَوْمِ اِنَّكُمْ ظَلَمْتُمْ اَنْفُسَكُمْ بِاتِّخَاذِكُمُ الْعِجْلَ فَتُوْبُوْٓا اِلٰى بَارِىِٕكُمْ فَاقْتُلُوْٓا اَنْفُسَكُمْ ؕ ذٰلِكُمْ خَيْرٌ لَّكُمْ عِنْدَ بَارِىِٕكُمْ ؕ فَتَابَ عَلَيْكُمْ ؕ اِنَّهٗ هُوَ التَّوَّابُ الرَّحِيْمُ ○

*54. மூஸா தம் சமூகத்தாரை நோக்கி: "என் சமூகத்தோரே! நீங்கள் காளைக் கன்றை (வணக்கத்திற்காக) எடுத்துக் கொண்டதன் மூலம் உங்களுக்கு நீங்களே அக்கிரமம் செய்து கொண்டீர்கள்; ஆகவே, உங்களைப் படைத்தவனிடம் பாவமன்னிப்புக் கோருங்கள்: உங்களை நீங்களே மாய்த்துக் கொள்ளுங்கள்; அதுவே உங்களைப் படைத்தவனிடம், உங்களுக்கு நற்பலன் அளிப்பதாகும்" எனக் கூறினார். (அவ்வாறே நீங்கள் செய்ததனால்) அவன் உங்களை மன்னித்தான் (என்பதையும் நினைவு கூருங்கள்.) நிச்சயமாக, அவன் தவ்பாவை ஏற்(று மன்னிப்)பவனாக வும், பெருங் கருணையுடையோனாகவும் இருக்கிறான்.*

55 وَ اِذْ قُلْتُمْ يٰمُوْسٰى لَنْ نُّؤْمِنَ لَكَ حَتّٰى نَرَى اللّٰهَ جَهْرَةً فَاَخَذَتْكُمُ الصّٰعِقَةُ وَ اَنْتُمْ تَنْظُرُوْنَ ○

*55. இன்னும் (இதையும் நினைவு கூருங்கள்:) நீங்கள், "மூஸாவே! நாங்கள் அல்லாஹ்வை கண்கூடாகக் காணும் வரை உம்மீது நம்பிக்கை கொள்ள மாட்டோம்" என்று கூறினீர்கள்; அப்பொழுது, நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே உங்களை ஓர் இடி முழக்கம் பற்றிக் கொண்டது.*

52. இருப்பினும் நீங்கள் செய்த மாபெரும் தவறையும் இறைவன் மன்னித்து மீண்டும் நீங்கள் திருந்துவதற்கும் உங்களுடைய ஆற்றல்கள் பரிபூரண வளர்ச்சி பெறவும் மீண்டும் வாய்ப்பளிக்கப்பட்டது. இப்படிப்பட்ட வாய்ப்பு மறுமையில் கிடைப்பதில்லை.

53. இதற்காக நன்மையான காரியங்கள் எவை தீமையான செயல்கள் எவை என்பதை தெளிவாக பிரித்து அறிவிக்கக் கூடிய ஞான உபதேசங்கள் அடங்கிய வேதம் மூசா (நபி) வாயிலாக உங்களுக்கு கிடைத்தன. நீங்கள் நேர்வழி பெற்று வாழ்வின் உயர் இலட்சியத்தை அடைய வேண்டும் என்பதே அதன் நோக்கமாகும்.

54. 40 இரவுகள் கடந்து மூசா நபி தன் சமூகத்தாரிடம் திரும்பி வந்த போது தன்னுடைய சமுதாயம் காளைக் கன்று வழிப்பாட்டில் மூழ்கியிருப்பதைப் பார்த்தார். அப்போது அவர் மன வேதனையுடன், "என் சமூகத்தினரே ! இந்த காளைக் கன்று வழிப்பாட்டினால் உங்களை நீங்களே மாய்த்துக் கொள்கிறீர்களே. இதனால் ஏற்படும் தீமைகள் உங்களுக்கு தெரியாதா?. மேலும் இதனால் நீங்கள் மனிதத் தன்மையிலிருந்து இறங்கி இழிநிலைக்கு ஆளாகிவிடுவீர்களே (7:152). எனவே மீண்டும் வாழ்வின் உயர் நிலையை அடைய உங்களுடைய தவறை உணர்ந்து இந்த போக்கை கைவிடுங்கள். இறை வழிகாட்டுதல்களை ஏற்று நடந்துக் கொள்ளுங்கள். இவ்வாறு செய்வதால் இறைவனுடைய நியதிப்படி நீங்கள் மீண்டும் உயர் நிலைக்கு எடுத்துச் செல்லப்படுவீர்கள். அல்லஹ்வின் ஏற்பாட்டில் (Allah's System) இப்படியும ஒரு செயல் திட்டம் இருக்கிறது." என்று கூறினார் .

55. எந்த மனிதனாலும் அல்லாஹ்வை கண்கூடாக பார்க்க முடியாது என்பதே உண்மையாகும். (6:103) இறை வழிகாட்டுதலை ஏற்று அதன்படி நடப்பதற்கு பதிலாக "நாங்கள் அல்லாஹ்வை கண்கூடாக பார்க்காத வரையில் இந்த வழிகாட்டுதல்கள் இறைவன் புறத்திலிருந்து வருகின்றன என்று மூசாவே, நீங்கள் சொல்வதை நாங்கள் நம்ப மாட்டோம்." என்று மூசாவிடம் மூடத்தனமாக அடம் பிடித்தீர்கள். எனவே அல்லாஹ்வைக் காண்பதற்கு நிர்ணயிக்கப்பட்ட இடத்திற்கு உங்களில் ஒரு சிலர் வந்தடைந்த போது அங்கே பயங்கர பூகம்பமும் இடி முழக்கமும் தாக்கியது. மூசா நபி உள்பட நீங்கள் அனைவரும் பயந்து மூர்ச்கையாகிவிட்டீர்கள். (பாரக்க: 7:155) ஒரு சாதாரண பூகம்பத்தையோ இடிமுழக்கத்தையோ பார்க்க சக்தியற்ற மனிதனால் எல்லாம் வல்ல இறைவனின் சக்தியை எவ்வாறு பார்க்கமுடியும்?

மூடநம்பிக்கையால் சிந்தனை மற்றும் மனவலிமை குன்றிவிடுகிறது. அதனால் எந்த ஒரு சிறிய அதிர்ச்சியையும் தாங்கிக்கொள்ள முடியாத நிலை மனிதனுக்கு ஏற்பட்டுவிடுகிறது.

56 ثُمَّ بَعَثْنٰكُمْ مِّنْ بَعْدِ مَوْتِكُمْ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ ○

*56. நீங்கள் நன்றியுடையோராய் இருக்கும் பொருட்டு, நீங்கள் இறந்தபின் உங்களை உயிர்ப்பித்து எழுப்பினோம்.*

56. இந்த அளவிற்கு சிந்தனை, ஆற்றல், செயல்பாடு ஆகிய எல்லாவற்றையும் இழந்து செத்து போனவர்களைப் போல் வாழ்ந்துக் கொண்டிருந்தீர்கள். பின்பு உங்களுக்கு இறைவனுடைய வழிகாட்டுதல்கள் கிடைத்தது. அதன் மூலம் சிறப்பாக வாழ்ந்திட வழிகள் கிடைத்து புத்துயிர் பெற்றீர்கள்.

57 وَظَلَّلْنَا عَلَيْكُمُ الْغَمَامَ وَاَنْزَلْنَا عَلَيْكُمُ الْمَنَّ وَالسَّلْوٰى ؕ كُلُوْا مِنْ طَيِّبٰتِ مَا رَزَقْنٰكُمْ ؕ وَمَا ظَلَمُوْنَا وَلٰكِنْ كَانُوْٓا اَنْفُسَهُمْ يَظْلِمُوْنَ ○

*57. இன்னும், உங்கள் மீது மேகம் நிழலிடச் செய்தோம்; மேலும் "மன்னு, ஸல்வா" (என்னும் மேன்மையான உணவுப் பொருள்களை) உங்களுக்காக இறக்கி வைத்து, "நாம் உங்களுக்கு அருளியுள்ள பரிசுத்தமான உணவுகளிலிருந்து புசியுங்கள்" (என்றோம்;) எனினும் அவர்கள் நமக்குத் தீங்கு செய்து விடவில்லை; மாறாக, தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொண்டார்கள்.*

57. மேலும் நீங்கள் வாழ்ந்த பிரதேசத்தில் இறைவனின் திட்டத்தின்படி மழை நீரை தாராளமாக பொழிய வைக்கும் மேகங்கள் வந்த வண்ணமிருந்தன. (அது ஒரு மலைகளையும் காடுகளை கொண்ட பகுதியாகும். இப்போதும் அவ்வாறே இருக்கின்றன) உண்பதற்கு ருசிமிக்க உணவுவகைகள், சுவைமிக்க பறவைகளின் இறைச்சி மற்றும் கால்நடைகளின் மாமிசம் ஆகியவற்றைக் கொண்டு மன நிறைவான வாழ்க்கை உங்களுக்கு கிடைத்திருந்தது. ஆனால் இத்தனை வசதிகள் பெற்றிருந்தும் இறை வழிகாட்டுதலை பேணுவதில் நீங்கள் நிலைத்து நிற்கவில்லை. இதனால் ஏற்பட்ட பாதிப்புகள் உங்களுக்கே அன்றி அல்லாஹ்வுடைய அமைப்புமுறைக்கு (Allah's System) அல்ல. இவ்வாறாக நீங்கள் தமக்குத்தாமே அநியாம் செய்துக் கொண்டீர்கள்.

58 وَاِذْ قُلْنَا ادْخُلُوْا هٰذِهِ الْقَرْيَةَ فَكُلُوْا مِنْهَا حَيْثُ شِئْتُمْ رَغَدًا وَّادْخُلُوا الْبَابَ سُجَّدًا وَّقُوْلُوْا حِطَّةٌ نَّغْفِرْ لَكُمْ خَطٰيٰكُمْ ؕ وَسَنَزِيْدُ الْمُحْسِنِيْنَ ○

*58. இன்னும் (நினைவு கூருங்கள்;) நாம் கூறினோம்: "இந்தப் பட்டினத்துள் நுழைந்து அங்கு நீங்கள் விரும்பிய இடத்தில் தாராளமாகப் புசியுங்கள்; அதன் வாயிலில் நுழையும் போது, பணிவுடன் தலைவணங்கி 'ஹித்ததுன்' (-"எங்கள் பாபச் சுமைகள் நீங்கட்டும்") என்று கூறுங்கள்; நாம் உங்களுக்காக உங்கள் குற்றங்களை மன்னிப்போம்; மேலும் நன்மை செய்வோருக்கு அதிகமாகக் கொடுப்போம்.*

58. பாலஸ்தீன நாட்டின் பட்டணத்திற்குச் சென்று தாராளமான வாழ்வாதாரங்களைப் பெற்று சுதந்திரமாக வாழுங்கள் (பார்க்க: 5/21). அதே சமயத்தில் நீங்கள் இறைக் கட்டளைக்கு மட்டும் அடிபணிந்து வாழவேண்டும். இதனால் உங்களிடமுள்ள மூடநம்பிக்கையும் முன்னோர்கள் வழிபாடும் உங்களை விட்டு நீங்கிவிடும். மேலும் மூடப் பழக்கத்திலிருந்த தவறான செயல்களால் ஏற்பட்ட பாதிப்புகளிலிருந்து விடுபட்டு பாதுகாப்பான வாழக்கை கிடைக்கும். அதைத் தொடர்ந்து அழகிய முறையில் நன்மையான ஆக்கப்பூர்வமான செயல்களை செய்து வந்தால் மென்மேலும் வாழ்க்கைத் தரமும் வசதிகளும் பெருகி வரும் என்று அல்லாஹ்விடமிருந்து அறிவுரைகள் வந்தன.

59 فَبَدَّلَ الَّذِيْنَ ظَلَمُوْا قَوْلًا غَيْرَ الَّذِىْ قِيْلَ لَهُمْ فَاَنْزَلْنَا عَلَى الَّذِيْنَ ظَلَمُوْا رِجْزًا مِّنَ السَّمَآءِ بِمَا كَانُوْا يَفْسُقُوْنَ ○

*59. ஆனால் அக்கிரமக்காரர்கள் தம்மிடம் கூறப்பட்ட வார்த்தையை அவர்களுக்குச் சொல்லப்படாத வேறு வார்த்தையாக மாற்றிக் கொண்டார்கள்; ஆகவே அக்கிரமங்கள்*

59. ஆனால் நீங்களோ செயல்வீரர்களாக சிறந்த முறையில் செயலாற்றுவதற்கு பதிலாக உழைக்காமல் சுக வாழ்வை விரும்பினீர்கள். (பார்க்க: 2:61). இப்படியாக அல்லாஹ்வின் அறிவுரைகளை விட்டுவிட்டு வேறு பாதையை தேர்ந்தெடுத்துக் கொண்டீர்கள். இதன் விளைவாக வானுலக சட்டங்களின்படி நாளடைவில் உங்களுள் பலவீனம் ஏற்பட்டு

செய்தவர்கள் மீது - (இவ்வாறு அவர்கள்) பாபம் செய்து கொண்டிருந்த காரணத்தினால் வானத்திலிருந்து நாம் வேதனையை இறக்கி வைத்தோம்.

60 وَاِذِ اسْتَسْقٰى مُوْسٰى لِقَوْمِهٖ فَقُلْنَا
اضْرِبْ بِّعَصَاكَ الْحَجَرَ ؕ فَانْفَجَرَتْ
مِنْهُ اثْنَتَا عَشْرَةَ عَيْنًا ؕ قَدْ عَلِمَ
كُلُّ اُنَاسٍ مَّشْرَبَهُمْ ؕ كُلُوْا وَ
اشْرَبُوْا مِنْ رِّزْقِ اللّٰهِ وَلَا تَعْثَوْا
فِى الْاَرْضِ مُفْسِدِيْنَ ○

ருகூஃ 7

60. மூஸா தம் சமூகத்தாருக்காகத் தண்ணீர் வேண்டிப் பிரார்த்தித்த போது, "உமது கைத்தடியால் அப்பாறையில் அடிப்பீராக!" என நாம் கூறினோம்; அதிலிருந்து பன்னிரண்டு நீர் ஊற்றுக்கள் பொங்கியெழுந்தன. ஒவ்வொரு கூட்டத்தினரும் அவரவர் குடி நீர்த் துறையை நன்கு அறிந்து கொண்டனர்; "அல்லாஹ் அருளிய ஆகாரத்திலிருந்து உண்ணுங்கள், பருகுங்கள்; பூமியில் குழப்பஞ் செய்து கொண்டு திரியாதீர்கள்" (என நாம் கூறினோம்) என்பதையும் நினைவு கூருங்கள்.

61 وَاِذْ قُلْتُمْ يٰمُوْسٰى لَنْ نَّصْبِرَ
عَلٰى طَعَامٍ وَّاحِدٍ فَادْعُ لَنَا رَبَّكَ
يُخْرِجْ لَنَا مِمَّا تُنْۢبِتُ الْاَرْضُ مِنْ
بَقْلِهَا وَقِثَّآئِهَا وَفُوْمِهَا وَعَدَسِهَا
وَبَصَلِهَا ؕ قَالَ اَتَسْتَبْدِلُوْنَ الَّذِىْ
هُوَ اَدْنٰى بِالَّذِىْ هُوَ خَيْرٌ ؕ اِهْبِطُوْا
مِصْرًا فَاِنَّ لَكُمْ مَّا سَاَلْتُمْ ؕ وَ
ضُرِبَتْ عَلَيْهِمُ الذِّلَّةُ وَالْمَسْكَنَةُ
وَبَآءُوْ بِغَضَبٍ مِّنَ اللّٰهِ ؕ ذٰلِكَ
بِاَنَّهُمْ كَانُوْا يَكْفُرُوْنَ بِاٰيٰتِ اللّٰهِ
وَيَقْتُلُوْنَ النَّبِيّٖنَ بِغَيْرِ الْحَقِّ ؕ ذٰلِكَ
بِمَا عَصَوْا وَّكَانُوْا يَعْتَدُوْنَ ○

61. இன்னும், "மூஸாவே! ஒரே விதமான உணவை நாங்கள் சகிக்க மாட்டோம். ஆதலால், பூமி விளைவிக்கும் அதன் கீரையையும், அதன் வெள்ளரிக்காயையும், அதன் கோதுமையையும், அதன் பருப்பையும், அதன் வெங்காயத்தையும் எங்களுக்கு வெளிப்படுத்தித் தருமாறு உம் இறைவனிடம் எங்களுக்காகக் கேளும்" என்று நீங்கள் கூற, "நல்லதாக எது இருக்கிறதோ, அதற்கு பதிலாக மிகத் தாழ்வானதை நீங்கள் மாற்றிக் கொள்(ள நாடு)கிறீர்களா? நீங்கள் ஏதேனும் ஒரு பட்டணத்தில் இறங்கி விடுங்கள்; அங்கு நீங்கள்

உங்களிடமிருந்த திறமையும் வீரமும் குறைந்து கோழைகளாகி விட்டீர்கள் (பார்க்க: 5 : 22-24) அதனால் பாலஸ்தீன நாட்டின் மீது உங்களுக்கு கிடைக்கவிருந்த ஆட்சி அதிகாரம் 40 ஆண்டுகள் வரை தள்ளிபோனது (பார்க்க: 5:26)

60. வரலாற்றின் மற்றொரு சம்பவத்தைப் பற்றியும் நினைவுகூறுங்கள். விவசாயம் செய்ய உங்களுக்கு தண்ணீர் தேவைப்பட்டது. இதற்காக மூசா (நபி) இறைவனிடம் உதவியை நாடியபோது நீரூற்று பொங்கி எழும் இடத்தின் அடையாளம் அவருக்கு காட்டப்பட்டது. மூசா (நபி) தன் தோழர்களுடன் அங்குச் சென்று பாறையை உடைத்து மண்ணை தோண்டி எடுத்தபோது நீரூற்றுகள் பொங்கி எழுந்தன. இவ்வாறாக பன்னிரண்டு கிணறுகள் தோண்டப்பட்டன. அவற்றின் ஒவ்வொன்றையும் சரியான முறையில் பங்கிடப்பட்டு இன்னார்க்கு இந்த நீரூற்று என குறித்து கொடுக்கப்பட்டன. அவற்றைக் கொண்டு உங்கள் வாழக்கைத் தேவைகளை நிறைவு செய்துக்கொள்ள வழிகள் கிடைத்தன. அதன்பின் உங்களுக்குள் பிரிவினையை ஏற்படுத்தாமல் சமுதாயத்தில் ஒற்றுமையுடன் வாழுங்கள் என்று அறிவுருத்தப்பட்டது.

61. ஏற்கனவே 2/59 வாக்கியத்தில் குறிப்பிட்டது போல உயர் இலட்சியவாழ்விற்கு முக்கியத்துவம் அளிப்பதற்கு பதிலாக உழைக்காமல் சொகுசு வாழக்கையை நாடினீர்கள். உங்களை பாலஸ்தீனத்திற்கு அழைத்துச் சென்றதன் நோக்கமே எகிப்திய நாட்டின் ஃபிர்அவுன் மன்னராட்சியின் அதர்மத்தை அழிக்க உங்களை தயார் படுத்தத்தான். மேலும் அங்கு விளைந்த புராதன சத்துள்ள ஆகாரங்கள் உங்கள் உடல் வளர்ச்சிக்கு ஏற்றவையாக இருந்தன. ஆனால் நீங்களோ மூசாவிடம், "தினந்தோறும் ஒரே மாதிரியான ஆகாரத்தைக் கொண்டு இந்த காட்டில் வாழ எங்களால் முடியாது. எனவே வாய்க்கு ருசியாக பூமியில் விளையும் கீரை, வெள்ளரிக்காய், கோதுமை, பருப்பு, மற்றும் வெங்காயம் போன்ற தானிய வகைகளும் உன் இறைவனிடமிருந்து கேட்டுத்தாருங்கள்." என்று சொல்ல ஆரம்பித்துவிட்டீர்கள். மகத்தான இலட்சிய வாழ்வின் பக்கம் மூசாவின் அழைப்பிருக்க, நீங்கள் நாடியதோ அற்பமானவைகள் தான். "உங்கள் முடிவு இதுவே என்றால் ஏதேனும் நகருக்குச் சென்று நீங்கள் விரும்புவதை பெற்றுக் கொள்ளுங்கள்" என்று அவர் கூறிவிட்டார். அவ்வாறே உங்களில் ஒரு சிலர் பட்டணத்திற்கு சென்றுவிட்டீர்கள். இராணுவ பயிற்சியில் கிடைத்த உடல்வாகும் செயல்திறனும் காலப்போக்கில் உங்களைவிட்டு மறைந்துபோயின. மீண்டும் பழையபடி அடிமைத்தனமும் பஞ்சப்பண்டார வாழ்க்கைக்கும் ஆளானீர்கள். இவ்வாறாக இறைவன் நிர்ணயித்துள்ள *மனித செயலுக்க ஏற்ற*

*கேட்பது நிச்சயமாக உங்களுக்குக் கிடைக்கும் என்று அவர் கூறினார். வறுமையும் இழிவும் அவர்கள் மீது சாட்டப்பட்டு விட்டன; மேலும் அல்லாஹ்வின் கோபத்திற்கும் அவர்கள் ஆளானார்கள்; இது ஏனென்றால் திடமாகவே அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை நிராகரித்தும், அநியாயமாக அவர்கள் நபிமார்களைக் கொலை செய்து வந்ததும் தான். இந்த நிலை அவர்கள் (அல்லாஹ்வுக்குப் பணியாது) மாறு செய்து வந்ததும், (அல்லாஹ் விதித்த) வரம்புகளை மீறிக் கொண்டேயிருந்ததினாலும் ஏற்பட்டது.*

*விளைவுகள்* என்ற நியதிப்படி வறுமையும் இழிவும் உங்களை பீடித்துக்கொண்டன. ஏனெனில் நீங்கள் இறை வழிகாட்டுதலை ஏற்க மறுத்து அந்த மாபெரும் சீர்திருத்தவாதியான நபியின் பேச்சை மதிக்காததோடு அவருக்கு எதிராக செயல்பட திட்டங்கள் பல தீட்டினீர்கள். இப்படியாக ஒரு சில சீர்த்திருத்தவாதிகளின் உயிருக்கு ஆபத்தும் ஏற்பட்டது. இவையாவும் உங்களுடைய வரம்பு மீறின செயல்களாலும் தீய நடத்தையினாலும் இப்படி செய்துவந்தீர்கள்.

62 إِنَّ الَّذِينَ آمَنُوا وَالَّذِينَ هَادُوا وَالنَّصَارَىٰ وَالصَّابِئِينَ مَنْ آمَنَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ وَعَمِلَ صَالِحًا فَلَهُمْ أَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ ○

**ருகூஃ 8**

*62. ஈமான் கொண்டவர்களாயினும், யூதர்களாயினும், கிறிஸ்தவர்களாயினும், ஸாபியீன்களாயினும் நிச்சயமாக எவர் அல்லாஹ்வின் மீதும், இறுதி நாள் மீதும் நம்பிக்கை கொண்டு ஸாலிஹான (நல்ல) அமல்கள் செய்கிறார்களோ அவர்களின் (நற்) கூலி நிச்சயமாக அவர்களுடைய இறைவனிடம் இருக்கிறது; மேலும், அவர்களுக்கு யாதொரு பயமும் இல்லை; அவர்கள் துக்கப் படவும் மாட்டார்கள்.*

62. சரி. இவையாவும் உங்கள் முன்னோர்கள் நடந்துக்கொண்ட நடைமுறையாகும். ஆனால் இப்போது நீங்களோ நாம் தாம் அல்லாஹ்வின் செல்லப் பிள்ளைகள் என்று சொல்லி வருகிறீர்கள் (பார்க்க: 5/18). மேலும் சுவனம் நமக்கு மட்டும்தான் சொந்தம் (2/111) என்ற மூடநம்பிக்கையையும் உருவாக்கி வைத்திருக்கிறீர்கள். ஆனால் சுவனம் என்பது குலம் கோத்திரம் என்ற அடிப்படையில் கிடைக்கின்ற ஒன்றல்ல. முஸ்லிம்கள் வீட்டில் பிறந்தவர்களாயினும், யூதர்களாயினும், கிருஸ்தவர்களாயினும், சடங்கு சம்பிரதாயங்களை புறக்கணித்து வாழ்பவர்களாயினும் சரியே. யாரெல்லாம் அல்லாஹ்வின் வழிகாட்டுதலையும், *மனித செயல்களுக்கு ஏற்ற விளைவுகள்* (ஆகிரத்) என்ற நிலை மாறா சட்டத்தையும் மனதார ஏற்று இந்த இறை வேதமாகிய குர்ஆன் காட்டும் பாதையில் (2/137) மகத்தான ஆக்கப்பூர்வமான செயல்களை செய்து வருகிறார்களோ அவர்கள் யாவருக்கும் நற்பலன்கள் கிடைக்கும் என்பதுதான் உண்மை நிலையாகும். இப்படிப்பட்ட நடைமுறை சட்டங்கள்தான் (Allah's System) உண்மையானதாகும். இப்படிப்பட்டவர்களின் வாழ்வில் பயமும் இருக்காது. அவர்கள் துக்கப்படவும்மாட்டார்கள். எனவே இறை வழிகாட்டுதலை ஏற்று செயல்படுபவர்கள் எந்த இனத்தை சேர்ந்தவர்கள் என்பதல்ல. அவர் எவ்வாறு செயல்படுகிறார்கள் என்பதே கேள்வியாகும்.

63 وَإِذْ أَخَذْنَا مِيثَاقَكُمْ وَرَفَعْنَا فَوْقَكُمُ الطُّورَ خُذُوا مَا آتَيْنَاكُمْ بِقُوَّةٍ وَاذْكُرُوا مَا فِيهِ لَعَلَّكُمْ تَتَّقُونَ ○

*63. இன்னும், நாம் உங்களிடம் வாக்குறுதி வாங்கி, 'தூர்' மலையை உங்கள் மேல் உயர்த்தி, "நாம் உங்களுக்கு கொடுத்த (வேதத்)தை உறுதியுடன் பற்றிக் கொள்ளுங்கள்; அதிலுள்ளவற்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். (அப்படிச் செய்வீர்களானால்) நீங்கள் பயபக்தியுடையோர் ஆவீர்கள்" (என்று நாம் கூறியதையும் நினைவு கூருங்கள்).*

63. இந்த கொள்கை கோட்பாடுகளை அறிந்துக் கொண்ட பின் மீண்டும் உங்கள் வரலாற்று சம்பவங்களை எண்ணிப் பாருங்கள். தாராள வாழ்வாதாரங்களைக் கொண்ட செழிப்பான இடமான 'தூர்' என்னும் உயரமான மலை அடிவாரத்தில் குடியேறி வாழ்ந்து வந்தீர்கள். உங்கள் ஒழுக்கமாண்புகள் சிறப்பாக வளர சீரான வழிகாட்டுதலும் இறைவன் புறத்திலிருந்து உங்களுக்கு அருளப்பட்டன. நீங்கள் உங்கள் வாழ்வில் தீய விளைவுகளிலிருந்து பாதுகாப்பாக இருக்க (Secured Life) இந்த வழிகாட்டுதலின் அடிப்படையில் உறுதியுடன் நிலைத்து நின்று செயல்படும்படி அறிவுரை செய்யப்பட்டது. அவற்றை ஏற்று நடப்பதாக நீங்களும் உறுதிமொழி எடுத்துக்கொண்டீர்கள்.

64 ثُمَّ تَوَلَّيْتُمْ مِّنْ بَعْدِ ذٰلِكَ ۚ فَلَوْلَا فَضْلُ اللّٰهِ عَلَيْكُمْ وَرَحْمَتُهٗ لَكُنْتُمْ مِّنَ الْخٰسِرِيْنَ ○

*64. அதன் பின்னும் நீங்கள் (உங்கள் வாக்குறுதியைப்) புறக்கணித்து (மாறி) விட்டீர்கள்; உங்கள் மீது அல்லாஹ்வின் கருணையும் அவன் அருளும் இல்லாவிட்டால் நீங்கள் (முற்றிலும்) நஷ்டவாளிகள் ஆகியிருப்பீர்கள்.*

64. ஆனால் அந்த உறுதிமொழியில் நீங்கள் நிலைத்து நிற்கவில்லை. காலப்போக்கில் அந்த வழிகாட்டுதல்களை புறந்தள்ளிவிட்டீர்கள். கால அவகாசம் என்ற இறைவனின் கருணைமிக்க அந்த நியதி இல்லாமல் உடனுக்குடன் தண்டனை அளிப்பது என்ற சட்டம் நடைமுறையில் இருந்திருந்தால் (பார்க்க: 35:45) வாழ்வின் எந்த சுகத்தையும் அனுபவிக்க முடியாதபடி செய்திருக்க முடியும். அந்த நிலையில் நீங்கள் பெருந்துன்பத்திற்கு ஆளாகியிருப்பீர்கள்.

65 وَلَقَدْ عَلِمْتُمُ الَّذِيْنَ اعْتَدَوْا مِنْكُمْ فِي السَّبْتِ فَقُلْنَا لَهُمْ كُوْنُوْا قِرَدَةً خٰسِـِٕيْنَ ۚ

*65. உங்க(ள் முன்னோர்க)ளிலிருந்து சனிக்கிழமையன்று (மீன் பிடிக்கக் கூடாது என்ற) வரம்பை மீறியவர்களைப்பற்றி நீங்கள் உறுதியாக அறிவீர்கள். அதனால் அவர்களை நோக்கி "சிறுமையடைந்த குரங்குகளாகி விடுங்கள்" என்று கூறினோம்.*

65. இறை வழிகாட்டுதலை கடைபிடிக்கும் விஷயம் ஒரு பக்கம் இருக்கட்டும். உங்கள் நடைத்தை எவ்வாறு இருந்தது என்று தெரியுமா? வணிக விதிமுறைகளின் படி வாரத்திற்கு ஒரு நாள் விடுமுறை என்றிருந்தது. மேலும் அன்றைய தினம் மீன் பிடிக்க தடைஉத்தரவும் இருந்து வந்தது. (பார்க்க: 7:163) ஆனால் உங்களிடமிருந்த அளவுகடந்த பேராசையினால் இந்த சிறிய கட்டளையை கூட செயல்படுத்த முடியவில்லை. (பாாக்க: 4/154, 16/124) இப்படி வரம்புமீறி நடந்துக்கொண்டதால் உங்களிடையே இருந்த மற்ற எல்லா கட்டுப்பாடுகளும் சீரழிந்தன. இதனால் நீங்கள் நடமாடும் குரங்குகள் மற்றும் பன்றிகள் போல் அடிமட்ட நிலைக்கு போய்விட்டீர்கள். (பார்க்க: 5:60) கொடிய வேதனை செய்யும் கொடுமைக்காரர்களுக்கு அடிமைப்பட்டு இழிநிலைக்கு ஆளானீர்கள். (பார்க்க: 7:167).

*குரங்குகள் நிலையற்ற தன்மையும் பன்றிகள் நல்லது கெட்டது என்ற பாகுபாடு அற்ற தன்மையும் கொண்டவை.*

66 فَجَعَلْنٰهَا نَكَالًا لِّمَا بَيْنَ يَدَيْهَا وَمَا خَلْفَهَا وَمَوْعِظَةً لِّلْمُتَّقِيْنَ ○

*66. இன்னும், நாம் இதனை அக்காலத்தில் உள்ளவர்களுக்கும், அதற்குப் பின் வரக்கூடியவர்களுக்கும் படிப்பினையாகவும்; பயபக்தியுடையவர்களுக்கு நல்ல உபதேசமாகவும் ஆக்கினோம்.*

66. உங்களுக்கு ஏற்பட்ட இந்த துர்பாக்கியமும் அழிவும் இப்போது வாழும் உலக மக்களுக்கும் வரவிருக்கும் ஒவ்வொரு சமுதாயத்தவர்க்கும் ஒரு மாபெரும் படிப்பினையாகும். இந்த பேரழிவுகளிலிருந்து பாதுகாத்துக்கொள்ள விரும்பும் எல்லா தரப்பு மக்களுக்கும் இவை அறிவுரைகளாக இருக்கின்றன. இப்போதுள்ள சமுதாயங்கள் இவற்றை நன்கு ஆராய்ந்து பரிசீலித்து வாழ்வின் சரியான பாதையை தேர்ந்தெடுத்துக் கொள்வதே அறிவுடமையாகும்.

67 وَاِذْ قَالَ مُوْسٰى لِقَوْمِهٖٓ اِنَّ اللّٰهَ يَاْمُرُكُمْ اَنْ تَذْبَحُوْا بَقَرَةً ۗ قَالُوْٓا اَتَتَّخِذُنَا هُزُوًا ۗ قَالَ اَعُوْذُ بِاللّٰهِ اَنْ اَكُوْنَ مِنَ الْجٰهِلِيْنَ ○

*67. இன்னும் (இதையும் நினைவு கூருங்கள்:) மூஸா தம் சமூகத்தாரிடம், "நீங்கள்*

67. மேலும் வரலாற்று நிகழ்ச்சியின் இன்னொரு சம்பவத்தையும் நினைவுகூறுங்கள். சட்ட ஒழுங்குமுறைகளை கொண்டுவரும்போது அதை தட்டிகழிக்க பல வழிமுறைகளை கையாண்டுவந்தீர்கள். மூடநம்பிக்கைகளை போக்க முயற்சிகளை மேற்கொள்ளும்போது அதிலிருந்து தப்பிக்க சாக்குபோக்குகளை சொல்லி அதை கேலி செய்வதே உங்கள் வழக்கமாக இருந்து வந்தது. உங்களிடமிருந்த காளைக்கன்று வழிப்பாட்டினை போக்க ஒரு உபாயம் கையாளப்பட்டது.

ஒரு பசு மாட்டை அறுக்க வேண்டும் என்று நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குக் கட்டளை யிடுகிறான்" என்று சொன்னபோது, அவர் கள்: "(மூஸாவே!) எங்களை பரிகாசத்திற்கு ஆளாக்குகின்றீரா?" என்று கூறினர்; (அப் பொழுது) அவர், "(அப்படிப் பரிகசிக்கும்) அறிவீனர்களில் ஒருவனாக நான் ஆகிவிடாமல் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்" என்று கூறினார்.

68 قَالُوا ادْعُ لَنَا رَبَّكَ يُبَيِّنْ لَنَا مَا
هِيَ ۚ قَالَ إِنَّهُ يَقُولُ إِنَّهَا بَقَرَةٌ
لَا فَارِضٌ وَلَا بِكْرٌ ۖ عَوَانٌ بَيْنَ
ذَٰلِكَ ۖ فَافْعَلُوا مَا تُؤْمَرُونَ ○

68. "அது எத்தகையது என்பதை எங்களுக்கு விளக்கும்படி உம் இறைவனிடம் எங்களுக்காக வேண்டுவீராக!" என்றார்கள். "அப்பசு மாடு அதிகக் கிழடுமல்ல, கன்றுமல்ல, அவ்விரண்டிற்கும் இடைப்பட்டதாகும். எனவே 'உங்களுக்கு இடப்பட்ட கட்டளையை நிறை வேற்றுங்கள்' என்று அவன் (அல்லாஹ்) கூறுவதாக" (மூஸா) கூறினார்.

69 قَالُوا ادْعُ لَنَا رَبَّكَ يُبَيِّنْ لَنَا مَا
لَوْنُهَا ۚ قَالَ إِنَّهُ يَقُولُ إِنَّهَا بَقَرَةٌ
صَفْرَاءُ فَاقِعٌ لَوْنُهَا تَسُرُّ النَّاظِرِينَ ○

69. "அதன் நிறம் யாது!" என்பதை விளக்கும்படி நமக்காக உம் இறைவனை வேண்டுவீராக!" என அவர்கள் கூறினார்கள்; அவர் கூறினார்: "திடமாக அது மஞ்சள் நிறமுள்ள பசு மாடு; கெட்டியான நிறம்; பார்ப்பவர்களுக்குப் பரவசம் அளிக்கும் அதன் நிறம் என அ(வ்விறை)வன் அருளினான்" என்று மூஸா கூறினார்.

70 قَالُوا ادْعُ لَنَا رَبَّكَ يُبَيِّنْ لَنَا مَا
هِيَ ۙ إِنَّ الْبَقَرَ تَشَابَهَ عَلَيْنَا ۖ وَإِنَّا
إِنْ شَاءَ اللَّهُ لَمُهْتَدُونَ ○

70. "உமது இறைவனிடத்தில் எங்களுக் காக பிரார்த்தனை செய்வீராக! அவன் அது எப்படிப்பட்டது என்பதை எங்களுக்கு தெளி வு படுத்துவான். எங்களுக்கு எல்லாப் பசு மாடுகளும் திடனாக ஒரே மாதிரியாகத் தோன்றுகின்றன; அல்லாஹ் நாடினால் நிச்சய மாக நாம் நேர்வழி பெறுவோம்" என்று அவர்கள் கூறினார்கள்.

71 قَالَ إِنَّهُ يَقُولُ إِنَّهَا بَقَرَةٌ لَا
ذَلُولٌ تُثِيرُ الْأَرْضَ وَلَا تَسْقِي
الْحَرْثَ ۚ مُسَلَّمَةٌ لَا شِيَةَ فِيهَا ۚ
قَالُوا الْآنَ جِئْتَ بِالْحَقِّ ۚ فَذَبَحُوهَا
وَمَا كَادُوا يَفْعَلُونَ ○

71. அவர் (மூஸா) "நிச்சயமாக அப்பசு மாடு நிலத்தில் உழவடித்தோ, நிலத்திற்கு நீர் பாய்ச்சவோ பயன்படுத்தப்படாதது; ஆரோக்கியமானது; எவ்விதத்திலும் வடு வில்லாதது என்று இறைவன் கூறுகிறான்" எனக் கூறினார். "இப்பொழுதுதான் நீர் சரி யான விபரத்தைக் கொண்டு வந்தீர்" என்று சொல்லி அவர்கள் செய்ய இயலாத நிலை யில் அப்பசு மாட்டை அறுத்தார்கள்.

(பார்க்க: 2:54. 7:152) அதன் அடையாளமாக ஒரு பசுமாட்டை அறுக்கும்படி அல்லாஹ் கட்டளையிட்டுள்ளதாக மூசா (நபி) கூறினார். அதற்கு தம்மை பரிகாசம் செய்வதாக எண்ணிக்கொண்டு மூசாவிடம் தர்க்கம் செய்ய ஆரம்பித்து விட்டீர்கள். அப்படி பரிகாசிக்கும் அளவிற்கு அறிவீனர்களில் ஒருவனாக ஆகிவிட்டேனா என்று அவர் வருத்தப்பட்டார். மேலும் இப்படி ஒரு நிலையிலிருந்து நான் அல்லாஹ்விடம் காவல் (வழிகாட்டுதலை) தேடுகிறேன் என்றார்.

68. இது அல்லாஹ்விடமிருந்து வந்த கட்டளை என்று அறிந்திருந்தும் அந்த கட்டளையை நிறைவேற்றுவதற்கு பதிலாக அந்த மாடு எத்தகையது என்று இறைவனிடம் கேட்டு தெளிவாக்கும்படி கேட்க ஆரம்பித்து விட்டீர்கள். அந்த மாடு சிறிய கன்றும் அல்ல மிகவும் முதிர்ந்த கிழடும் அல்ல என்று தெளிவாக்கி அந்த கட்டளையை நிறைவேற்றும்படி மூசா அறிவுறுத்தினார்.

69. இந்த விளக்கம் அளித்தபிறகும் எப்படியாவது தட்டிகழிக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் அதன் நிறம் என்னவாக இருக்கவேண்டும் என்று இறைவனிடம் கேட்டு அறிவிக்கும்டிபடி கேட்டுக்கொண்டீர்கள். நிச்சயமாக பார்ப்பவர்கள் கண்ணுக்கு பரவசமூட்டும் மஞ்சள் நிறமுள்ள மாடு என்று இறைவனிடமிருந்து விளக்கம் வந்துள்ளதாக மூசா அறிவித்தார்.

70. இத்தனை விளக்கங்கள் அளிக்கப்பட்டும் எதுவும் சரிவர புரிந்துக்கொள்ளாததுபோல் பாசாங்கு செய்தவர்களாகவே இருந்தீர்கள். எல்லா மாடுகளும் ஒரே மாதிரியாக இருப்பதால் அதைப்பற்றி முழுவிவரமும் மீண்டும் இறைவனிடம் கேட்டு சொல்லும்படி கேட்டுக்கொண்டீர்கள். அப்போதுதான் அல்லாஹ்வின் நாட்டம் என்னவோ திடமாக அப்படியே எங்களால் செய்யமுடியும் என்றீர்கள்.

71. விவசாயத்திற்கு ஏர் உழுவதற்கோ அல்லது பாசனத்திற்கு நீர் இறைக்கவோ பயன்படுத்தாத மாடு. மேலும் எவ்வித வடுவும் அந்த மாட்டில் இருத்தல் கூடாது என்று இறைவன் விளக்கம் அளிப்பதாக மூசா அறிவித்தார்.

ஆக இந்த சிறிய விஷயத்தில் கூட இத்தனை தர்க்கங்கள் செய்தீர்கள். காரணம் தெய்வ வழிப்பாட்டிற்காக எடுத்துக்கொண்ட ஒன்றை எப்படி அறுப்பது என்ற மனச் சஞ்சலத்தில்தான் அவ்வாறு தர்க்கங்களும் பாசாங்குகளும் செய்தீர்கள். ஒப்புக்காக இறைவனை ஏற்றுக்கொள்வது என்பது இறைவனிடம் செல்லாது. எனவே தவறான கண்ணோட்டங்களை

விட்டுவிட கட்டளைகள் வரும்போது இப்படிப்பட்ட விதண்டாவாதங்கள் செய்தீர்கள். தேவையற்ற சடங்கு சம்பிரதாயங்களில் மூழ்கியிருப்பதே அதற்கு காரணம் (பார்க்க: 2/93) அதனால் இந்த விஷயத்தை வெளிப்படையாக தெரிவிக்க விரும்பாமல் இப்படி தர்க்கங்கள் செய்தீர்கள். மேலும் அந்த இறைக்கட்டளையை வேண்டா வெறுப்பாகத்தான் நிறைவேற்றினீர்கள்.

72 وَإِذْ قَتَلْتُمْ نَفْسًا فَادَّارَأْتُمْ فِيهَا ۖ وَاللَّهُ مُخْرِجٌ مَا كُنْتُمْ تَكْتُمُونَ

72. "நீங்கள் ஒரு மனிதனை கொன்றீர்கள்; பின் அதுபற்றி (ஒருவருக்கொருவர் குற்றம் சாட்டித்) தர்க்கித்துக் கொண்டிருந்தீர்கள்; ஆனால் அல்லாஹ் நீங்கள் மறைத்ததை வெளியாக்குபவனாக இருந்தான் (என்பதை நினைவு கூருங்கள்).

72. தேவையற்ற சடங்கு சம்பிரதாயங்களை விட்டுவிட அறிவுறுத்தும்போது இந்த அளவிற்கு தர்க்கங்களும் விவாதங்களும் செய்த நீங்கள், மற்ற விஷயங்களில் உங்களுடைய அணுகுமுறை எவ்வாறு இருந்தது? ஒருமுறை ஒருவர் கொலை செய்யப்பட்டார். அது திட்டமிட்டு செய்யப்பட்ட கொலையாகும். அதன்பின் விசாரணை தொடங்கியதும் ஒருவருக்கொருவர் குற்றம் சுமத்தி தப்பிக்க முனைந்தீர்கள். செய்த குற்றத்தை ஒப்புக்கொள்ளும் ஒழுக்கமாண்பும் உங்களிடம் அறவே இருந்ததில்லை. ஆனால் கொலைக் குற்றத்திற்கு தக்க தண்டனை கொடுக்கப்படவேண்டும் என்பது அல்லாஹ்வின் திட்டமாகும். எனவே நீங்கள் மறைக்க முயன்றதை அலல்ாஹ்வின் நடைமுறை சட்டம் பகிரங்கப்படுத்த நாடியது.

73 فَقُلْنَا اضْرِبُوهُ بِبَعْضِهَا ۚ كَذَٰلِكَ يُحْيِي اللَّهُ الْمَوْتَىٰ وَيُرِيكُمْ آيَاتِهِ لَعَلَّكُمْ تَعْقِلُونَ

73. "(அறுக்கப்பட்ட அப்பசுவின்) ஒரு துண்டால் அ(க்கொலை யுண்டவனின் சடலத்)தில் அடியுங்கள்" என்று நாம் சொன்னோம். இவ்வாறே அல்லாஹ் இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறான்; நீங்கள் (நல்ல) அறிவு பெறும் பொருட்டுத் தன் அத்தாட்சிகளையும் அவன் (இவ்வாறு) உங்களுக்குக் காட்டுகிறான்.

73. எனவே நடந்து முடிந்த கொலைச் சம்பவத்தைப் பற்றி ஒன்றன் பின் ஒன்றாக சம்பந்தப்பட்டவர்களிடம் தனித்தனியாக விசாரிக்கப்பட்டது. இவ்வாறாக விசாரணையில் கிடைத்த தகவல்களை சேகரித்து கோர்வைபடுத்திய போது கொலையுண்டவன் மற்றும் கொலையாளியைப் பற்றிய துப்பு துலங்கியது. இப்படியாக செத்து மடிந்துப் போன உண்மை உயிர்பெற்று வெளிச்சத்திற்கு வந்துவிட்டது. மேலும் குற்றவாளிகளை தப்பிக்கவிடாமல் தக்க தண்டனை அளிப்பதனால் குற்றங்கள் குறைந்து, மிகச் சிறந்த சமுதாயமாக விளங்கும். (பார்க்க: 2/179) நீங்கள் அறிவுபெறும் பொருட்டு இப்படிப்பட்ட வழிமுறைகள் உங்களுக்கு எடுத்துரைக்கப்படுகின்றன.

74 ثُمَّ قَسَتْ قُلُوبُكُمْ مِنْ بَعْدِ ذَٰلِكَ فَهِيَ كَالْحِجَارَةِ أَوْ أَشَدُّ قَسْوَةً ۚ وَإِنَّ مِنَ الْحِجَارَةِ لَمَا يَتَفَجَّرُ مِنْهُ الْأَنْهَارُ ۚ وَإِنَّ مِنْهَا لَمَا يَشَّقَّقُ فَيَخْرُجُ مِنْهُ الْمَاءُ ۚ وَإِنَّ مِنْهَا لَمَا يَهْبِطُ مِنْ خَشْيَةِ اللَّهِ ۗ وَمَا اللَّهُ بِغَافِلٍ عَمَّا تَعْمَلُونَ

74. இதன் பின்னரும் உங்கள் இதயங்கள் இறுகி விட்டன; அவை கற்பாறையைப் போல் ஆயின; அல்லது, (அதை விடவும்) அதிகக் கடினமாயின; (ஏனெனில்) திடமாகக் கற்பாறைகள் சிலவற்றினின்று ஆறுகள் ஒலித்தோடுவதுண்டு; இன்னும், சில பிளவுபட்டுத் திடமாக அவற்றினின்று தண்ணீர் வெளிப்படக் கூடியதுமுண்டு; இன்னும், திடமாக அல்லாஹ்வின் மீதுள்ள அச்சத்தால் சில (கற்பாறைகள்) உருண்டு விழக்கூடியவையும் உண்டு; மேலும், அல்லாஹ் நீங்கள் செய்து வருவது பற்றி கவனிக்காமல் இல்லை.

74. இவையாவும் காலம்காலமாய் நிகழ்ந்துவந்த வரலாற்றுச் சம்பவங்களாகும். சில காலக்கட்டங்களில் இறை வழிகாட்டுதல் அடிப்டையில் வாழ்ந்து வளர்ச்சியும் அடைந்தீர்கள். சில காலக்கட்டங்களில் அவற்றை நிராகரித்து அழிவுகளையும் சந்தித்தீர்கள். இப்படியாக நூற்றாண்டுகள் பல உருண்டோடின. இறுதியில் இறை வழிகாட்டுதலை ஒட்டுமொத்தமாக புறந்தள்ளிவிட்டீர்கள். (பார்க்க: 57/16) இதனால் உங்கள் இதயங்கள் கற்பாறைப்போல் இறுகிவிட்டன. அந்த கற்பாறைகளில் சிலவற்றிலாவது ஆறுகள் ஒலித்து ஓடுவதுண்டு; இன்னும் சில பிளவுபட்டுத் திடமாக அவற்றினின்று தண்ணீர் கசிவதுண்டு; இன்னும் சில கற்பாறைகள் அல்லாஹ் நிர்ணயித்துள்ள

விதிமுறைகளின்படி கடினத்தன்மை குறைந்து பள்ளத்தை நோக்கி உருண்டோடுவதுண்டு. ஆனால் உங்கள் மனமோ மக்கள் பெருந்துன்பத்தில் சிக்கி தவிப்பதைக் கண்டு சிறிதளவும் இரக்கம் கொள்வதில்லை. அந்த பாறைகளைவிட மோசம். நீங்கள் செய்து வரும் செயல்கள் அல்லாஹ்வின் கண்காணிப்பிலிருந்து தப்பித்துக்கொள்ளும் என்று ஒருபோதும் எண்ணிக்கொள்ளாதீர்கள்.

சமூக நலத்தொண்டர்களே ! இலட்சியவாதிகளே ! நீங்களும் இவர்களைப்போல் ஆகிவிடவேண்டாம்.

75 اَفَتَطْمَعُوْنَ اَنْ يُّؤْمِنُوْا لَكُمْ وَقَدْ كَانَ فَرِيْقٌ مِّنْهُمْ يَسْمَعُوْنَ كَلٰمَ اللّٰهِ ثُمَّ يُحَرِّفُوْنَهٗ مِنْ بَعْدِ مَا عَقَلُوْهُ وَهُمْ يَعْلَمُوْنَ ○

75. (முஸ்லிம்களே!) இவர்கள் (யூதர்கள்) உங்களுக்காக நம்பிக்கை கொள்வார்கள் என்று ஆசை வைக்கின்றீர்களா? இவர்களில் ஒருசாரரார் இறைவாக்கைக் கேட்டு; அதை விளங்கிக் கொண்ட பின்னர், தெரிந்து கொண்டே அதை மாற்றி விட்டார்கள்.

75. குர்ஆனிய இலட்சியவாழ்வின் பக்கம் அழைப்பு பணியில் ஈடுபட்டிருக்கும் தொண்டர்களே ! உங்கள் இலட்சிய கொள்கையின்பால் வேதமுடைய இவர்(யூதர்)களும் வந்துவிட வேண்டும் என்றும், மனித மாண்புகள் பாழாவதிலிருந்து காப்பாற்றப்பட வேண்டும் என்றும் உங்கள் மனம் துடிக்கிறது. மேலே விவரிக்கப்பட்ட அவர்களுடைய போக்குகள் அவர்களை இந்த இலட்சியங்களின் பக்கம் வருவதிலிருந்து தடுக்கிறது. அவர்கள் அறியாமையில் இப்படி செய்கிறார்கள் என்று நினைத்துக் கொண்டீர்களா? இல்லை. அவர்களின் மத குருமார்ககளுக்கு எல்லா விஷயங்களும் நன்கு தெரியும். நன்கு அறிந்துக் கொண்டே வேதத்தில் மாற்றங்களை செய்து அதிலுள்ள விஷயங்களை தம் கற்பனை கதைகளுடன் கலந்து புதிய கருத்துக்களை சொல்லிவருகிறார்கள் (பார்க்க: 2 : 79).

76 وَاِذَا لَقُوا الَّذِيْنَ اٰمَنُوْا قَالُوْٓا اٰمَنَّا ۚ وَاِذَا خَلَا بَعْضُهُمْ اِلٰى بَعْضٍ قَالُوْٓا اَتُحَدِّثُوْنَهُمْ بِمَا فَتَحَ اللّٰهُ عَلَيْكُمْ لِيُحَآجُّوْكُمْ بِهٖ عِنْدَ رَبِّكُمْ ؕ اَفَلَا تَعْقِلُوْنَ ○

76. மேலும் அவர்கள் ஈமான் கொண்டவர்களைச் சந்திக்கும்போது, "நாங்களும் ஈமான் கொண்டிருக்கிறோம்" என்று சொல்கிறார்கள்; ஆனல் அவர்களுள் சிலர் (அவர்களுள்) சிலருடன் தனித்திடும்போது, "உங்கள் இறைவன் முன் உங்களுக்கு எதிராக அவர்கள் வாதாடு வதற்காக அல்லாஹ் உங்களுக்கு அறிவித்துத் தந்த (தவ்ராத்)தை அவர்களுக்கு எடுத்துச் சொல்கிறீர்களா? (இதை) நீங்கள் உணரமாட்டீர்களா?" என்று (யூதர்கள் சிலர்) கூறுகின்றனர்.

76. இப்படிப்பட்டவர்களை நியாயஸ்தர்கள் – உண்மையாளர்கள் என்று நினைத்துக் கொண்டீர்களா? அவர்கள் உங்களை சந்திக்கும்போது தம்மை நல்லவர்கள் போல் காட்டிக் கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் தம் தோழர்களுடன் தனிமையில் சந்திக்கும்போது, "இந்த இலட்சியவாதிகள் கூட்டத்துடன் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதில் எந்த தவறும் இல்லை. ஆனால் அதே சமயம் அவர்களுடன் முன் எச்சரிக்கையுடன் இருத்தல் அவசியம். இல்லாவிடில் நம் வேதத்தில் (தவ்ராத்தில்) உள்ள சில வசனங்களை ஆதாரமாக மேற்கோள்காட்டி நாம் செய்து வரும் செயல்களுக்கு எதிராக வாதிடுவார்கள். எனவே நாம் இந்த விஷயத்தை மறைக்க முடியுமா? இதை நன்கு மனதில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும்.'' என்று பேசிக்கொள்கிறார்கள்.

77 اَوَلَا يَعْلَمُوْنَ اَنَّ اللّٰهَ يَعْلَمُ مَا يُسِرُّوْنَ وَمَا يُعْلِنُوْنَ ○

77. அவர்கள் மறைத்து வைப்பதையும், அவர்கள் வெளிப்படுத்துவதையும் நிச்சயமாக அல்லாஹ் நன்கறிவான் என்பதை அவர்கள் அறிய மாட்டார்களா?

77. அவர்களிடமுள்ள வேதம் இறைவன் புறத்திலிருந்து இறக்கி அருளப்பட்டவையே. இந்த குர்ஆனும் அதே இறைவனிடமிருந்து இறக்கியருளப்பட்டது. அப்படியிருக்கும் போது அதிலுள்ளவற்றை மக்களுக்கு எடுத்துச் சொல்லாமல் அவற்றில் சிலவற்றை மறைக்கலாமா?

அல்லாஹ்விடம் ஏதாவது ஒரு விஷயத்தை மறைக்கமுடியுமா? அவர்கள் மறைத்து வைத்திருப்பதும் வெளிப்படுத்திவருவதும் அல்லாஹ்விற்கு வெட்ட வெளிச்சமே. இதையும் அவர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டுமா?

78 وَمِنْهُمْ أُمِّيُّونَ لَا يَعْلَمُونَ الْكِتَابَ إِلَّا أَمَانِيَّ وَإِنْ هُمْ إِلَّا يَظُنُّونَ ○

78. மேலும் அவர்களில் எழுத்தறிவில்லா தோரும் இருக்கின்றனர்; கட்டுக் கதைகளை (அறிந்து வைத்திருக்கிறார்களே) தவிர வேதத்தை அறிந்து வைத்திருக்கவில்லை. மேலும் அவர்கள் (ஆதாரமற்ற) கற்பனை செய்வோர் களாக அன்றி வேறில்லை.

78. அவர்கள் மற்றவர்களிடம்தான் அப்படி சூழ்ச்சிகளை செய்து வருவதாக எண்ணிக் கொள்ளாதீர்கள். அவர்கள் தங்கள் சமூகத்தவர்களிடமும் இப்படித்தான் செயல்பட்டு வருகிறார்கள். குறிப்பாக அவர்களுள் ஒரு சிலர் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் இருக்கிறார்கள். வேதநூலை படித்து இவர்களால் எதுவும் தெரிந்துக்கொள்ள முடியாது என்ற தைரியத்தில் அவர்களிடம் கற்பனையாக உருவாக்கி வைத்துள்ள சுவாரசியமான கதைகளை கூறி மயக்குவதும் மூட நம்பிக்கைகளின் கற்பனை கதைகளையும் (Epics) யூகமாக கூறி ஆனந்த வெள்ளத்தில் மிதக்க வைப்பதும் அவர்களுடைய பாணியாக இருக்கிறது. வாழ்வதற்கான வழிகாட்டுதல் பற்றியும் அதற்கான சட்டதிட்டத்தைப் பற்றியும் யாராவது கேட்டால் பெரியார்களின் செயல்முறைப் பற்றியும் மூதாதையர்கள் கூற்றையும் மேற்கோள்காட்டி அவர்களை திசை திருப்பிவிடுகிறார்கள்.

79 فَوَيْلٌ لِّلَّذِينَ يَكْتُبُونَ الْكِتَابَ بِأَيْدِيهِمْ ثُمَّ يَقُولُونَ هَٰذَا مِنْ عِندِ اللَّهِ لِيَشْتَرُوا بِهِ ثَمَنًا قَلِيلًا ۖ فَوَيْلٌ لَّهُم مِّمَّا كَتَبَتْ أَيْدِيهِمْ وَوَيْلٌ لَّهُم مِّمَّا يَكْسِبُونَ ○

79. அற்பக் கிரயத்தைப் பெறுவதற்கா கத் தம் கரங்களாலே நூலை எழுதிவைத்துக் கொண்டு; பின்னர் அது அல்லாஹ்விடமிருந்து வந்தது என்று கூறுகிறார்களே, அவர்களுக்கு கேடுதான்! அவர்களுடைய கைகள் இவ்வாறு எழுதியதற்காகவும் அவர்களுக்குக் கேடுதான்; அதிலிருந்து அவர்கள் ஈட்டும் சம்பாத்தியத் திற்காகவும் அவர்களுக்குக் கேடுதான்!

79. அவர்களுடைய மார்க்க அறிஞர்கள் (குருமார்கள்) வேதத்தில் சுட்டிகாட்டப்பட்டுள்ள சரியான வாழ்க்கை வழிகாட்டுதலை மக்களிடம் எடுத்துரைக்காமல், தங்கள் மனோஇச்சைக்கு ஒப்ப தாங்களே சில நூல்களை எழுதி வைத்துக்கொண்டு, படிப்பு அறிவில்லா பாமரர்களிடம் இவையாவும் அல்லாஹ்வின் கூற்று அல்லது இறைத்தூதர்களின் கூற்று என்று சொல்லி ஏமாற்றி வருகிறார்கள். இவ்வாறாக அவர்கள் வருவாயை ஈட்டி அனுபவித்து வருகிறார்கள். இப்படி தங்கள் சுய சிந்தனையின்படி உருவாக்கிய வழிமுறைகளாலும் அதன் மூலமாக ஈட்டிக்கொண்ட சம்பாத்தியமும் அவர்ளையும் அவர்கள் சார்ந்த சமுதாயங்களையும் அழிவின் பக்கம் இழுத்துச்செல்கின்றன என்பதை அவர்களால் புறிந்துக்கொள்ள முடியாதது ஆச்சரியமே!!

80 وَقَالُوا لَن تَمَسَّنَا النَّارُ إِلَّا أَيَّامًا مَّعْدُودَةً ۚ قُلْ أَتَّخَذْتُمْ عِندَ اللَّهِ عَهْدًا فَلَن يُخْلِفَ اللَّهُ عَهْدَهُ ۖ أَمْ تَقُولُونَ عَلَى اللَّهِ مَا لَا تَعْلَمُونَ ○

80. "ஒரு சில நாட்கள் தவிர எங்களை நரக நெருப்புத் தீண்டாது" என்று அவர்கள் கூறுகிறார்கள். "அல்லாஹ்விடமிருந்து அப் படி ஏதேனும் உறுதிமொழி பெற்றிருக்கிறீர் களா? அப்படியாயின் அல்லாஹ் தன் உறுதி மொழிக்கு மாற்றம் செய்யவே மாட்டான்; அல்லது நீங்கள் அறியாததை அல்லாஹ் சொன்னதாக இட்டுக் கட்டிக் கூறுகின்றீர் களா?" என்று (நபியே! அந்த யூதர்களிடம்) நீர் கேளும்.

80. அவர்கள் செய்துவரும் நயவஞ்சக செயல்கள் மற்றவர்களை மட்டுமா பாதிக்கிறது? இப்படி செய்துவரும் அவர்களையும் பாதிக்கத்தான் செய்கிறது. அந்த பாதிப்பிலிருந்து அவர்களாலும் தப்பிக்க முடிவதில்லை. ஆனால் என்ன செய்வது? தம்மை தட்டிக் கேட்க ஆளில்லை என்ற மிதப்பில் இங்கேயும் ஒரு கற்பனை கதையை தயாரித்து வைத்துள்ளார்கள். அதாவது ஒரு சில நாட்களைத் தவிர எங்களை நரக நெருப்பு தீண்டாது என்று கூறி வருகிறார்கள். அதாவது நிரந்தரமாக நரகத்தில் இருக்கமாட்டோம் என்கிறார்கள். அவர்களுடைய இசட்சகர் வந்து பறிந்துரை செய்து அவர்களை அல்லாஹ்விடமிருந்து

காப்பாற்றிவிடுவார். அது வரையில்தான் நாம் நரகத்தில் இருப்போம் என்கிறார்கள். இவர்களுடைய இந்த கூற்றிற்கு இவர்களிடம் ஏதாவது ஆதாரம் இருக்கிறதா? அல்லாஹ்விடமிருந்து அப்படி ஒரு ஒப்பந்தத்தை பெற்றிருக்கிறீர்களா?'' என்று அவர்களிடம் கேளுங்கள். உண்மையிலேயே அப்படி ஒரு ஒப்பந்தம் செய்திருந்தால் அது அல்லாஹ்வின் நடைமுறை சட்டத்தில் கண்டிப்பாக இருக்கும். ஏனெனில் அல்லாஹ்வின் வாக்கு எப்போதுமே மாறாது. ஆக அப்படி ஒரு ஒப்பந்தம் எங்கும் யாரிடமும் செய்யப்படவில்லை. அல்லாஹ்வைப் பற்றி யாதொரு ஞானமும் இல்லாமல் இப்படி கூறிவருவது நியாமா?

81 بَلٰى مَنْ كَسَبَ سَيِّئَةً وَّاَحَاطَتْ
بِهٖ خَطِيْٓـــَٔتُهٗ فَاُولٰٓـــِٕكَ اَصْحٰبُ النَّارِ‌ۚ
هُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○

*81. அப்படியல்ல! எவர் தீமையைச் சம்பாதித்து, அந்தக் குற்றம் அவரைச் சூழ்ந்து கொள்கிறதோ, அத்தகையோர் நரகவாசிகளே; அவர்கள் அ(ந் நரகத்)தில் என்றென்றும் இருப்பார்கள்.*

81. அல்லாஹ்விடம் பரிந்துரைகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன என்று யார் உங்களிடம் சொன்னது? அல்லாஹ்வை பொருத்தவரை பரிந்துரை என்ற பேச்சிற்கே இடமில்லை. எந்த சமூகத்தவர்கள் அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களுக்கு எதிராக செயல்பட்டு அதனால் சமுதாயத்தில் தீயச் செயல்கள் வளர்ந்து வறுமை, கொலை, கொள்ளை போன்ற மோசமான நிலமை பெருகிவிடுமோ அந்த சமுதாயம் அழிவை சந்தித்தே தீரும். இதிலிருந்து மீள முடியாது. இதுதான் அல்லாஹ்வின் நிரந்தர நிலைமாறா நடைமுறை சட்டமாகும்.

82 وَالَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ
اُولٰٓـــِٕكَ اَصْحٰبُ الْجَـنَّةِ‌ۚ هُمْ فِيْهَا
خٰلِدُوْنَ ○

*82. எவர் நம்பிக்கை கொண்டு நற்கருமங்களைச் செய்கிறார்களோ, அவர்கள் சுவர்க்க வாசிகள்; அவர்கள் அங்கு என்றென்றும் இருப்பார்கள்.*

82. மாறாக எந்த சமுதாயம் அல்லாஹ் வகுத்துத்தந்துள்ள வாழ்க்கை வழிகாட்டுதலை மனதார ஏற்று அதன் அடிப்படையில் ஆக்கப்பூர்வமான செயல் திட்டங்களை வகுத்து திறமையுடன் செயல்படுமோ அந்த சமுதாயம் சுவன வாழ்க்கையை நிச்சயமாக பெற்றே தீரும். அவர்களுடைய உழைப்பிற்கு ஏற்ற பலன்கள் நிரந்தரமாக கிடைத்துக் கொண்டே இருக்கும்.

83 وَاِذْ اَخَذْنَا مِيْثَاقَ بَنِىْٓ اِسْرَآءِيْلَ
لَا تَعْبُدُوْنَ اِلَّا اللّٰهَ وَبِالْوَالِدَيْنِ
اِحْسَانًا وَّذِى الْقُرْبٰى وَالْيَتٰمٰى
وَالْمَسٰكِيْنِ وَقُوْلُوْا لِلنَّاسِ حُسْنًا
وَّاَقِيْمُوا الصَّلٰوةَ وَاٰتُوا الزَّکٰوةَ ؕ
ثُمَّ تَوَلَّيْتُمْ اِلَّا قَلِيْلًا مِّنْكُمْ وَ
اَنْتُمْ مُّعْرِضُوْنَ ○

83. பனிஇஸ்ராயீல் சமூகத்தாரை நோக்கி சொல்லப்படும் விஷயங்களனைத்தும் இக்காலத்து அனைத்து சமுதாயங்களுக்கும் பொருந்தும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

யாகூப் (Jacob) சந்ததியினரான பனிஇஸ்ராயில் மக்களிடம், அவர்கள் எடுக்கும் ஒவ்வொரு முயற்சிக்கும் தக்க பலன்கள் அளிப்பதாக அல்லாஹ்வின் புறத்திலிருந்து வாக்குறுதி வந்தது. அதே சமயம் அந்த சமூகத்தவர்களும் அல்லாஹ்வின் வழிகாட்டுதலைத் தவிர வேறு எந்த வழிமுறைகளையும் ஏற்று நடக்கமாட்டோம். அல்லாஹ்வின் கட்டளைக்கு மட்டுமே கட்டுப்படுவோம் என்று உறுதிமொழி அளித்தார்கள். அந்த உறுதிமொழியின் அடிப்படையில் வயதான பெற்றோர்களிடத்தில் பணிவோடும் அன்போடும் நடந்துக்கொள்வோம். இது தவிர உற்றார் உறவினர்களுடனும், சமுதாயத்தில் ஆதரவற்ற நிலையில்

## ருகூஃ 10

83. இன்னும் (நினைவு கூருங்கள்:) நாம் (யஃகூப் என்ற) இஸ்ராயீல் மக்களிடத்தில், "அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் - எதனையும் நீங்கள் வணங்கக்கூடாது; (உங்கள்) பெற்றோருக்கும், உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், மிஸ்கீன்(களான ஏழை) களுக்கும் நன்மை செய்யுங்கள்; மனிதர்களிடம் அழகானதைப் பேசுங்கள்; மேலும் தொழுகையை முறையாகக் கடைப்பிடித்து வாருங்கள்; ஜக்காத்தையும் ஒழுங்காகக் கொடுத்து வாருங்கள்" என்று உறுதிமொழியை வாங்கினோம். ஆனால் உங்களில் சிலரைத் தவிர (மற்ற யாவரும் உறுதி மொழியை நிறைவேற்றாமல், அதிலிருந்து) புரண்டுவிட்டீர்கள், இன்னும் நீங்கள் புறக்கணித்தவர்களாகவே இருக்கிறீர்கள்.

இருப்பவர்களிடமும், சம்பாதிக்க இயலாமல் (Handicapped) கஷ்டப்படுபவர் களிடத்திலும் பணிவோடும் அன்போடும் நடந்துக்கொள்வோம். மேலும் அவர்களுடைய குறைகளை அழகிய முறையில் தீர்த்து வைப்போம் என்றும் உறுதிமொழி எடுத்துக்கொண்டார்கள். இவைதான் அமலெ சாலிஹாத் என்னும் நற்காரியங்களாகும்.

இதுமட்டுமின்றி பொதுமக்களிடம் எப்போதும் நல்லமுறையில் பேசி பழகுவோம். அழகியமுறையில் நற்செயல்களை செய்துவரும்படி அவர்களிடம் உபதேசிப்போம். மேலும் சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரும் இறை நெறிமுறைகளை முழு அளவில் கடைபிடிக்க அமைப்புகளை (ஸலாத்தை) ஏற்படுத்தும்படியும் சமூக வளர்ச்சிக்காக தேவைப்படும் அனைத்து வசதிகளையும் செய்து (ஜகாத்) கொடுக்கும்படியும் அறிவுறுத்தி வருவோம் என்றும் உறுதிமொழி அளித்தார்கள். ஆனால் இப்படி ஒப்பந்தங்களை செய்துக் கொண்டபின் அவற்றை காலப்போக்கில் அலட்சியமாக புறக்கணித்துவிட்டு வேறு வழிமுறைகளை கடைப்பிடிக்க ஆரம்பித்துவிட்டார்கள். இவை எல்லாம் தற்செயலாக நடந்த விஷயமல்ல. அல்லாஹ்வின் வழிமுறைகளை அலட்சியப்படுத்தவே அவர்கள் மனம் நாடியது. அதனால் அவர்கள் புறக்கணித்தார்கள்.

84 وَإِذْ أَخَذْنَا مِيثَاقَكُمْ لَا تَسْفِكُونَ
دِمَاءَكُمْ وَلَا تُخْرِجُونَ أَنْفُسَكُمْ
مِنْ دِيَارِكُمْ ثُمَّ أَقْرَرْتُمْ وَأَنْتُمْ
تَشْهَدُونَ ○

84. இன்னும் (நினைவு கூருங்கள்:) "உங்களிடையே இரத்தங்களைச் சிந்தாதீர்கள்; உங்களில் ஒருவர் மற்றவரை தம் வீடுகளை விட்டும் வெளியேற்றாதீர்கள்" என்னும் உறுதி மொழியை வாங்கினோம். பின்னர் (அதை) ஒப்புக்கொண்டீர்கள்; (அதற்கு) நீங்களே சாட்சியாகவும் இருந்தீர்கள்.

84. மேலும் அந்த உறுதிமொழியின்படி தங்களுக்கிடையே கொலை மற்றும் இரத்தகளறிகள் எதுவும் ஏற்படாதவாறு பார்த்துக்கொள்வதாகவும், ஏழைஎளிய மக்களை அவர்கள் இல்லங்களிலிருந்து வெளியேற்றமாட்டோம் என்றும் இறைத்தூதர் மூலமாக அல்லாஹ்விடம் ஒப்பந்தம் செய்தார்கள். அந்த ஒப்பந்தத்தைப்பற்றி உங்களுக்கு நன்றாக தெரியும். அதற்கு நீங்கள் சாட்சியாளர்களாகவும் இருக்கிறீர்கள்.

85 ثُمَّ أَنْتُمْ هٰٓؤُلَآءِ تَقْتُلُونَ أَنْفُسَكُمْ
وَتُخْرِجُونَ فَرِيقًا مِّنْكُمْ مِّنْ
دِيَارِهِمْ تَظٰهَرُونَ عَلَيْهِمْ بِالْإِثْمِ
وَالْعُدْوَانِ ؕ وَإِنْ يَّأْتُوكُمْ أُسٰرٰى
تُفٰدُوهُمْ وَهُوَ مُحَرَّمٌ عَلَيْكُمْ
إِخْرَاجُهُمْ ؕ أَفَتُؤْمِنُونَ بِبَعْضِ الْكِتٰبِ
وَتَكْفُرُونَ بِبَعْضٍ ۚ فَمَا جَزَآءُ مَنْ
يَّفْعَلُ ذٰلِكَ مِنْكُمْ إِلَّا خِزْيٌ فِي
الْحَيٰوةِ الدُّنْيَا ۚ وَيَوْمَ الْقِيٰمَةِ يُرَدُّونَ
إِلٰٓى أَشَدِّ الْعَذَابِ ؕ وَمَا اللّٰهُ بِغَافِلٍ
عَمَّا تَعْمَلُونَ ○

85. இதைப் பற்றி தெரிந்திருந்து என்ன பயன்? உங்களிடையே நடக்கிற விஷயங்களே வேறு விதமாக இருக்கின்றதே. உங்களிடையே சண்டை சச்சரவும் இரத்தகளரிகளும் ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றனவே. ஏழை எளிய மக்களை அவர்கள் இல்லங்களிலிருந்து வெளியேற்றிக் கொண்டுதான் இருக்கிறீர்கள். இப்படி சட்டவிரோத செயல்களில் ஈடுபடும் குற்றவாளிக்கு எதிராக தக்க நடவடிக்கை எடுப்பதற்கு பதிலாக நீங்களே அவர்களுக்கு துணைபோகிறீர்கள். இப்படியாக பிற்படுத்தப்பட்ட நலிந்த மக்கள் நசுக்கப்படுகிறார்கள். இதனால் ஏழை எளிய மக்கள் மென்மேலும் பரம ஏழைகளாக ஆகி வருகிறார்கள். இதனால் குற்றவாளிகளுக்கு மென்மேலும் குற்றங்கள் புரிய தைரியமும் ஏற்பட்டு குற்றங்கள் பெருகி வருகின்றன. இப்படி வீடுகளை இழந்தவர்களும்

பாதிக்கப்பட்டவர்களும் உங்கள் முன்கொண்டு வரப்பட்டால் பெரிய கடவுள் பக்தர்களைப் போலவும் கொடை வள்ளல்களைப் போலவும் அவர்களுக்கு கொஞ்சம் ஈட்டுத் தொகையை கொடுத்து விடுகிறீர்கள். அப்படி செய்வது பெரும் புண்ணிய காரியம் என்றும் நினைத்துக் கொள்கிறீர்கள். ஆனால் ஏழை எளிய மக்களை அவர்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றுவதும் அவர்களுடைய வாழ்க்கையை பாழாக்குவதும் பெருங்குற்றமாயிற்றே.

நீங்கள் வேதத்தின் ஒரு பகுதியினை ஏற்றுக்கொண்டு மறு பகுதியை ஏற்க மறுப்பதாக இதிலிருந்து தெளிவாகிறது. மனிதஉடலில் ஒரு சில பாகங்கள் முக்கியமானவை மற்றவை முக்கியமற்றவை என எடுத்துக்கொள்ள முடியுமா? அவை எல்லாம் ஒருங்கிணைந்து இருந்தால்தான் மனித ஆற்றல்கள் முழு அளவில் வளர்ச்சி பெறும் அல்லவா? இல்லையென்றால் சிரமப்பட வேண்டி இருக்கும். அதே போல் மனித வாழ்க்கைக்கான இறைவனின் கொள்கை கோட்பாடுகளை ஒட்டு மொத்தமாக ஏற்று செயல்படுத்தினால்தான் அந்த சமுதாயத்திற்கு முழு பலன்களும் கிடைக்கும். ஆக ஒரு சமுதாயம் இறை வழிகாட்டுதலின் ஒரு சிலவற்றை மட்டும் பின்பற்றுவதனால் ஒருபக்கம் வளர்ச்சியிருக்க, மறுபக்கம் பிரச்சனைகள் உருவாகிக்கொண்டே செல்லும். இதனால் அவர்களுடைய தற்காலிக வாழ்வும் பிரச்சனைக்குரியவையாகவும் வருங்கால வாழ்வும் பேரழிவுகளை ஏற்படுத்தும்.

இறை நெறிமுறைகளை அரைகுறையாக பின்பற்றுபவர்களின் இறுதி முடிவு இப்படியாகத்தான் இருக்கும்.

85. (இவ்வாறு உறுதிப்படுத்திய) நீங்களே உங்களிடையே கொலை செய்கின்றீர்கள்; உங்களிலேயே ஒரு சாராரை அவர்களுடைய வீடுகளிலிருந்து வெளியேற்றுகிறீர்கள்; அவர்கள்மீது அக்கிரமம் புரியவும், பகைமை கொள்ளவும் (அவர்களின் விரோதிகளுக்கு) உதவி செய்கிறீர்கள். வெளியேற்றப்பட்டவர்கள் (இவ்விரோதிகளிடம் சிக்கி) கைதிகளாக உங்களிடம் வந்தால், (அப்பொழுது மட்டும் பழிப்புக்கு அஞ்சி) நஷ்டஈடு பெற்றுக் கொண்டு (அவர்களை விடுதலை செய்து) விடுகிறீர்கள் - ஆனுல் அவர்களை (வீடுகளை விட்டு) வெளியேற்றுவது உங்கள் மீது ஹராமா(ன தடுக்கப்பட்ட செயலா)கும் (அப்படியென்றால்) நீங்கள் வேதத்தில் சிலதை நம்பி சிலதை மறுக்கிறீர்களா? எனவே உங்களில் இவ்வகையில் செயல்படுகிறவர்களுக்கு இவ்வுலக வாழ்வில் இழிவைத் தவிர வேறு கூலி எதுவும் கிடைக்காது. மறுமை (கியாம) நாளிலோ அவர்கள் மிகக் கடுமையான வேதனையின்பால் மீட்டப்படுவார்கள்; இன்னும் நீங்கள் செய்து வருவதை அல்லாஹ் கவனிக்காமல் இல்லை.

86 أُولَٰٓئِكَ الَّذِيْنَ اشْتَرَوُا الْحَيٰوةَ الدُّنْيَا بِالْاٰخِرَةِ ۚ فَلَا يُخَفَّفُ عَنْهُمُ الْعَذَابُ وَلَا هُمْ يُنْصَرُوْنَ ۟

86. மறுமை(யின் நிலையான வாழ்க்கை)க்குப் பகரமாக, (அற்பமான) இவ்வுலக வாழ்க்கையை விலைக்கு வாங்கிக் கொண்டவர்கள் இவர்கள்தாம்; ஆகவே இவர்களுக்கு (ஒரு சிறிதளவும்) வேதனை இலேசாக்கப்பட மாட்டாது; இவர்கள் உதவியும் செய்யப் படமாட்டார்கள்.

86. இப்படி அவர்கள் நடந்துக்கொள்வதற்கு காரணம் அவர்களிடமுள்ள சுயநலம்தான். தற்காலிக சுகவாழ்வை அனுபவிக்க வளம் மிக்க வருங்கால வாழ்க்கையை விற்றுவிடுபவர்கள் இவர்களே. மேலே சொன்னது போல அவர்களுடைய அழிவு அவர்களை கொஞ்சம்கொஞ்சமாக பிடித்துக்கொள்ளும். இறுதியாக வரவிருக்கும் பேரழிவிலிருந்து காப்பாற்ற எவரும் உதவி செய்யமாட்டார்கள்.

87 وَلَقَدْ اٰتَيْنَا مُوْسَى الْكِتٰبَ وَقَفَّيْنَا مِنْۢ بَعْدِهٖ بِالرُّسُلِ ۫ وَاٰتَيْنَا عِيْسَى ابْنَ مَرْيَمَ الْبَيِّنٰتِ وَاَيَّدْنٰهُ بِرُوْحِ الْقُدُسِ ؕ اَفَكُلَّمَا جَآءَكُمْ رَسُوْلٌۢ بِمَا لَا تَهْوٰٓى اَنْفُسُكُمُ اسْتَكْبَرْتُمْ ۚ فَفَرِيْقًا كَذَّبْتُمْ ۫ وَفَرِيْقًا تَقْتُلُوْنَ ۝

87. இறை வழிக்காட்டுதலின் சங்கிலித்தொடர் மூசா நபியோடு முற்றுப் பெறவில்லை. அவரைத் தொடர்ந்து பல இறைத்தூதர்கள் ஒன்றன் பின் ஒன்றாக வந்தார்கள். அதன் பின் இறுதியாக மர்யமின் குமாரரான ஈசா நபி வந்தார். அவருக்கும் தெளிவான சான்றுகளுடன் இறைநெறிமுறைகள் வளங்கப்பட்டன. அந்த கலப்படமற்ற வழிகாட்டுதல்கள் மூலம் அவருக்கு மனஉறுதிப்பாடு ஏற்பட்டு அதை நடைமுறைபடுத்த முற்பட்டார்.

## ருகூஃ 11

87. மேலும், நாம் மூஸாவுக்கு நிச்சயமாக வேதத்தைக் கொடுத்தோம். அவருக்குப் பின் தொடர்ச்சியாக (இறை) தூதர்களை நாம் அனுப்பினோம்; இன்னும், மர்யமின் குமாரர் ஈஸாவுக்குத் தெளிவான அத்தாட்சிகளைக் கொடுத்து, ரூஹுல் குதுஸி (என்னும் பரிசுத்த ஆத்மாவைக்) கொண்டு அவருக்கு வலுவூட்டினோம்; உங்கள் மனம் விரும்பாததை (நம்) தூதர் உங்களிடம் கொண்டு வரும்போதெல்லாம் நீங்கள் கர்வம் கொண்டு (புறக்கணித்து) வந்தீர்களல்லவா? சிலரை நீங்கள் பொய்ப்பித்தீர்கள்; சிலரைக் கொன்றீர்கள்.

அவருக்கு முன் வந்த இறைத்தூதர்கள் கொண்டுவந்த வேதங்களில் ஆயிரக்கணக்கான மாற்றங்களை செய்திருந்தீர்கள். (பார்க்க:2:79) இப்படியாக இறைத்தூதர்கள் சீர்திருத்தங்களை கொண்டு வரும்போதெல்லாம் அவை உங்கள் சடங்கு சம்பிரதாயங்களுக்கும் உங்கள் கலாச்சாரத்திற்கும் உங்கள் சுய லாபங்களுக்கும் எதிராக இருப்பதால் அவர்களை எதிர்க்கவே செய்தீர்கள். இப்படியாக நீங்கள் கர்வங்கொண்டு உங்கள் போக்கிலேயே நிலைத்திருந்தீர்கள். மேலும் ஒரு சில இறைத்தூதர்களை பொய்ப்பிக்கவே செய்தீர்கள். ஒரு சிலரின் உயிருக்கு ஆபத்தும் விளைவித்தீர்கள்.

இப்போது வந்துள்ள இந்த வேதமான குர்ஆன் விஷயத்திலும் இதே பாணியை கையாளுகிறீர்கள். உங்கள் மனோயிச்சையின்படி இதிலும் மாற்றங்கள் கொண்டுவரப்பட வேண்டும் என்று விரும்புகிறீர்கள்.(பார்க்க: 10:15, 11:13, 17:73 & 68 : 9)

88 وَقَالُوْا قُلُوْبُنَا غُلْفٌ ؕ بَلْ لَّعَنَهُمُ اللّٰهُ بِكُفْرِهِمْ فَقَلِيْلًا مَّا يُؤْمِنُوْنَ ○

88. இன்னும், அவர்கள் (யூதர்கள்) “எங்களுடைய இதயங்கள் திரையிடப்பட்டுள்ளன” என்று கூறுகிறார்கள். ஆனால் அவர்களுடைய (குஃப்ரு என்னும்) நிராகரிப்பின் காரணத்தால், அல்லாஹ் அவர்களைச் சபித்து விட்டான். ஆகவே, அவர்கள் சொற்பமாகவே ஈமான் கொள்வார்கள்.

88. இந்த குர்ஆனிய உபதேசங்களை பொருத்தவரை அவற்றைப் பற்றி சிந்தித்துப் பார்ப்பது ஒருபுறம் இருக்கட்டும். அவற்றை காது கொடுத்து கேட்கவே அவர்கள் தயாராக இல்லை. இந்த உபதேசங்களால் எங்களுக்கு எவ்வித பலனும் அளிக்காது என்கிறீர்கள். இப்படி கூறி வருவதால் தமக்கு பெருமை சேர்வதாக எண்ணிக்கொள்ள வேண்டாம் என்று அவர்களிடம் கூறிவிடுங்கள். எந்த விஷயத்தைப்பற்றியும் சிந்தித்து சரியானதா இல்லையா என்று ஆராய்ந்து ஏற்றுக் கொள்வது தான் அறிவின் முதல் பணியாகும். அப்படி செய்யாவிட்டால் அல்லாஹ்வின் நியதிப்படி அவர்களின் அறிவாற்றல் மற்றும் செயல்திறன்கள் மங்கிவிடுகின்றன. இதுவே அவர்களின் இதயம் திரையிடப்பட்டதற்கு அர்த்தமாகும். எனவே காலப்போக்கில் அவர்கள் இழிநிலைக்கு தள்ளப்படுவார்கள். ஆக அவர்களுள் மிகச் சிலரே இந்த உபதேசங்களை செவிசாய்த்து சிந்தித்து ஏற்றுக்கொள்கிறார்கள்.

89 وَلَمَّا جَآءَهُمْ كِتٰبٌ مِّنْ عِنْدِ اللّٰهِ مُصَدِّقٌ لِّمَا مَعَهُمْ ۙ وَكَانُوْا مِنْ قَبْلُ يَسْتَفْتِحُوْنَ عَلَى الَّذِيْنَ كَفَرُوْا ۖۚ فَلَمَّا جَآءَهُمْ مَّا عَرَفُوْا كَفَرُوْا بِهٖ ؗ فَلَعْنَةُ اللّٰهِ عَلَى الْكٰفِرِيْنَ ○

89. அவர்களிடம் இருக்கக்கூடிய வேதத்தை மெய்ப்படுத்தக்கூடிய (இந்த குர்ஆன் என்ற) வேதம் அவர்களிடம் வந்தது; இ(ந்த குர்ஆன் வருவ)தற்கு முன்

89. அவர்களிடமுள்ள வேதத்தின் உண்மையை எடுத்துக் கூறி அவற்றை உண்மைப்படுத்தக் கூடிய சமூக சீர்த்திருத்தவாதியான நபி வந்துள்ள நிலையில் இப்படி பேசி வருகிறார்கள். இந்த சமூக விரோதிகளை ஒழித்துக் கட்ட ஒரு மாவீரன் வரவேண்டும் என்று அல்லாஹ்விடம் இதற்குமுன் வேண்டிக் கொண்டிருந்தார்கள். (பார்க்க: 5:19). இப்போது இந்த வழிகாட்டுதல்கள் இறைவன் புறத்திலிருந்து வருகின்றன என்பதையும் அதனடிப்படையில் இறைத்தூதர் வந்திருப்பதையும் நன்கறிந்தே நிராகரித்து வருகிறார்கள். இதனால் ஏற்படும் பாதிப்பு அல்லாஹ்விற்கா? இல்லை. இப்படி நிராகரிப்பவர்களுக்கே. இதனால் வாழ்வின் உயர்நிலையை அவர்களால் அடைய முடியாமலே போய்விடுகிறது.

காஃபிர்களை வெற்றி கொள்வதற்காக (இந்த குர்ஆன் மூலமே அல்லாஹ்விடம்) வேண்டிக் கொண்டிருந்தார்கள். (இவ்வாறு முன்பே) அவர்கள் அறிந்து வைத்திருந்த(வேதமான)து அவர்களிடம் வந்த போது, அதை நிராகரிக்கின்றார்கள்; இப்படி நிராகரிப்போர் மீது அல்லாஹ்வின் சாபம் இருக்கிறது!

இந்த இறை வழிகாட்டுதல்களை கொண்டு வந்திருப்பவர் இஸ்ரவேலர் சமூகத்தை சேர்ந்தவரில்லை எ ன்பதைத் தவிர அவர்கள் நிராகரிப்பதற்கு வேறு எந்த காரணமும் இல்லை.

90 بِئْسَمَا اشْتَرَوْا بِهٖٓ اَنْفُسَهُمْ اَنْ يَّكْفُرُوْا بِمَآ اَنْزَلَ اللّٰهُ بَغْيًا اَنْ يُّنَزِّلَ اللّٰهُ مِنْ فَضْلِهٖ عَلٰى مَنْ يَّشَآءُ مِنْ عِبَادِهٖ ۚ فَبَآءُوْ بِغَضَبٍ عَلٰى غَضَبٍ ۗ وَلِلْكٰفِرِيْنَ عَذَابٌ مُّهِيْنٌ ○

90. தன் அடியார்களில் தான் நாடியவர் மீது தன் அருட்கொடையை அல்லாஹ் அருளியதற்காக பொறாமைப்பட்டு, அல்லாஹ் அருளியதையே நிராகரித்து தங்கள் ஆத்மாக்களை விற்று அவர்கள் பெற்றுக் கொண்டது மிகவும் கெட்டதாகும். இதனால் அவர்கள் (இறைவனுடைய) கோபத்திற்கு மேல் கோபத்திற்கு ஆளாகி விட்டார்கள். (இத்தகைய) காஃபிர்களுக்கு இழிவான வேதனை உண்டு.

90. உலகம் முழுவதும் பரவியுள்ள இறைவனின் அருட்கொடைகளும், செல்வ சிறப்புகளும், கண்ணியமும் கீர்த்தியும் இஸ்ரவேலர் சமுதாயத்திற்கு மட்டும்தான் சொந்தமானவை என்று அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். எனவே இறை வழிகாட்டுதலின் ஞானமும் தம் சமூகத்தை சேர்ந்தவருக்கு மட்டுமே கிடைக்கும் என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இறை வழிகாட்டுதல்கள் அல்லாஹ்வின் மஷீயத் என்னும் செயல்திட்டத்தின்படி யார் அதற்கு தகுதியானவரோ அவருக்குத்தான் அளிக்கப்படும். இது சமூகம், நாடு, மொழி, இனம், நிறம் ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டது.

இந்த ஒரு பொறாமையின் காரணமாகத்தான் அவர்கள் பிடிவாதமாக இந்த நபியை பின்பற்ற மறுத்து அல்லாஹ்வின் வழிகாட்டுதலையும் நிராகரிக்கிறார்கள். இது மட்டுமின்றி யாருக்கு எதிராய் எப்படி செயல்படுகிறோம் என்பதையும் சிந்தித்து பார்க்காமல் செயல்படுவதால், நாளுக்கு நாள் அவர்களுடைய மனோநிலை மோசமடைகிறது. இதனால் அவர்கள் வாழ்வில் கிடைக்கவேண்டிய உண்மையான முன்னேற்றம் மற்றும் நிலையான சந்தோஷங்களும் கிடைக்காமல் தம் அழிவிற்கு தாங்களே வழிவகுத்துக் கொள்கிறார்கள். இவ்வாறாக இவர்கள் தம் வருங்காலத்தின் சந்தோஷமான வாழ்விற்கு பதிலாக தீமையை சம்பாதித்துக்கொள்வது அவர்களுடைய துரதிஷ்டமே.

91 وَاِذَا قِيْلَ لَهُمْ اٰمِنُوْا بِمَآ اَنْزَلَ اللّٰهُ قَالُوْا نُؤْمِنُ بِمَآ اُنْزِلَ عَلَيْنَا وَيَكْفُرُوْنَ بِمَا وَرَآءَهٗ ۚ وَهُوَ الْحَقُّ مُصَدِّقًا لِّمَا مَعَهُمْ ۗ قُلْ فَلِمَ تَقْتُلُوْنَ اَنْۢبِيَآءَ اللّٰهِ مِنْ قَبْلُ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ ○

91. "அல்லாஹ் இறக்கி வைத்த (திருக்குர்ஆன் மீது) ஈமான் கொள்ளுங்கள்" என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டால், "எங்கள் மீது இறக்கப்பட்டதன் மீதுதான் நம்பிக்கை கொள்வோம்" என்று கூறுகிறார்கள்; அதற்கு பின்னால் உள்ளவற்றை நிராகரிக்கிறார்கள். ஆனால் இதுவோ (குர்ஆன்) அவர்களிடம் இருப்பதை உண்மைப் படுத்துகிறது. "நீங்கள் உண்மை விசுவாசிகளாக இருந்தால், ஏன் அல்லாஹ்வின் முந்திய நபிமார்களை நீங்கள் கொலை செய்தீர்கள்?" என்று அவர்களிடம் (நபியே!) நீர் கேட்பீராக.

91. "வாருங்கள்! அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறக்கியருளப்பட்ட இந்த வேதத்தின் சத்திய உண்மைகளைப் பற்றி சிந்தித்து மனதார ஏற்று அதன்படி செயல்படுவோம்." என்று அவர்களுக்கு அழைப்பு விடுத்தால், "நாங்கள் அதற்கு தயாராக இல்லை. எங்களிடமுள்ள வேத நூலை மட்டும்தான் நாங்கள் ஏற்றுக் கொள்வோம். இதைத் தவிர வேறு எதையும் பின்பற்ற மாட்டோம்." என்று கூறுகிறார்கள். இந்த குர்ஆன் அவர்களிடம் உள்ளவற்றை உண்மைப்படுத்தி காட்டுவதற்காகவே வந்துள்ளது.

" இஸ்ரவேலர் அல்லாத வேறு ஒரு சமூகத்தை சேர்ந்த ஒருவர் மீது இந்த வேதம் இறக்கியருளப்படுகிறது என்பதுதானே உங்களுடைய ஆட்சேபனை. சரி . அப்படியாயின் இதற்கு முன் உங்கள் சமூகத்திலிருந்தே வந்த பல இறைத்தூதர்களை இழிவுபடுத்தி அவர்களுடைய போதனைகளை மதிக்காமலும், ஒரு சில நபிமார்களின்

உயிருக்கு ஆபத்து விளைவித்ததாகவும் உங்கள் வரலாறு கூறுகிறதே. அது ஏன்? '' என்று அவர்களிடம் கேளுங்கள்.

92 وَلَقَدْ جَآءَكُمْ مُّوسٰى بِالْبَيِّنٰتِ ثُمَّ اتَّخَذْتُمُ الْعِجْلَ مِنْ بَعْدِهٖ وَاَنْتُمْ ظٰلِمُوْنَ ○

92. நிச்சயமாக மூஸா உங்களிடம் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டு வந்தார்; (அப்படியிருந்தும்) அதன்பின் காளை மாட்டை (இணை வைத்து) வணங்கினீர்கள்; (இப்படிச் செய்து) நீங்கள் அக்கிரமக்காரர்களாகி விட்டீர்கள்.

92. " உங்கள் சமுதாயத்திலிருந்து வந்த மற்ற இறைத்தூதர்களை விட்டுவிடுங்கள். உங்களிலிருந்தே வந்த மூசாவிடம் நீங்கள் நடந்துக்கொண்ட விதம் எப்படி ? ஒரே இறைவன் ஒரே சமுதாயம் ஒரே சட்டம் என்ற உலக ஒருமைப்பாடு என்ற அடிப்படையைக் கொண்ட உங்கள் வாழ்க்கை நெறிமுறைகளை அவர் தெள்ளத்தெளிவாக எடுத்துரைத்தார். ஆனால் நீங்களோ அவற்றை புறந்தள்ளி விட்டு காளைமாட்டின் வழிப்பாடு முறையை கையாள ஆரம்பித்து விட்டீர்கள். அப்படி செய்தது நியாயமான ஆதாரத்தின் அடிப்படையிலா? இல்லை. சமுதாயம் வேகமாக வளர்ச்சி பெற வேண்டும் என்பதற்கா?''

93 وَاِذْ اَخَذْنَا مِيْثَاقَكُمْ وَرَفَعْنَا فَوْقَكُمُ الطُّوْرَ ؕ خُذُوْا مَآ اٰتَيْنٰكُمْ بِقُوَّةٍ وَّاسْمَعُوْا ؕ قَالُوْا سَمِعْنَا وَعَصَيْنَا ۗ وَاُشْرِبُوْا فِىْ قُلُوْبِهِمُ الْعِجْلَ بِكُفْرِهِمْ ؕ قُلْ بِئْسَمَا يَاْمُرُكُمْ بِهٖۤ اِيْمَانُكُمْ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ ○

93. தூர் மலையை உங்கள் மேல் உயர்த்தி நாம் உங்களுக்குக் கொடுத்த (தவ்ராத்)தை உறுதியுடன் பற்றிக் கொள்ளுங்கள்; அதை செவியேற்றுக் கொள்ளுங்கள் என்று உங்களிடம் நாம் வாக்குறுதி வாங்கினோம். (அதற்கு அவர்கள்) நாங்கள் செவியேற்றோம்; மேலும் (அதற்கு) மாறு செய்தோம் என்று கூறினார்கள். மேலும் அவர்கள் நிராகரித்த காரணத்தினால் அவர்கள் இதயங்களில் காளைக்கன்றின் (பக்தி) புகட்டப்பட்டது. நீங்கள் முஃமின்களாக இருந்தால் உங்களுடைய ஈமான் எதை கட்டளையிடுகிறதோ அது மிகவும் கெட்டது என்று (நபியே!) நீர் கூறும்.

93. ஏற்கனவே 2/63 ல் குறிப்பிட்டது போல நீங்கள் 'தூர்' என்னும் மலை அடிவாரத்தில் வாழ்ந்துக் கொண்டிருந்த போது, தவ்ராத் என்னும் வாழ்க்கை நெறிமுறைகளைகள் கொண்ட வேதம் உங்களிடம் கொடுத்து அவற்றை என்றைக்கும் மனதில் பதிய வைத்துக்கொண்டு உறுதியாக திறம்பட பின்பற்றி வரும்படி அறிவுருத்தி உறுதிமொழியும் வாங்கப்பட்டது. அவற்றை நன்கு புரிந்துக்கொண்ட நீங்கள் அப்படியே செய்து வருவதாக வாக்குறுதியும் அளித்தீர்கள். ஆனால் அதன்பின் நடந்தது என்ன? அந்த நெறிமுறைகளை பின்பற்றுவதற்கு பதிலாக காலப்போக்கில் வேறு வழிமுறைகளை பின்பற்ற ஆரம்பித்துவிட்டீர்கள். அதன் விளைவாக காளைக்கன்று வழிப்பாட்டின் மீது உங்களுக்கு அளவுகடந்த பாசமும் பிணைப்பும் ஏற்பட்டுவிட்டது.

அவர்கள் காலங்காலமாக செய்துவந்த செயல்பாடுகள் எதை காட்டுகின்றன? இந்த குர்ஆனின் போதனைகளை ஏற்காமல் தம்மிடமுள்ள வேதத்தை மட்டும் பின்பற்றி வருவோம் என்று சொல்வதெல்லாம் வெறும் வாய்ப்பேச்சுதான் என்பதை காட்டுகின்றன. இப்படித்தான் வாழ்வோம் என்று அவர்களுடைய கலாச்சாரம் கூறுவதாக இருந்தால் பரிதாபத்திலும் பரிதாமே!''

94 قُلْ اِنْ كَانَتْ لَكُمُ الدَّارُ الْاٰخِرَةُ عِنْدَ اللّٰهِ خَالِصَةً مِّنْ دُوْنِ النَّاسِ فَتَمَنَّوُا الْمَوْتَ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ ○

94. ஆனால் அவர்களிடையே நடைபெற்று வரும் பெருமைப் பேச்சுக்களை கவனிக்கும் போது அவை வேறு விதமாய் இருக்கின்றன. நாங்கள் தான் இறைவனின் பாசத்திற்குரிய சமூகத்தவர்கள் (5:18). மறுமையின் வீடு எங்களுக்கு மட்டும்தான் சொந்தம். அதாவது நாங்கள்தான் சுவனவாசிகள் (2:80). இஸ்ரவேலர்கள் அல்லாத மற்ற சமூகத்தவர்களுக்கு சுவனத்தில் இடமிருக்காது (2:111).'' என்று பெருமை

94. (நபியே!) "இறைவனிடத்தில் உள்ள மறுமையின் வீடு (சுவர்க்கம்) உங்களுக்கே சொந்தமானது; வேறு மனிதர்களுக்குக் கிடையாது என்று உரிமை கொண்டாடுவதில் நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால், (அதைப் பெறுவதற்காக) மரணத்தை விரும்புங்கள்" என்று (நபியே!) நீர் சொல்வீராக.

அடித்துக் கொண்டிருக்கிறார்கள். "உங்களுடைய இந்த கூற்றில் உண்மையாளர்களாக இருந்தால் நீங்கள் ஒருபோதும் மரணத்தைக் கண்டு அஞ்சக் கூடாது. மாறாக நீங்கள மரணத்திற்காக ஏங்கிக் கொண்டிருக்க வேண்டும். எதற்கும் துணிந்து எங்களுடன் போர் களத்திலும் சந்திக்க தயாராக இருந்திருக்க வேண்டும். இப்படி மறைமுகமாக சதிகளை செய்துக் கொண்டிருக்கக் கூடாது."

மரணம் என்பதென்ன? இந்த உலகில் மனிதன் செய்துவந்த செயல்களின் பரிசோதனை (Examination) செய்வதேயாகும். (பாாக்க: 11:7 & 67: 2)

95 وَلَن يَتَمَنَّوْهُ أَبَدًا بِمَا قَدَّمَتْ
أَيْدِيهِمْ ۗ وَاللَّهُ عَلِيمٌ بِالظَّالِمِينَ ○

95. ஆனல், அவர்கள் கரங்கள் செய்த (பாவங்களை) அவர்கள் முன்னமேயே அனுப்பி வைத்திருந்த காரணத்தால் அவர்கள் மரணத்தை விரும்பவே மாட்டார்கள்; நிச்சயமாக அல்லாஹ் அந்த அக்கிரமக்காரர்களை நன்கு அறிந்தவனாகவே இருக்கிறான்.

95. ஆனால் நீங்கள் அவர்களை கவனித்துப் பார்த்தால் அவர்கள் மரணத்தை விரும்புவதாக ஒரு போதும் காணமாட்டீர்கள். ஏனெனில் தம் வருங்கால வாழ்க்கைக்காக அவர்கள் சம்பாதித்து வைத்திருப்பது என்ன என்பதை நன்கு அறிகிறார்கள். இப்படி இரட்டை வேடமிட்டு நடப்பவர்களின் நிலை அல்லாஹ்விற்கு மறைவானவை அல்ல.

96 وَلَتَجِدَنَّهُمْ أَحْرَصَ النَّاسِ عَلَىٰ
حَيَاةٍ ۚ وَمِنَ الَّذِينَ أَشْرَكُوا ۚ يَوَدُّ
أَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ أَلْفَ سَنَةٍ ۚ وَ
مَا هُوَ بِمُزَحْزِحِهِ مِنَ الْعَذَابِ
أَن يُعَمَّرَ ۗ وَاللَّهُ بَصِيرٌ بِمَا
يَعْمَلُونَ ○

96. அவர்கள், மற்ற மனிதர்களைவிட, இணை வைக்கும் முஷ்ரிக்குகளையும் விட (இவ்வுலக) வாழ்க்கையில் பேராசை உடையவர்களாக இருப்பதை (நபியே!) நீர் நிச்சயமாகக் காண்பீர்; அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம் ஆண்டுகள் வாழவேண்டும் என ஆசைப்படுகிறார்கள்; ஆனல் அப்படி அவர்களுக்கு நீண்ட வயது கொடுக்கப்பட்டாலும், அவர்கள் இறைவனின் தண்டனையிலிருந்து தப்ப முடியாது; இன்னும் அல்லாஹ் அவர்கள் செய்வதையெல்லாம் கூர்ந்து பார்ப்பவனாகவே இருக்கிறான்.

96. மரணத்தை தழுவ ஆசைப்படுவது ஒரு புறம் இருக்கட்டும். பிறதெய்வ வழிப்பாட்டை கடைபிடித்து வரும் மற்றவர்களைவிட இவர்களுக்கு இவ்வுலகில் நீண்டகாலம் உயிர் வாழவேண்டும் என்ற பேராசை அதிகம். அவர்களில் ஒவ்வொருவரும் ஆயிரம் ஆண்டுகள் வரை ஆயுட்காலம் கிடைத்திட வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். அப்படி ஆயுட்காலம் கொடுக்கப்படுவதால் என்ன நன்மை? அவர்கள் செய்து வரும் தீயச்செயல்களுக்கு பகரமாக ஆகிவிடுமா? இல்லை. அவர்கள் செய்துவரும் தீயச்செயல்களின் விளைவுகளிலிருந்து தப்பிக்க முடியுமா? இறைவன் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற நியதிப்படி அவர்களில் ஒவ்வொருவரையும் கண்காணித்துக்கொண்டே இருக்கிறது. அதனால் அவர்கள் செய்துவரும் செயல்களால் ஏற்படும் பாதிப்புகள் ஏற்பட்டு அதன் விளைவுகளை அந்த சமுதாயம் சந்தித்தே ஆகவேண்டும்.

97 قُلْ مَن كَانَ عَدُوًّا لِّجِبْرِيلَ
فَإِنَّهُ نَزَّلَهُ عَلَىٰ قَلْبِكَ بِإِذْنِ اللَّهِ
مُصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيْهِ وَهُدًى
وَبُشْرَىٰ لِلْمُؤْمِنِينَ ○

97. இஸ்ரவேலர் அல்லாத வேறு சமூகத்தை சேர்ந்த ஒருவருக்கு வஹீ என்னும் இறைவழிகாட்டுதல் இறக்கியருளும் ஜிப்ரயீல் (Gabriel - A System of Transmitting messages to messengers established by Almighty) மீது அவர்களுக்கு கோபமுள்ளது.(பார்க்க: 2:90) ஜிப்ரயீல் மீது கோபப்பட்டு என்ன பயன்? ஜிப்ரயீல் என்பது தன்னிச்சையாக செயல்படக் கூடிய ஒரு அமைப்பா? இல்லை. அல்லாஹ்வின் கட்டளைக்கிணங்க

## ருகூஉ 12

97. யார் ஜிப்ரீலுக்கு விரோதியாக இருக்கின்றனோ (அவன் அல்லாஹ்வுக்கும் விரோதி யாவான்) என்று (நபியே!) நீர் கூறும்; நிச்சயமாக அவர்தாம் அல்லாஹ்வின் கட்டளைக்கிணங்கி உம் இதயத்தில் (குர் ஆனை) இறக்கி வைக்கிறார்; அது, தனக்கு முன்னிருந்த வேதங்கள் உண்மை என உறுதிப்படுத்துகிறது; இன்னும் அது வழிகாட்டியாகவும், நம்பிக்கை கொண்டோருக்கு நன்மாராயமாகவும் இருக்கிறது.

இறைத்தூதரின் உள்ளத்தில் இறைச்செய்திகளை இறக்கியருள செய்யப்பட்ட ஒரு ஏற்பாட்டிற்கு பெயரல்லவா?. அதே அடிப்படையில்தான் இந்த இறுதி வேதமான திருக்குர்ஆனும் இறுதி தூதரான முஹம்மது நபி (பாாக்க: 33:40) மீது இறக்கி அருளப்பட்டுள்ளது. இந்த இறுதி வேதம் எவ்வளவு உண்மையாக உள்ளது என்றால். (1) அவர்களிடம் இருக்கும் வேத நூலிலுள்ள உண்மை விஷயத்தை எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது (2) இறை வழிகாட்டுதலின் சங்கிலித் தொடர் இஸ்மாயில் சந்ததியினரான அரேபிய சமுதாயத்திற்கு மட்டும் சொந்தமானவை அல்ல. மாறாக இந்த உலகின் எல்லா தரப்பு மக்களுக்கும் சொந்தமானவை ஆகும் (3) இந்த உலகின் எந்த பகுதியை சேர்ந்த இருந்தாலும் எந்த இனத்தவராக இருப்பினும் சரியே. இந்த இறை வழிகாட்டுதலை எந்த சமுதாயம் மனதார ஏற்று அதன்படி செயல்பட முன்வருமோ அவர்களுக்கு இது மனித வாழ்வின் உயர் இலட்சியத்தின் சரியான இலக்கை அடைய வழிகாட்டும். இதனால் சமுதாயத்தின் நிகழ்காலமும் வருங்காலமும் சுபிட்சமாய் இருக்கும்.

98 مَنْ كَانَ عَدُوًّا لِّلّٰهِ وَ مَلٰٓئِكَتِهٖ وَ رُسُلِهٖ وَجِبْرِيْلَ وَمِيْكٰلَ فَاِنَّ اللّٰهَ عَدُوٌّ لِّلْكٰفِرِيْنَ ○

98. எவன் அல்லாஹ்வுக்கும், அவனுடைய மலக்குகளுக்கும், அவனுடைய தூதர்களுக்கும், ஜிப்ரீலுக்கும், மீக்காயீலுக்கும் பகைவனாக இருக்கிறானோ, நிச்சயமாக (அவ்வாறு நிராகரிக்கும்) காஃபிர்களுக்கு அல்லாஹ் பகைவனாகவே இருக்கிறான்.

98. அவர்களுடைய இந்த எதிர்ப்பு ஜிப்ரயீலோடு நிற்கவில்லை. அதற்கும் ஒரு படி மேல் சென்று அல்லாஹ்வின் மீதே ஆட்சேபமுள்ளது. அல்லாஹ்வினால் வஹீ என்னும் இறைவழிகாட்டுதல்கள் இறக்கியருள செய்யப்பட்ட ஏற்பாடு (ஜிப்ரயீல்); உயிரினங்களின் படைப்பு மற்றும் அவற்றின் பரிபாலனத்திற்காக செய்யப்பட்ட எற்பாடுகள் (மீகாயீல்); ஆக இந்த பிரபஞ்சம் அனைத்தையும் படைத்து இயங்க வைக்கப்பட்டுள்ள எல்லா அமைப்புகள் (மலாயிகா) மீதும் எதிர்ப்புமுள்ளது. ஆக இறைவனின் அனைத்து செயல் திட்டங்களின் மீதும் எதிர்ப்பும் ஆட்சேபனைகளும் தெரிவிக்கப்படுவதாக அர்த்தமாகிறது. இப்படிப்பட்டவர்களுக்கு அல்லாஹ்வின் ஆதரவு கிடைப்பது எங்ஙனம்?

99 وَلَقَدْ اَنْزَلْنَآ اِلَيْكَ اٰيٰتٍ بَيِّنٰتٍ ۚ وَمَا يَكْفُرُ بِهَآ اِلَّا الْفٰسِقُوْنَ ○

99. (நபியே!) நிச்சயமாக நாம் மிகத் தெளிவான வசனங்களை உம்மீது இறக்கி வைத்திருக்கிறோம்; பாவிகளைத் தவிர (வேறு எவரும்) அவற்றை நிராகரிக்க மாட்டார்கள்.

99. அவர்களுடைய இந்த எதிர்ப்புகள் எல்லாம் பொறாமையின் அடிப்படையிலானதே அன்றி வேறில்லை முஹம்மத் என்னும் இறைத்தூதர் (பாாக்க: 47:2) மூலமாக அல்லாஹ்வால் தெள்ளத் தெளிவாக வஹீ என்னும் இறை வழிகாட்டுதல்கள் இறக்கி அருளப்படுகின்றன. வாழ்வின் உயர் இலட்சியத்தை அடைய விரும்பாமல் தீய வழியில் செல்ல நாடுவோர்கள்தான் இவற்றை ஏற்க மறுப்பார்கள்.

100 أَوَكُلَّمَا عَٰهَدُوا۟ عَهْدًا نَّبَذَهُۥ فَرِيقٌ مِّنْهُم ۚ بَلْ أَكْثَرُهُمْ لَا يُؤْمِنُونَ

*100.* மேலும், அவர்கள் உடன்படிக்கை செய்தபோதெல்லாம், அவர்களில் ஒரு பிரிவினர் அவற்றை முறித்து விடவில்லையா? ஆகவே, அவர்களில் பெரும்பாலோர் ஈமான் கொள்ள மாட்டார்கள்.

100. இதுவரையில் அவர்களுடைய இறைவழிபாடு மற்றும் எதிர்ப்புகள் விஷயத்தை பார்த்தோம். இப்போது அவர்களுடைய செயல்பாடுகளை பாருங்கள். அவர்கள் யாரிடமாவது தனிப்பட்ட முறையிலோ அல்லது சமூக அமைப்பின் சார்பாகவோ ஒப்பந்தம் செய்துக்கொண்டால் அவர்களில் ஒரு பிரிவினர் அதற்கு எந்த மதிப்பும் தராமல் ஒரு வெற்று காகிதமாக பாவித்து தூக்கி எறிந்துவிடுகிறார்கள். ஏனெனில் அவர்களிடம் எந்த ஒரு கொள்கையோ, கோட்பாடோ இருப்பதில்லை. அதில் அவர்களுக்கு உடன்பாடும் இருப்பதில்லை. எது எப்படியோ தங்கள் காரியம் நிறைவேறி இலாபம் கிடைத்தால் போதும். யார் எப்படி பாதிக்கப்பட்டாலும் பரவாயில்லை. இதுதான் அவர்களுடைய செயல்பாடு. இப்படிப்பட்டவர்களுக்கு உண்மை மீதும் சத்தியத்தின் மீதும் எவ்வாறு நம்பிக்கை வரும்?

101 وَلَمَّا جَآءَهُمْ رَسُولٌ مِّنْ عِندِ ٱللَّهِ مُصَدِّقٌ لِّمَا مَعَهُمْ نَبَذَ فَرِيقٌ مِّنَ ٱلَّذِينَ أُوتُوا۟ ٱلْكِتَٰبَ كِتَٰبَ ٱللَّهِ وَرَآءَ ظُهُورِهِمْ كَأَنَّهُمْ لَا يَعْلَمُونَ

*101.* அவர்களிடம் உள்ள (வேதத்)தை மெய்ப்பிக்கும் ஒரு தூதர் அல்லாஹ்விடமிருந்து அவர்களிடம் வந்த போது, வேதம் வழங்கப் பட்டோரில் ஒரு பிரிவினர் அல்லாஹ்வின் வேதத்தைத் தாங்கள் ஏதும் அறியாதவர்கள் போல் தங்கள் முதுகுக்குப் பின்னால் எறிந்து விட்டார்கள்.

101. மேலும் அவர்கள் இறைத்தூதருக்கு எதிராக பேசி வருவது புதிதான ஒன்றல்ல. காலங்காலமாக இப்படித்தான் செய்து வந்தார்கள். குறிப்பாக இதற்குமுன் அல்லாஹ்வின் தூதராக ஈசா (நபி) வந்தார். அவர்களிடமுள்ள இறை வேதத்தின் உண்மை விஷயங்களை நடைமுறைப்படுத்தவே அவரும் முற்பட்டார். அவர் பனிஇஸ்ராயீல் சமூகத்தை சேர்ந்தவர்தான். அவருடைய வருகையைப் பற்றி வேதங்களில் குறிப்புகள் இருக்கத்தான் செய்தன. இருப்பினும் அல்லாஹ்வின் மார்க்கத்திற்கு சொந்தக்காரர்கள் என பெருமை அடித்துக்கொள்ளும் அவர்களுள் ஒரு பிரிவினர், அல்லாஹவின் வழிகாட்டுதலை எதற்கும் பயன்படாத ஒன்றாக ஆக்கி புறந்தள்ளிவிட்டார்கள். அதன்பின் ஒன்றும் தெரியாதவர்கள் போல் நடந்து கொண்டார்கள். மேலும் அவரை கொலைசெய்யும் அளவிற்கு துணிந்துவிட்டனர்.

102 وَٱتَّبَعُوا۟ مَا تَتْلُوا۟ ٱلشَّيَٰطِينُ عَلَىٰ مُلْكِ سُلَيْمَٰنَ ۖ وَمَا كَفَرَ سُلَيْمَٰنُ وَلَٰكِنَّ ٱلشَّيَٰطِينَ كَفَرُوا۟ يُعَلِّمُونَ ٱلنَّاسَ ٱلسِّحْرَ وَمَآ أُنزِلَ عَلَى ٱلْمَلَكَيْنِ بِبَابِلَ هَٰرُوتَ وَمَٰرُوتَ ۚ وَمَا يُعَلِّمَانِ مِنْ أَحَدٍ حَتَّىٰ يَقُولَآ إِنَّمَا نَحْنُ فِتْنَةٌ فَلَا تَكْفُرْ ۖ فَيَتَعَلَّمُونَ مِنْهُمَا مَا يُفَرِّقُونَ بِهِۦ بَيْنَ ٱلْمَرْءِ وَزَوْجِهِۦ ۚ وَمَا هُم بِضَآرِّينَ بِهِۦ مِنْ أَحَدٍ إِلَّا بِإِذْنِ ٱللَّهِ ۚ وَيَتَعَلَّمُونَ مَا يَضُرُّهُمْ وَلَا يَنفَعُهُمْ ۚ وَلَقَدْ عَلِمُوا۟ لَمَنِ ٱشْتَرَىٰهُ مَا لَهُۥ فِى ٱلْءَاخِرَةِ مِنْ خَلَٰقٍ ۚ وَلَبِئْسَ مَا شَرَوْا۟ بِهِۦٓ أَنفُسَهُمْ ۚ لَوْ كَانُوا۟ يَعْلَمُونَ

102. இவ்வாறாக அவர்களுடைய செயல்பாடுகள் இறை வழிகாட்டுதலுக்கு எதிராகவே இருந்து வந்தன. அவர்கள் தாமாகவே உருவாக்கிவைத்திருந்த கட்டுக் கதைகளையே பின்பற்றி வந்தனர். அப்படிப்பட்ட கதைகளில் சுலைமான் நபி மற்றும் பாபிலோன் நகரத்து மலக்குகள் பற்றியுமாகும். சுலைமான் நபி இறைக் கட்டளைகளை விட்டுவிட்டு மாந்தரீக வழிமுறைகளை கையாண்டுவந்ததாக மக்களிடம் தவறான பிரச்சாரத்தை பறப்பிவந்தனர். இறைவனுடைய தூதராகிய சுலைமான் (நபி) ஒருபோதும் இறைக்கட்டளைக்கு மாறு செய்ததில்லை. அவர் ஏற்படுத்திய அல்லாஹ்வின் ஆட்சிக்கு எதிராக செயல்பட்ட சமூக விரோதிகள்தான் (ஷயாத்தீன்கள்) இவ்வாறு கதைகளை கட்டிவிட்டிருந்தனர். யூதர்களும் அந்த கதைகளை நம்பி பின்பற்றிவந்தனர்.

இதைத்தவிர இன்னொரு கட்டுக்கதையும் அவர்களிடையே பிரபலமாக பேசப்பட்டு வந்தது. அதாவது பாபிலோன் என்னும் நகருக்கு ஹாரூத், மாரூத் என்ற இரு மலக்குகளை இறைவன் அனுப்பியதாகவும் அவ்விருவர் மக்களுக்கு மாயமந்திர வித்தைகளை கற்றுக் கொடுத்ததாகவும் சொல்லிவந்தார்கள். மக்கள் அவ்விரு மலக்குகளிடம் சென்று மாயமந்திர கலைகளை கற்றுக்கொண்டு, தாயத்து, பில்லி, சூனியங்களை செய்து கணவன்

*102. அவர்கள் ஸுலைமானின் ஆட்சிக்கு எதிராக ஷைத்தான்கள் ஓதியவற்றையே பின் பற்றினார்கள்; ஆனால் ஸுலைமான் ஒரு போதும் நிராகரித்தவர் அல்லர்; ஷைத்தான் கள் தாம் நிராகரிப்பவர்கள்; அவர்கள் தாம் மனிதர்களுக்குச் சூனியத்தைக் கற்றுக் கொடுத்தார்கள்; இன்னும், பாபில் (பாபிலோன் என்னும் ஊரில்) ஹாரூத், மாரூத் என்ற இரண்டு மலக்குகளுக்கு இறக்கப்பட்டதையும் (தவறான வழியில் பிரயோகிக்கக் கற்றுக் கொடுத்தார்கள்). ஆனால் அவர்கள் (மலக்குகள்) இருவரும்: "நிச்சயமாக நாங்கள் சோதனையாக இருக்கிறோம்; (இதைக் கற்று) நீங்கள் நிராகரிக்கும் காஃபிர்கள் ஆகிவிடாதீர்கள்" என்று சொல்லி எச்சரிக்காத வரையில், எவருக்கும் இ(ந்த சூனியத்)தைக் கற்றுக் கொடுக்கவில்லை; அப்படியிருந்தும் கணவன் - மனைவியிடையே பிரிவை உண்டாக்கும் செயலை அவர்களிடமிருந்து கற்றுக்கொண்டார்கள். எனினும் அல்லாஹ்வின் கட்டளையின்றி அவர்கள் எவருக்கும் எத்தகைய தீங்கும் இதன் மூலம் இழைக்க முடியாது; தங்களுக்குத் தீங்கிழைப்பதையும், எந்த வித நன்மையும் தராததையுமே - கற்றுக் கொண்டார்கள். (சூனியத்தை) விலை கொடுத்து வாங்கிக் கொண்டவர்களுக்கு, மறுமையில் யாதொரு பாக்கியமும் இல்லை என்பதை அவர்கள் நன்கறிந்துள்ளார்கள். அவர்கள் தங்கள் ஆத்மாக்களை விற்றுப் பெற்றுக் கொண்டது கெட்டதாகும். இதை அவர்கள் அறிந்து கொள்ள வேண்டாமா?*

மனைவி இடையே பகைமை ஏற்படுத்தி வந்ததாகவும் சொல்லி வந்தார்கள். மேலும் "இந்த வித்தைகளை கற்றுத்தருவதற்கு முன், நாங்கள் குழப்பவாதிகள். இந்த வித்தைகளை கற்று நீங்கள் ஏன் கா..பிர்கள் ஆகிறீர்கள்?" என்று கற்றுக்கொள்ள வருபவர்களிடம் இந்த மலக்குகள் சொல்வார்களாம். இதனால் உங்களுக்கு பெரும் கேடு உண்டாகும் என்றும் எச்சரிக்கை செய்வார்களாம். இந்த எச்சரிக்கைக்கு பின்பும் நாங்கள் கற்றே தீருவோம் என்று அடம் பிடிப்பவர்களுக்கு மட்டும் இந்த சூனிய கலையை அந்த மலக்குகள் கற்று தருவார்களாம்.

எப்படி இருக்கிறது இந்த கதை? இறைவன் ஆக்கப்பூர்வமான காரியங்களுக்குத்தான் பிரபஞ்ச சக்திகளான மலக்குகளை படைத்தானே தவிர உண்மையில் பாபிலோன் என்னும் நகருக்கு ஹாரூத், மாரூத் என்ற மலக்குகளை இறைவன் அனுப்பவுமில்லை. அவ்வாறு அவர்கள் மக்களுக்கு மந்திர வித்தைகளை கற்றுத்தரவும் இல்லை. இவையாவும் அவர்களே உருவாக்கிய கட்டுக்கதைகளே.

இது போக மிஞ்சியிருப்பது தாயத்து, தகடு, பில்லி, சூனியம் போன்றவை. இவைகளால் யாரையும் நஷ்டமடையச் செய்ய முடியாது, பலன்களை ஈட்டித் தரவும் முடியாது. இந்த இலாபம் நஷ்டம் என்பதெல்லாம் அல்லாஹ்வால் நிர்ணயிக்கப்பட்ட நடைமுறை சட்டங்களின் (System) பிரகாரமே ஏற்படக்கூடியது. எல்லாவற்றிருக்கும் ஒரு காரணம் இருக்கிறது. ஒவ்வொரு மனித செயலுக்கும் ஒரு விளைவு இருக்கிறது. இந்த பிரபஞ்சத்தில் மாய மந்திர சக்திகள் பில்லி சூனியம் என்று ஒன்றுமில்லை. இவையெல்லாம் ஏமாற்று வேலைகள். தாயத்து தகடு சூனியம் போன்ற ஏமாற்று வேலைகளை கற்றுக் கொடுப்பவர்களுக்கும் கற்றுக் கொள்பவர்களுக்கும் உலக ஆதாயங்கள் கொஞ்சம் கிடைத்திடலாம். ஆனால் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் இந்த ஏமாற்று வேலை வருங்காலத்தில் சமுதாயத்திற்கு பெரும்பாதிப்பையே ஏற்படுத்துகின்றன என்ற உண்மை தெளிவாகிவிடும். வருங்கால நிரந்தர பலன்களுக்கு பதிலாக குறுகியகால பலன்களைத் தரும் செயல்களில் ஈடுபடுவது அறிவுடைமையாகாது. இந்த பேருண்மையை அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே.

விளக்கம் : *அதாவது கணவனுக்கு எதிராக மனைவியிடமோ அல்லது மனைவிக்கு எதிராக கணவனிடமோ நடத்தை சரியில்லை என்ற சந்தேகத்தை கிளப்பிவிட்டால் போதும். அவர்களிடையே சதா சந்தேகங்களும் சண்டை சச்சரவும் ஏற்பட்டுவிடும். இது எங்கும் நடக்கின்ற உண்மையாகும். எனவே பில்லி சூனியம் முறையை கையாளுவதால் ஆகப்போவது எதுவும் கிடையாது. இந்த பொய்யான நம்பிக்கை பலரை பாழாக்கி வருகிறது. இயற்கை சட்டங்களின் மீதும் உழைத்து பிழைக்க வேண்டும் என்பதன் மீதும் நம்பிக்கை இல்லாதவர்கள் மன உறுதி இல்லாதவர்கள்தான் இந்த வளையில் சிக்கி சீரழிகிறார்கள்.*

*103* وَلَوْ أَنَّهُمْ آمَنُوا وَاتَّقَوْا لَمَثُوبَةٌ مِّنْ عِندِ اللَّهِ خَيْرٌ ۖ لَّوْ كَانُوا يَعْلَمُونَ

*103. அவர்கள் நம்பிக்கை கொண்டு தங்களை காப்பாற்றிக் கொண்டால், அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் நற்கூலி மிகவும் மேலானதாக இருக்கும்; இதனை அவர்கள் அறிய வேண்டாமா?*

103. இப்படிப்பட்ட கற்பனைக் கதைகளைப் பின்பற்றி செல்வதைவிட இந்த குர்ஆனில் கவனம் செலுத்தி இதன்படி செயல்பட்டிருந்தால் இறைவன் வகுத்துள்ள மனித செயல்களுக்கேற்ற விளைவுகள் என்ற நடைமுறை சட்டம் (Allah's System) அவர்களை உயர்நிலைக்கு எடுத்துச்சென்றிருக்குமே! இதையும் அவர்கள் அறிந்திருக்க வேண்டுமே.

104 يَاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تَقُوْلُوْا رَاعِنَا
وَقُوْلُوا انْظُرْنَا وَاسْمَعُوْا ؕ وَلِلْكٰفِرِيْنَ
عَذَابٌ اَلِيْمٌ ○

## ருகூஃ 13

*104.* ஈமான் கொண்டோரே! நீங்கள் (நம் ரஸுலைப் பார்த்து இரண்டு அர்த்தம் கொடுக்கும் சொல்லாகிய) 'ராயினு' என்று சொல்லாதீர்கள். (இதற்குப் பதிலாக அன்புடன் நோக்குவீர்களாக என்னும் பொருளைத் தரும் சொல்லாகிய) 'உன்ளுர்னு' என்று கூறுங்கள். இன்னும், அவர் சொல்வதைக் கேளுங்கள். மேலும் காஃபிர்களுக்குத் துன்பம் தரும் வேதனையும் உண்டு.

104. இறை வழிகாட்டுதலை ஏற்று செயல்படுவோரே! இந்த இடத்தில் ஒரு முக்கியமான விஷயத்தை நினைவில் கொள்ளுங்கள். மூசாவிடம் அடிக்கடி, "நீங்கள் எங்களுக்காக இந்த வசதியை ஏற்படுத்திக் கொடுத்தால் நாங்கள் உம்முடைய பேச்சைக் கேட்டு நடப்போம்." என்று நிபந்தனைகளை விதித்து வந்தார்கள். இது முற்றிலும் தவறான அணுகுமுறையாகும். நீங்கள் இந்த ஆட்சியமைப்போடு இப்படிப்பட்ட கொடுக்கல் வாங்கல் முறையை வைத்துக் கொள்ளாதீர்கள். மாறாக, "சமூக அமைப்பின் தலைவரே! நாங்கள் வழிதவறிச் சென்று விடாதபடி இறை ஆட்சியமைப்பு மூலமாக எங்களை கண்காணித்து வாருங்கள். நாங்கள் உங்களுடைய கட்டளைகளுக்கு அடிபணிந்துச் செயல்படுவோம்." என்று தாழ்மையுடன் விண்ணப்பித்துகொள்ளுங்கள்.

மேலும் நீங்கள் பேசும்போது இருஅர்த்தங்களை தரக்கூடிய வகையில் வார்த்தைகளை பயன்படுத்தாதீர்கள். வார்த்தைகளை திரித்து பேசி உங்களுடைய உயர் பண்புகளை இழந்துவிடாதீர்கள். (4:46)

இவையெல்லாம் மேலோட்டமாக பார்க்கும்போது சாதாரணமான விஷயங்களாகத்தான் தெரியும். ஆனால் காலப்போக்கில் அவற்றால் ஏற்படக்கூடிய பாதிப்புகள் வெகுதூரம் வரை சென்றுவிடும். இந்த விஷயத்தை ஆரம்பக் கட்டத்திலேயே கவனிக்காமல் விட்டுவிட்டால் இறுதியில் நாட்டில் பிரச்சனைகள் பல ஏற்பட்டு அமைதியை சீர் குலைத்துவிடும்.

105 مَا يَوَدُّ الَّذِيْنَ كَفَرُوْا مِنْ اَهْلِ
الْكِتٰبِ وَلَا الْمُشْرِكِيْنَ اَنْ يُّنَزَّلَ
عَلَيْكُمْ مِّنْ خَيْرٍ مِّنْ رَّبِّكُمْ ؕ وَاللّٰهُ
يَخْتَصُّ بِرَحْمَتِهٖ مَنْ يَّشَآءُ ؕ
وَاللّٰهُ ذُو الْفَضْلِ الْعَظِيْمِ ○

*105.* அஹ்லுல் கிதாப் (வேதத்தையுடையவர்களில்) நிராகரிப்போரோ, இன்னும் முஷ்ரிக்குகளோ உங்கள் இறைவனிடமிருந்து, உங்கள் மீது நன்மை இறக்கப்படுவதை விரும்பவில்லை; ஆனால் அல்லாஹ் தன் அருட்கொடைக்கு உரியவர்களாக யாரை நாடுகிருனே அவரையே தேர்ந்தெடுத்துக் கொள்கிறுன்; அல்லாஹ் மிகப் பெரும் கிருபையாளன்.

105. சமூக நலத் தொண்டர்களே! இந்த குர்ஆனிய வழிகாட்டுதலை ஏற்றுக்கொள்ள விரும்பாத வேதக்காரர்களும், பிறதெய்வ வழிபாட்டை மேற்கொள்பவர்களும் உங்களோடு இருக்கிறார்கள். இந்த குர்ஆன் இறக்கியருளப்பட்டு, உங்களுக்கு நன்மைகள் பல ஏற்படுவது அவர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. (பார்க்க: 3:72 & 16:30). எனினும் இதனால் ஆகப்போவது ஒன்றுமில்லை. ஏனெனில் அவர்களுடைய விருப்புவெறுப்பு என்ற பேச்சிற்கு இங்கு இடமேது? இறைவழிக்காட்டுதல் என்ற வஹீ இறக்கியருளப்படும் விஷயமெல்லாம் அல்லாஹ்வின் மஷீயத் என்னும் செயல்திட்டத்திற்கு உட்பட்டவையாகும். எனவே வஹீ என்னும் அருட்கொடைக்கு உரியவராக (நபியாக) தேர்வு செய்வது அல்லாஹ்வின் புறத்திலிருந்து தீர்மானிகப்படுகின்ற விஷயமாகும். அதன்பின் யார் இந்த வழிக்காட்டுதலை ஏற்று செயல்படுகிறார்களோ அவர்கள் இதைக்கொண்டு பலன்களை பெற்றுக்கொள்வார்கள். ஏனெனில் அல்லாஹ்வின் அருட்கொடைகள் எல்லோருக்கும் பொதுவானதாகும். எனவே வழிகாட்டுதல்கள் என்ற அருட்கொடையை பெற்றுக்கொள்ள நாடுவோர் தாமே முன்வந்து பெற்றுக் கொள்ளவேண்டுமே அன்றி தானாக அவரை வந்தடையாது. (பாாக்க: 13:14).

106 مَا نَنْسَخْ مِنْ اٰيَةٍ اَوْ نُنْسِهَا
نَاْتِ بِخَيْرٍ مِّنْهَآ اَوْ مِثْلِهَا ؕ
اَلَمْ تَعْلَمْ اَنَّ اللّٰهَ عَلٰى كُلِّ
شَیْءٍ قَدِيْرٌ ○

106. ஏற்கனவே இறைவேதங்கள் இருக்கும்போது இந்த புதிய வேதமான குர்ஆன் எதற்கு என்று அவர்கள் ஆட்சேபிக்கிறார்கள். மேலும் முன்வேதமான தவ்ராத்தில் பிறப்பிக்கப்பட்ட கட்டளைக்கு மாற்றமாக சில

கட்டளைகள் இந்த புதிய வேதத்தில் பிறப்பிக்கப்படுவது ஏன் என்றும் கேட்கிறார்கள்.

106. ஏதேனும் ஒரு வசனத்தை நாம் மாற்றினால் அல்லது அதனை மறக்கச் செய்தால் அதைவிட சிறந்ததையோ அல்லது அது போன்றதையோ நாம் கொண்டுவருவோம். நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப் பொருட்களின் மீதும் சக்தியுள்ளவன் என்பதை நீர் அறியவில்லையா?

ஒரு சில கட்டளைகள் காலசூழ்நிலைக்கு ஏற்றவாறு ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் தேவைக்கேற்ப இறக்கி அருளப்பட்டன. அதன் பின் காலப்போக்கில் அந்த சட்டங்களுக்கு பதிலாக வேறொரு சட்டத்தையோ அல்லது அதைவிட சிறந்ததையோ இறக்கியருளப்பட்டன. ஏற்கனவே உள்ள கட்டளைகள் நடைமுறைக்கு உகந்ததாக இருக்கும்நிலையில் அவற்றை அப்படியே மீண்டும் பிறப்பிக்கப்பட்டன. ஒரு சில சமூகத்தார் காலப்போக்கில் சில கட்டளைகளை மாற்றிவிட்டனர்(பார்க்க: 22:52) அவ்வாறு மாற்றப்பட்டவைகளை திருத்தி மீண்டும் பிறப்பிக்கப்பட்டன (பார்க்க: 16:101). இவையாவும் நிர்ணயிக்கப்பட்ட செயல்திட்டங்களின்படி மிகச் சரியான முறையில் இறக்கியருளப்பட்டன. இதுவே அல்லாஹ்வின் வழிமுறையாக இருந்து வந்தது. இதே அடிப்படையில் எல்லாக் கட்டளைகளையும் கொள்கைகோட்பாடுகளையும் உள்ளடக்கிய இந்த குர்ஆன், முன்னால் இறக்கியருளப்பட்ட வேதங்களின் உண்மை நிலைகளை எடுத்து கூறுவதாக அமைந்துள்ளது(பார்க்க: 5:48), எல்லாவகையிலும் இது முழுமை பெற்றவையாக உள்ளது (பார்க்க: 6:115); மேலும் என்றென்றைக்கும் இது பாதுகாக்கப்படும் (பார்க்க: 15:9) ; எனவே மற்ற எல்லா வேதங்களுக்கு பதிலாக இந்த வேதம் உண்மை நிலையை விளக்குவதாக உள்ளது; எல்லா காலக்கட்டங்களிலும் நடைமுறை படுத்தக்கூடியதாக அமைந்துள்ளது.

107 أَلَمْ تَعْلَمْ أَنَّ اللَّهَ لَهُ مُلْكُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ ۗ وَمَا لَكُم مِّن دُونِ اللَّهِ مِن وَلِيٍّ وَلَا نَصِيرٍ

107. நிச்சயமாக வானங்கள் பூமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அல்லாஹ்வையன்றி உங்களுக்கு பாதுகாவலனோ, உதவி செய்பவனோ இல்லை என்பதை நீர் அறியவில்லையா?

107. நிச்சயமாக வானங்கள் மற்றும் பூமி ஆகிய அனைத்தும் அல்லாஹ்வின் ஆட்சி அதிகாரத்திற்கு உட்பட்டு செயல்படுகின்றன. அவற்றிலுள்ள அனைத்து படைப்புகளின் செயல்பாடுகளைப் பற்றிய முழு ஞானமும் அல்லாஹ்விடம் இருக்க, எது எப்படி செயல்பட வேண்டும் என்ற சட்ட திட்டங்களை நிர்ணயிக்கும் அதிகாரம் அவனை சார்ந்ததுதானே. எனவே மனிதனுக்கு வஹீ என்னும் இறைவழிகாட்டுதலில் ஏன் இப்படி திருத்தம் செய்யப்படுகிறது என்று இறைவனிடம் கேட்க மனிதனுக்கு என்ன உரிமை இருக்கிறது என்று அவர்களிடம் கேளுங்கள். இறை வழிகாட்டுதலை ஏற்று செயல்படுவதை விட்டுவிட்டு வேறு வழிமுறைகளை பின்பற்றுவதால் ஏற்படும் சிக்கல்களிலிருந்து உங்களை மீட்க அல்லாஹ்வைத் தவிர உதவி செய்வோர் யார் என்றும் அவர்களிடம் கேளுங்கள்.

108 أَمْ تُرِيدُونَ أَن تَسْأَلُوا رَسُولَكُمْ كَمَا سُئِلَ مُوسَىٰ مِن قَبْلُ ۗ وَمَن يَتَبَدَّلِ الْكُفْرَ بِالْإِيمَانِ فَقَدْ ضَلَّ سَوَاءَ السَّبِيلِ

108. இதற்கு முன்னர் மூஸாவிடம் கேள்விகள் கேட்கப்பட்ட மாதிரி நீங்களும் உங்கள் ரஸூலிடம் கேட்க விரும்புகிறீர்களா? எவனொருவன் ஈமானை 'குஃப்ரினால்' மாற்றுகிறானோ அவன் நிச்சயமாக நேர் வழியினின்றும் தவறிவிட்டான்.

108. சமூகநலத் தொண்டர்களே! இது சம்பந்தமாக நீங்கள் ஒரு அடிப்படை விஷயத்தை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். மக்கள் அனைவரும் கடைபிடிக்கவேண்டிய கட்டளைகளை எவ்வாறு பிறப்பிக்க வேண்டும் என்பதெல்லாம் அல்லாஹ்விடமிருந்து நிர்ணயம் ஆகின்ற விஷயங்களாகும். அவையாவும் இந்த குர்ஆன் மூலமாக அளிக்கப்படுகிறது. எதைப்பற்றி கட்டளைகள் வரவில்லையோ அதை அறிவிக்க இறைவன் மறந்துவிட்டதாக நினைத்துக் கொள்ளாதீர்கள். அவை தவிர்க்கப்பட்டுள்ளன என்பதுதான் உண்மை நிலை. ஆக மு:.மின்களே! இதற்கு முன் பனிஇஸ்ராயீல

சமூகத்தினர் மூசாவிடம் கேள்விகள் கேட்டதுபோல் இந்த இறைத்தூதரிடமும் கேட்டுக் கொண்டிராதீர்கள். இதற்கு முன்னிருந்த சமூகத்தினர் இப்படி கேள்விகளை கேட்டு பதில் கிடைக்காத நிலையில் அவர்கள் தாங்களாகவே யூகத்தில் சில சடங்குகளை ஏற்படுத்திக்கொண்டு இறுதியில் அவற்றையும் செயல்படுத்த முடியாமல் போயிவிட்டனர் (பாரக்க: 5:101 & 102) எனவே எந்த சமுதாயம் இறை வழிகாட்டுதல்கள் தெளிவாகி அவற்றை ஏற்றுக்கொண்டபின் அதற்கு மாற்றமாக செயல்படுமோ அவர்கள் நேர்வழியை இழந்துவிட்டவர்கள் ஆவார்கள்.

109 وَدَّ كَثِيرٌ مِّنْ أَهْلِ الْكِتٰبِ لَوْ يَرُدُّونَكُم مِّنْ بَعْدِ إِيمَانِكُمْ كُفَّارًا ۖ حَسَدًا مِّنْ عِنْدِ أَنْفُسِهِمْ مِّنْ بَعْدِ مَا تَبَيَّنَ لَهُمُ الْحَقُّ ۚ فَاعْفُوا وَاصْفَحُوا حَتّٰى يَأْتِيَ اللّٰهُ بِأَمْرِهِ ۗ إِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيرٌ ○

*109.* வேதத்தை உடையவர்களில் பெரும் பாலோர் உண்மை அவர்களுக்கு தெளிவாகத் தெரிந்த பின்னரும் தங்கள் மனதில் உள்ள பொறுமையினுல் நீங்கள் நம்பிக்கை கொண்ட பின் காஃபிர்களாக மாற வேண்டுமென விரும்புகிறுர்கள். ஆனுல் அல்லாஹ்வின் கட்டளே வரும்வரை அவர்களே மன்னித்து, அவர்கள் போக்கிலே விட்டுவிடுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் அனைத்துப் பொருட்கள் மீதும் சக்தி உடையவனுக இருக்கிறுன்.

109. நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்று நடப்பது அந்த வேதக்காரர்களுக்கு வெறுப்பாக உள்ளது. எனவே நீங்களும் அவற்றிற்கு மாற்றமாக செயல்படவேண்டும் என்றே அவர்கள் விரும்புகிறார்கள். இவையாவும் அவர்கள் அறியாமையில் செய்கிறார்களா? இல்லை. அனைத்து விஷயமும் அவர்களுக்கு தெளிவாகத் தெரியும். இப்படி அவர்கள் விரும்புவதற்கு காரணம் இறை வழிகாட்டுதலை கடைபிடித்து நீங்கள் முன்னேறி விடுவீர்களோ என்ற பொறாமைதான் அவர்களுக்கு. இதற்கு நீங்கள் செய்யவேண்டிய காரியம் என்ன? அல்லாஹ்வின் வழிகாட்டுதலின்படி அமைப்புமுறையை ஏற்படுத்தியுள்ள நீங்கள், அதன் ஆரம்பக் காலகட்டத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் ஆற்றவேண்டிய பணிகள் ஏராளமாக உள்ளன. எனவே அவர்களுடைய போக்கிற்கு எதிராக எந்த நடவடிக்கையும் எடுக்காதீர்கள். அவர்களை கண்டுக்கொள்ளாமல் இருந்துவிடுங்கள். நீங்கள் எடுத்துக்கொண்ட செயல்திட்டங்கள் உங்களை எல்லாவற்றின் மீதும் ஆதிக்கம் பெற்று வெற்றிப் பாதையில் அழைத்து செல்லும். (பார்க்க: 5:13), 15:85 & 73:10).

110 وَأَقِيمُوا الصَّلٰوةَ وَآتُوا الزَّكٰوةَ ۗ وَمَا تُقَدِّمُوا لِأَنْفُسِكُمْ مِّنْ خَيْرٍ تَجِدُوهُ عِنْدَ اللّٰهِ ۗ إِنَّ اللّٰهَ بِمَا تَعْمَلُونَ بَصِيرٌ ○

*110.* இன்னும் தொழுகையை முறையாகக் கடைப்பிடித்தும்; ஜகாத் கொடுத்தும் வாருங்கள்; ஏனெனில் உங்களுக்காக எந்த நன்மையை முன்னமேயே அனுப்பி வைக்கின்றீர்களோ, அதை அல்லாஹ்விடம் பெற்றுக்கொள்வீர்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றையெல்லாம் உற்று நோக்கியவனுகவே இருக்கிறுன்.

110. இந்த மாபெரும் செயல்திட்டம், இறைக்கொள்கை கோட்பாடுகளை (ஸலாத்தை) சமுதாயத்தில் நிலைநிறுத்தி அனைவரும் கடைபிடிப்பதைக் கொண்டும் சமூக வளர்ச்சிக்காக உதவி செய்வதைக் (ஜகாத்) கொண்டும் நிறைவேறும். (பாரக்க:2:3). தொடக்கத்தில் நீங்கள் செய்துவரும் நற்காரியங்களுக்கு உடனே பலன்கள் கிடைக்காது. ஆனால் உங்களுடைய உழைப்பிற்குரிய பலன்கள் அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற நியதியின்படி அதற்குரிய காலக்கட்டத்தில் உங்களிடம் வந்தடையும். அவையாவும் வீண் போகாது. ஏனெனில் நீங்கள் செய்துவரும் எல்லா காரியங்களின் விளைவுகளும் இறைவன் வகுத்துள்ள வட்டரைக்கு வெளியே செல்ல இயலாது.

111 وَقَالُوا لَنْ يَّدْخُلَ الْجَنَّةَ إِلَّا مَنْ كَانَ هُودًا أَوْ نَصٰرٰى ۗ تِلْكَ أَمَانِيُّهُمْ ۗ قُلْ هَاتُوا بُرْهَانَكُمْ إِنْ كُنْتُمْ صٰدِقِينَ ○

*111.* "யூதர்கள், கிறிஸ்தவர்களேத் தவிர வேறு யாரும் சுவனபதியில் நுழையவே மாட்டார்கள்" என்று அவர்கள் கூறுகிறுர்கள்; இது அவர்களின் வீணுசையேயாகும்; "நீங்கள் உண்மையுடையோராகயிருந்தால், உங்களுடைய சான்றை சமர்ப்பியுங்கள்" என்று (நபியே!) நீர் கூறுவீராக!

111. சுவனம் தங்களுக்குத்தான் சொந்தம் என்றும், அவர்களைத்தவிர மற்றவர்கள் சுவனத்தில் நுழையவே முடியாது என்றும் அந்த வேதக்காரர்கள் கூறுகிறார்கள். (பார்க்க: 2:94). இவையாவும் தம் அறியாமையினால் ஏற்படுத்திக்கொண்ட வீணான ஆசையே ஆகும். இவ்வாறு உணர்ச்சி வேகத்தில் பேசிக்கொண்டிராமல் சிந்தித்து அறிவுப்பூர்வமாக பேசும்படி அவர்களிடம் எடுத்துரையுங்கள். மேலும் தங்கள் கூற்றிற்கு தக்க

ஆதாரங்களை சமர்ப்பிக்கும்படி கேளுங்கள். (இப்படிப்பட்ட பேச்சுக்கள் இன்றைய முஸ்லிம்கள் மத்தியிலும் இருந்து வருகிறது. இது சரி அல்ல)

112 بَلَىٰ مَنْ أَسْلَمَ وَجْهَهُ لِلَّهِ وَ هُوَ مُحْسِنٌ فَلَهُ أَجْرُهُ عِنْدَ رَبِّهِ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَ لَا هُمْ يَحْزَنُونَ ○

*112. அப்படியல்ல! எவனொருவன் தன்னை அல்லாஹ்வுக்கு (முழுமையாக) அர்ப்பணம் செய்து, இன்னும் நற்கருமங்களைச் செய்கிறானோ, அவனுடைய நற்கூலி அவனுடைய இறைவனிடம் உண்டு. இத்தகையோருக்கு அச்சமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.*

112. உண்மையில், வாழ்வின் வெற்றிஇலக்கு என்பது, குலம் கோத்திரம் அடிப்படையிலோ அல்லது கற்பனை வளத்தோடு பேசிவருவதாலோ கிடைக்கின்ற ஒன்றல்ல. அறிவுப்பூர்வமான ஆதாரங்களே இதை நிரூபித்துக் காட்டுகின்றன. இந்த வெற்றிஇலக்கை அடைய நிலைமாறா நிரந்தர சட்டதிட்டங்கள் உள்ளன. உலகின் எந்த சமுதாயத்தவராய் இருப்பினும் சரியே, யாரெல்லாம் இறை வழிகாட்டுதல்களை உளமாற ஏற்று அதன்படி ஆக்கப்பூர்வமான அழகிய செயல்திட்டங்களை தீட்டி உழைத்து வருகிறார்களோ, மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற இறைவனின் நியதியின்படி அவர்களுக்கு நன்மை கிடைத்துக் கொண்டே இருக்கும். அச்சமோ துக்கமோ இல்லாத சந்தோஷமான வாழ்க்கை இப்படிப்பட்டவர்களுக்கு கிடைத்து வருவதே இதற்கு அறிவுப்பூர்வமான ஆதாரமாகும்.

113 وَقَالَتِ الْيَهُودُ لَيْسَتِ النَّصَارَىٰ عَلَىٰ شَيْءٍ وَقَالَتِ النَّصَارَىٰ لَيْسَتِ الْيَهُودُ عَلَىٰ شَيْءٍ وَهُمْ يَتْلُونَ الْكِتَابَ كَذَٰلِكَ قَالَ الَّذِينَ لَا يَعْلَمُونَ مِثْلَ قَوْلِهِمْ فَاللَّهُ يَحْكُمُ بَيْنَهُمْ يَوْمَ الْقِيَامَةِ فِيمَا كَانُوا فِيهِ يَخْتَلِفُونَ ○

**ருகூஉ 14**

*113. யூதர்கள் கூறுகிறார்கள்: 'கிறிஸ்தவர்கள் எந்த நல்வழியிலும் இல்லை' என்று; கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள்: 'யூதர்கள் எந்த நல்வழியிலும் இல்லை' என்று; ஆனால், இவர்கள் (தங்களுக்குரிய) வேதத்தை ஓதிக் கொண்டே (இப்படிக் கூறுகிறார்கள்); இவர்கள் கூறும் சொற்களைப் போலவே ஒன்றும் அறியாதவர்களும் கூறுகிறார்கள்; இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் இவர்கள் தர்க்கித்து மாறுபட்டுக் கொண்டிருக்கும் விஷயத்தில் தீர்ப்பளிப்பான்.*

113. சத்திய உண்மையின் அடிப்படையில் இந்த இஸ்லாமிய மார்க்கம் போதிக்கப்படுகிறது. இதற்கு எதிராக செயல்படும் அந்த வேதக்காரர்களின் நிலைமை விசித்திரமாக உள்ளது. அவர்களுக்கிடையே எவ்வளவுதான் வேற்றுமையும் பகையும் இருந்தாலும் இறை வழிகாட்டுதல்களை ஏற்று செயல்படும் உங்களை எதிர்ப்பதில் ஒருவருக்கொருவர் கைகோர்த்துக்கொண்டு ஒரணியில் நின்றுவிடுகிறார்கள். ஆனால் அவர்களுக்கிடையே நிலவி வரும் வேற்றுமையைப் பற்றி கவனியுங்கள். கிறிஸ்தவர்கள் நேர்வழியில் ஒருபோதுமில்லை என்று யூதர்களும், யூதர்கள் நேர்வழியில் இல்லை என்று கிறிஸ்தவர்களும் ஒருவரையொருவர் குறைகூறிக் கொண்டிருக்கிறார்கள். இத்தனைக்கும் வேடிக்கை என்னவென்றால் ஒரே இறைவனிடமிருந்து இறக்கியருளப்பட்ட வேதத்தை பின்பற்றுவதாக இரண்டு பிரிவினரும் தாவா செய்துக் கொள்வதுதான். இது மட்டுமின்றி எந்த வேதமும் பின்பற்றாத அரபு நாட்டவர்களும், தாம் பின்பற்றி வரும் சடங்கு சம்பிராதாயமே தலைச்சிறந்தது என்று எண்ணி, இந்த குர்ஆனிய கொள்கைக்கு எதிராக பேசிவருகிறார்கள். சமுதாயத்தில் பிரிவினை ஏற்படுத்துவதன் விளைவுகள் இப்படித்தான் இருக்கும். சமுதாயத்தில் பிரிவினை என்பது இறைவன் புறத்திலிருந்து கிடைக்கின்ற வேதனையாகும் (பார்க்க: 3:105) ஆக இறை வழிகாட்டுதலின்படி ஆட்சி அமைப்புமுறை ஏற்பட்டு சமதர்ம சமுதாயம் உருவாகி மறுமலர்ச்சி ஏற்படும் வரையில் இந்த பிரிவினைகளும் எதிர்ப்புகளும் நீடிக்கும். அப்படி ஏற்படும் ஒரு காலக்கட்டத்தில் எது சரியானவை எது தவறானவை என்ற தீர்ப்பு கிடைத்துவிடும். இப்படியாக இந்த வேற்றுமையும் பகைமையும் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்துவிடும். அல்லது மரணத்திற்குப் பின் உண்மை எவை என்பது அவர்களுக்கு வெட்ட வெளிச்சமாகி விடும்.

114 وَمَنْ اَظْلَمُ مِمَّنْ مَّنَعَ مَسٰجِدَ اللّٰهِ اَنْ يُّذْكَرَ فِيْهَا اسْمُهٗ وَسَعٰى فِىْ خَرَابِهَا ؕ اُولٰٓئِكَ مَا كَانَ لَهُمْ اَنْ يَّدْخُلُوْهَآ اِلَّا خَآئِفِيْنَ ؕ لَهُمْ فِى الدُّنْيَا خِزْىٌ وَّلَهُمْ فِى الْاٰخِرَةِ عَذَابٌ عَظِيْمٌ ۝

*114. இன்னும், அல்லாஹ்வுடைய மஸ்ஜிது களில் அல்லாஹ்வின் பெயரைச் சொல் லித் துதிப்பதைத் தடுத்து, அவற்றைப் பாழாக்க முயல்பவனை விட, பெரிய கொடுமைக்காரன் யார் இருக்க முடியும்? இத் தகையோர் அச்சமுடனன்றி பள்ளிவாயில்களில் நுழைவதற்கு தகுதியே இல்லாதவர்கள் இவர்களுக்கு இவ் (வுலக) வாழ்வில், இழிவு தான்; மேலும், மறுமையில் இவர்களுக்குக் கடுமையான வேதனையுமுண்டு.*

114. இறை வழிகாட்டுதல்களை ஏற்று நடப்பவர்களான மூ.:மின்களின் கரங்களால்தான் இந்த குர்ஆனிய செயல்திட்டங்கள் நிறைவேறும். மேலும் இறைவன் வகுத்துத் தந்துள்ள சட்டங்களுக்கு மட்டும் தலைவணங்கி நடக்க போதிக்கப்படும் பள்ளிவாசல்களே அதன் தலைமைச் செயலகமாக விளங்கும். இந்த செயல்திட்டங்களின் வளர்ச்சி மூ.:மின்கள் ஜமாத் கூட்டுமுறை மூலமாக நடைபெற்று வரும்போது, இறைச் சட்டங்களோடு மற்ற சித்தாந்தங்களை இணைத்து செயல்படுபவர்கள் வசம் பொறுப்புகள் ஒப்படைக்கப்பட மாட்டாது
(பார்க்க: 9:17-19) இந்த கூட்டமைப்பில் பிளவு ஏற்படுத்துவோரிடமும் பொறுப்புகள் கொடுக்கப்பட மாட்டாது.(பார்க்க: 9:107)

மனித நேயம் வளர ஏற்படுத்தப்பட்ட இந்த கூட்டமைப்பை சீரழிக்க முயல்பவனைவிட பெரிய அநியாயக்காரன் வேறு யாராக இருக்க முடியும்? நீங்களே சற்று சிந்தித்துப் பாருங்கள். இறைவனின் கொள்கைகோட்பாடுகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு செயல்படும் இந்த கூட்டமைப்பின் வளர்ச்சிக்கு தடையாக நிற்பவனை என்னவென்று சொல்வது?

ஆக இந்த பள்ளிவாசலில் நுழைபவர்கள் ஆணவத்தோடு நடந்துக்கொள்வதை விட்டுவிட்டு இந்த செயல்திட்டங்களுக்கு எதிராக செயல்படுவதால் ஏற்படும் விளைவுகளை எண்ணி பணிவோடு வரவேண்டும். மாறாக ஆணவத்தோடு செயல்படுவதால் அவர்களுடைய நிகழ்கால வாழ்வு வேதனை தரக்கூடியதாகவும், வருங்கால வாழ்வு அழிவினை ஏற்படுத்தக்கூடியதாகவும் ஆகிவிடுகிறது.

115 وَلِلّٰهِ الْمَشْرِقُ وَالْمَغْرِبُ ۚ فَاَيْنَمَا تُوَلُّوْا فَثَمَّ وَجْهُ اللّٰهِ ؕ اِنَّ اللّٰهَ وَاسِعٌ عَلِيْمٌ ۝

*115. கிழக்கும், மேற்கும் அல்லாஹ்வுக்கே (சொந்தம்); நீங்கள் எந்தப் பக்கம் திரும்பி னாலும் அங்கே அல்லாஹ்வின் முகம் இருக் கிறது. நிச்சயமாக அல்லாஹ் விசாலமான வன்; எல்லாம் அறிந்தவன்.*

115. மனித நேயம் வளர மக்காவிலுள்ள "அல்லாஹ்வின் முதல் வீடான கா.:பா" என்னும் செயலகம் (பார்க்க: 3:96) செயல்படுவதை விரும்பாதவர்கள் ஒரு விஷயத்தை புரிந்துக் கொள்ளவேண்டும். இதற்கு எதிராக செயல்படுவதால் ஏற்படுகின்ற பாதிப்பு உங்களுக்கே அன்றி அல்லாஹ்விற்கு அல்ல. மேலும் இப்படிப்பட்ட செயலகம் ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான் நிறுவப்படவேண்டும் என்பதும் இல்லை. ஏனெனில் திசை, இடம், காலம் போன்றவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டதுதான் அல்லாஹ்வின் செயல்திட்டம். அந்த ஏகஇறைவனிடமிடருந்து வந்த வழிகாட்டுதலின்படி நிறுவப்படுவதுதான் இந்த மையக்கேந்திரம். எனவே விசுவாசிகளே! உலகில் எந்த பகுதியை சேர்ந்தவர்களாயினும் எந்த காலக்கட்டத்தில் வாழ்பவர்களாயினும் சரியே, நீங்கள் வாழும் சமுதாயத்தில் மனிதநேயம் வளர்ந்து தலைசிறந்த சமுதாயம் உருவாகவேண்டும் என்று விரும்பினால் அல்லாஹ்வின் இந்த வழிகாட்டுதல்களைத்தான் (Rules and regulations) உங்கள் கவனத்தில் கொள்ளவேண்டும். உங்கள் சிந்தனைகளை எல்லாம் சிதராமல் இதன் பக்கமே ஓர்மைப்படுத்த வேண்டும். ஏனெனில் அந்த ஏக இறைவனாகிய அல்லாஹ்வின் அமைப்பு (System) அனைத்தையும் சூழ்ந்து அறியக்கூடியதாக இருக்கிறது. உலகின் எல்லா பகுதிகளிலும் இதன்

..ளை செயலகம் மற்றும் கூட்டமைப்பை ஏற்படுத்தவேண்டிய கட்டாயத்தில்தான் மனிதனும் இருக்கின்றான்.

116 وَقَالُوا اتَّخَذَ اللَّهُ وَلَدًا سُبْحَانَهُ بَل لَّهُ مَا فِي السَّمَاوَاتِ وَالْأَرْضِ كُلٌّ لَّهُ قَانِتُونَ ○

*116. இன்னும் கூறுகிறார்கள்: "அல்லாஹ் ஒரு குமாரனைப் பெற்றிருக்கிறான்" என்று. அப்படியல்ல - அவன் (இவர்கள் கூறுவதிலிருந்து) மிகத் தூய்மையானவன்; வானங்கள், பூமியில் உள்ளவையாவும் அவனுக்கே உரியவை; இவையனைத்தும் அவனுக்கே அடிபணிந்து வழிபடுகின்றன.*

116. சரி. யூதர்களை விட்டுவிட்டு கிறிஸ்தவர்களைப் பாருங்கள். அல்லாஹ்விற்கு ஒரு புதல்வன் என்று பேசிவருகிறார்கள். இதற்கு அவர்களிடம் என்ன ஆதாரம் இருக்கிறது என்று கேளுங்கள். இப்படி அவர்கள் பேசி அல்லாஹ்வை ஒரு மனிதன் என்ற அளவிற்கு தாழ்த்திவிட்டார்கள். ஆனால் அல்லாஹ்வோ இதற்கெல்லாம் அப்பாற்பட்டவன். வானங்களிலும் பூமியிலுமுள்ள அனைத்து படைப்புகளும் அல்லாஹ்வின் செயல்திட்டங்களை நிறைவேற்றத்தான் படைக்கப்பட்டுள்ளன. அவை அனைத்தும் அவன் கட்டளைக்கு அடிபணிந்து செயல்படுகின்றன.(பார்க்க: 16:49) விஷயம் இவ்வறிருக்க அல்லாஹ்வின் செயல்திட்டங்களை நிறைவேற்ற அவனுக்கு ஒரு புதல்வன் அவசியமா?

117 بَدِيعُ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَإِذَا قَضَىٰ أَمْرًا فَإِنَّمَا يَقُولُ لَهُ كُن فَيَكُونُ ○

*117. (அல்லாஹ்) வானங்களையும், பூமியையும் முன் மாதிரியின்றி (இல்லாமையிலிருந்து), தானே உண்டாக்கினான்; அவன் ஒன்றை உண்டாக்க விதித்து, அதனிடம் 'குன்' - ஆகுக - என்று கூறினால், உடனே அது ஆகிவிடுகிறது.*

117. அவர்களுடைய அறியாமைதான் அவர்களை இப்படி பேச வைக்கிறது. வானங்களையும் பூமியையும் எந்த ஒரு முன்மாதிரியுமின்றி எந்த பொருளின் துணையுமின்றி படைக்க வல்லமை பெற்றவன்தான் அல்லாஹ். ஈடுஇணையற்ற எப்படிப்பட்ட மாபெரும் வல்லமை என்றால் எந்த ஒரு பொருளையும் படைக்க அல்லாஹ் முடிவு எடுக்கும்போது அந்த படைப்புகள் முறைப்படி தோற்றத்திற்கு வந்துவிடும். ஆகுக என்றால் ஆகிவிடும் என்று மொழிபெயர்ப்பு இருக்க 'முறைப்படி' என்று நாம் ஏன் விளக்கம் தந்துள்ளோம் என்பதை அறிய பாருங்கள் 32:5) இப்படி சகலவல்லமையும் பெற்ற அல்லாஹ்விற்கு துணை நிற்க ஒரு புதல்வன் தேவையா?

118 وَقَالَ الَّذِينَ لَا يَعْلَمُونَ لَوْلَا يُكَلِّمُنَا اللَّهُ أَوْ تَأْتِينَا آيَةٌ كَذَٰلِكَ قَالَ الَّذِينَ مِن قَبْلِهِم مِّثْلَ قَوْلِهِمْ تَشَابَهَتْ قُلُوبُهُمْ قَدْ بَيَّنَّا الْآيَاتِ لِقَوْمٍ يُوقِنُونَ ○

*118. இன்னும் அறியாதவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ் ஏன் நம்மிடம் பேசவில்லை; மேலும், நமக்கு ஏன் அத்தாட்சி வரவில்லை?" என்று; இவர்களுக்கு முன்னர் இருந்தவர்களும் இப்படியே — இவர்களின் சொற்களைப்போலவே — தான் கூறினார்கள். இவர்களின் இதயங்கள் அவர்களுடைய இதயங்களைப் போன்றவையே தான். ஈமானில் உறுதியுடைய மக்களுக்கு நம் அத்தாட்சிகளை (அவர்கள் மனதில் பதியும்படி) நாம் நிச்சயமாகத் தெளிவாய் விவரித்துள்ளோம்.*

118. மேலும் கிறிஸ்தவர்கள், "நமக்கு நேர்வழி காட்டவேண்டும் என்று அல்லாஹ்வின் நாட்டமாக இருந்தால் அல்லாஹ் நம்முன் தோன்றி நேரடியாக வந்து பேசக்கூடாதா?. அல்லது இந்த வழிக்காட்டுதல்கள் அல்லாஹ்விடமிருந்துதான் வருகின்றன என்றால் நாம் பார்த்து உணரக்கூடிய வகையில் ஏதாவது அத்தாட்சியை கொண்டு வரக்கூடாதா." என்று பேசி வருகிறார்கள். இதுவும் அவர்களுடைய அறியாமையை காட்டுகிறது. அவர்களுடைய இந்த பேச்சுக்கள் புதிதான ஒன்றல்ல. அவர்களுக்கு முன்னிருந்தவர்களும் இப்படித்தான் பேசி வந்தார்கள்

பார்த்து உணரக்கூடிய வகையில் அல்லாஹ்வின் அநேக அத்தாட்சிகள் அவர்கள் கண்முன் இருக்கும்போது அதைப்பற்றி அவர்கள் சிந்தித்துப் பார்க்கமாட்டார்கள். அதைப்பற்றி அவர்கள் ஆராய்ந்து பார்த்தால்தானே அவர்களால் உண்மைகளை புரிந்துக்கொள்ள முடியும். அல்லாஹ்வின் படைப்புகளில் முழு சுதந்திரத்தைப் பெற்று திகழ்பவன் மனிதன் மட்டுமே(பார்க்க: 18:29) என்ற உண்மையும் விளங்கியிருக்கும். எனவே அவர்களுள் ஒருவரை தூதராக தேர்ந்தெடுத்து அவர் மூலமாக வழிகாட்டுதல்களை மக்களிடம் சமர்ப்பித்துவிடுவது என்பது அல்லாஹ்வின் செயல்திட்டமாகும். (பார்க்க: 42:52). அதன்பின் அந்த வழிகாட்டுதல்களை

ஏற்றுக் நடப்பதும் நடக்காததும் அவரவர் விருப்பத்திற்கு விடப்படுகிறது.(பார்க்க: 18:29 & 76:3)

119 إِنَّآ أَرْسَلْنَٰكَ بِٱلْحَقِّ بَشِيرًا وَنَذِيرًا ۙ
وَلَا تُسْـَٔلُ عَنْ أَصْحَٰبِ ٱلْجَحِيمِ ۝

*119. (நபியே!) நாம் உம்மை உண்மையுடன், (நல்லடியாருக்கு) நன்மாராயம் கூறுபவராகவும், (தீயோருக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவுமே அனுப்பியுள்ளோம்; நரகவாதிகளைப் பற்றி நீர் வினவப்பட மாட்டீர்.*

119. இறைத்தூதரே! இதே செயல்திட்டத்தின்படி உண்மையைக் கொண்டுள்ள வழிகாட்டுதல்கள் உம்மீது இறக்கியருளப்படுகின்றன. இவற்றை பின்பற்றுவதால் மக்களுக்கு ஏற்படும் நன்மைகளை எடுத்துரைப்பதற்காகவும் இவற்றை நிராகரித்து வாழ்வதால் ஏற்படக்கூடிய அழிவினைப்பற்றி முன்னெச்சரிக்கை செய்வதற்காகவும் இவை உம்மீது அருளப்படுகின்றன. இவற்றை ஏற்க மறுத்து அழிவினை தேடிக்கொள்பவர்களை அவர்கள் போக்கில் விட்டுவிடு. அவர்களுடைய அழிவிற்கு நீர் பொறுப்பாளி அல்ல(பாக்க: 13:40). எனவே நரகவாசிகளைப் பற்றி உம்மிடம் வினவப்படமாட்டாது.

120 وَلَن تَرْضَىٰ عَنكَ ٱلْيَهُودُ وَ
لَا ٱلنَّصَٰرَىٰ حَتَّىٰ تَتَّبِعَ مِلَّتَهُمْ ۗ
قُلْ إِنَّ هُدَى ٱللَّهِ هُوَ ٱلْهُدَىٰ ۗ
وَلَئِنِ ٱتَّبَعْتَ أَهْوَآءَهُم بَعْدَ
ٱلَّذِى جَآءَكَ مِنَ ٱلْعِلْمِ ۙ
مَا لَكَ مِنَ ٱللَّهِ مِن وَلِىٍّ وَ
لَا نَصِيرٍ ۝

*120. (நபியே!) யூதர்களும், கிறிஸ்தவர்களும் அவர்கள் வழியை நீர் பின்பற்றுத வரையில் உம்மைப்பற்றி திருப்தியடைய மாட்டார்கள். (ஆகவே, அவர்களை நோக்கி:) "நிச்சயமாக அல்லாஹ்வின் வழி-(இஸ்லாம்) அதுவே நேர் வழி" என்று சொல்லும்; அன்றி ஞானம் உம்மை வந்தடைந்த பின்னரும் அவர்களுடைய இச்சைகளைப் பின்பற்றுவீரேயானல், அல்லாஹ்விடமிருந்து உம்மைக் காப்பாற்றுபவனும், உமக்கு உதவி செய்பவனும் இல்லை.*

120. யூதர்களும் கிறிஸ்தவர்களும் இறை வழிகாட்டுதலை தெறிந்துக்கொள்ள உம்மிடம் வருவதில்லை. நீர் பின்பற்றும் இறை வழிகாட்டுதலை ஏற்றுக் கொள்ளக்கூடாது என்று அவர்கள் ஏற்கனவே தீர்மானித்து விட்டார்கள். நீர் உன் கொள்கையை விட்டுவிட்டு அவர்களுடைய வழிமுறைகளை பின்பற்றாதவரை அவர்கள் திருப்தி அடையவேமாட்டார்கள்.

"இப்போது இருக்கின்ற கேள்வி யாருடைய வழிமுறையை கடைபிடிப்பது என்பதே. உங்களுடைய வழிமுறை என்னுடைய வழிமுறை என்பதல்ல. எந்த வழிமுறைகள் அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறக்கியருளப்படுகிறதோ அதுவே மிகச் சரியான அனைத்து தரப்பு மக்களுக்கும் நன்மை பயக்கக்கூடிய வழிமுறையாகும்'' என்பதை அவர்களுக்கு தெளிவுபடுத்திவிடு.

அல்லாஹ்வின் புறத்திலிருந்து நேரான பாதை தெளிவாக்கபட்டபின் அழிவின் பக்கம் இழுத்துச்செல்லும் அவர்களுடைய மனோஇச்சைக்கு இணங்கி (Compromise) நீர் செயல்படுவீராயின் அதிலிருந்து உம்மையும் காப்பாற்றுபவனோ உதவிசெய்பவனோ யாரும் இருக்கமாட்டார்கள்.(பாக்க: 7:3, 10:109 & 13:37)

121 ٱلَّذِينَ ءَاتَيْنَٰهُمُ ٱلْكِتَٰبَ يَتْلُونَهُۥ
حَقَّ تِلَاوَتِهِۦٓ ۗ أُو۟لَٰٓئِكَ يُؤْمِنُونَ
بِهِۦ ۗ وَمَن يَكْفُرْ بِهِۦ فَأُو۟لَٰٓئِكَ هُمُ
ٱلْخَٰسِرُونَ ۝

*121. யாருக்கு நாம் வேதத்தைக் கொடுத்தோமோ அவர்கள் அதை எவ்வாறு ஓதி (ஒழுகி)ட வேண்டுமோ, அவ்வாறு ஓதுகிறார்கள்; அவர்கள் தாம் அதன் மேல் நம்பிக்கையுள்ளவர்கள்; யார் அதை நிராகரிக்கின்றார்களோ அவர்கள் பெரும் நஷ்டவாளிகளே!*

121. மனித வாழ்க்கைகான வழிமுறைகளைக் கொண்ட இந்த இறை வழிகாட்டுதலை மூ:.மின்கள் முறைப்படி கடைபிடிப்பார்கள். அல்லாஹ்வின் அளவுகோலின்படி இப்படிப்பட்டவர்களே மு:.மின்கள் ஆவார்கள். யூதர்களாயினும், கிறிஸ்தவர்களாயினும், அரபு நாட்டு முஷ்ரிக்குகளாயினும் இந்த வாழ்க்கை நெறிமுறைகளின் உண்மை நிலையை ஏற்க மறுத்து மனம்போன போக்கில் வாழ்பவர்கள் பேரழிவினை சந்திப்பது நிச்சயம்.

122 يَٰبَنِىٓ إِسْرَٰٓءِيلَ ٱذْكُرُوا۟ نِعْمَتِىَ
ٱلَّتِىٓ أَنْعَمْتُ عَلَيْكُمْ وَأَنِّى فَضَّلْتُكُمْ
عَلَى ٱلْعَٰلَمِينَ ۝

122. யூதர்களே! மேலே சொல்லப்பட்ட விஷயம் உண்மையே என்பதற்கு உங்களுடைய வாழ்க்கை வரலாறே சாட்சி பகர்கிறது. இறைக்கொள்கையின் அடிப்படையில் வாழ்ந்த காலமெல்லாம் எவ்வாறு சுபிட்சமாக வாழ்ந்து

ருகூஉ 15

122. (யஃகூப் என்ற) இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு அளித்த என் நன்கொடைகளை நினைவு கூருங்கள்; இன்னும் நிச்சயமாக நான் உங்களை உலக மக்கள் எல்லோரையும்விட மேம்பாடுடையோராகச் செய்தேன்.

வந்தீர்கள் என்பதையும் அக்காலக் கட்டத்தில் வாழ்ந்த மற்ற சமூகத்தாரைவிட எந்த அளவிற்கு உயர்ந்த நிலையை பெற்றிருந்தீர்கள் என்பதையும் நீங்கள் எண்ணிப் பாருங்கள்.

وَاتَّقُوْا يَوْمًا لَّا تَجْزِىْ نَفْسٌ عَنْ نَّفْسٍ شَيْـًٔـا وَّلَا يُقْبَلُ مِنْهَا عَدْلٌ وَّلَا تَنْفَعُهَا شَفَاعَةٌ وَّلَا هُمْ يُنْصَرُوْنَ 123

123. இன்னும், (வரப் போகும்) அந்நாளிலிருந்து, உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்; அன்று ஓர் ஆத்மா பிறிதோர் ஆத்மாவுக்கு உதவி செய்ய இயலாது; அதனிடமிருந்து (அதன் பாவங்களுக்குப் பரிகாரமாக) எந்த நஷ்ட ஈடும் ஒப்புக்கொள்ளப் பட மாட்டாது; எந்த சிபாரிசும் அதற்கு பலனளிக்காது; அவர்கள் (எவர் மூலமாகவும் எந்த) உதவியும் செய்யப்பட மாட்டார்கள்.

123. ஏற்கனவே 2:47 ல் குறிப்பிட்டதுபோல் இறை வழிகாட்டுதலை விட்டுவிட்டதனால் உங்கள் சமுதாயத்தில் அநியாயங்களும் அக்கிரமங்களும் நடக்கின்றன. அதனால் சட்டம் ஒழுங்கு சீரழிந்துவிட்டது. அதை சீரமைக்கும் எண்ணமும் உங்களிடம் இல்லை. உங்களுடைய இந்த போக்கு இனி நீடிக்காது. இப்போது குர்ஆனிய ஆட்சியமைப்பு ஏற்பட்டுவிட்டது. இனி பாவம் செய்யும் எந்த குற்றவாளியும் தண்டனையிலிருந்து தப்பிவிட முடியாது. ஒருவன் செய்யும் குற்றம் மற்றவன் மேல் சுமத்தி தப்பிக்கமுடியாது. (பாரக்க: 6 : 164) குற்றவாளிகள் யாருடைய பரிந்துரையின் பேரிலும் தப்பிச்செல்ல முடியாது. காசு பணம் இலஞ்சமாக பெற்றுக்கொண்டு குற்றவாளிக்கு ஆதரவாக யாரும் செயல்படுவது இனி ஒருபோதும் நடக்காது.

நீதி நியாயத்தை அடிப்படையாகக் கொண்ட குர்ஆனிய ஆட்சியமைப்பின்படி இவ்வுலகிலும் மரணத்திற்குப் பின் மறுவுலகிலும் இதே சட்டம் நடைமுறையில் இருக்கும்.

وَاِذِ ابْتَلٰٓى اِبْرٰهٖمَ رَبُّهٗ بِكَلِمٰتٍ فَاَتَمَّهُنَّ ؕ قَالَ اِنِّىْ جَاعِلُكَ لِلنَّاسِ اِمَامًا ؕ قَالَ وَمِنْ ذُرِّيَّتِىْ ؕ قَالَ لَا يَنَالُ عَهْدِى الظّٰلِمِيْنَ 124

124. (இன்னும் இதையும் எண்ணிப் பாருங்கள்:) இப்ராஹீமை அவருடைய இறைவன் சில கட்டளைகளையிட்டுச் சோதித்தான்; அவற்றை அவர் முழுமையாக நிறைவேற்றினார்; நிச்சயமாக நான் உம்மை மக்களுக்கு இமாமாக (த் தலைவராக) ஆக்குகிறேன்" என்று அவன் கூறினான்; அதற்கு இப்ராஹீம்: "என் சந்ததியினரிலும் (இமாம்களை ஆக்குவாயா?)" எனக் கேட்டார்; என் வாக்குறுதி (உம் சந்ததியிலுள்ள) அநியாயக்காரர்களுக்குச் சேராது என்று கூறினான்.

124. இறை வழிகாட்டுதலின்படி சமூகஅமைப்பு ஏற்படுத்துவது என்பது எளிதான காரியமல்ல. இதற்காக மன வலிமையும் தொடர் முயற்சிகளும் தியாக மனப்பான்மையும் அவசியமாகிறது. ஆனால் இப்படி முயற்சிகளை மேற்கொண்டவர்கள் எல்லாம் வாழ்வில் உயர்நிலையை பெற்றிருக்கிறார்கள் என்பதற்கு வரலாறே சாட்சியாக திகழ்கிறது. இதற்காக உங்களுடைய வழிகாட்டியான மூதாதையர் இப்ராஹிமுடைய வாழ்க்கை வரலாற்றை கவனியுங்கள். தனது தந்தைக்குப்பின் அவருக்கு ராஜகுரு என்ற உயர்பதவியும் சொகுசு வாழ்க்கையும் கிடைக்கவிருந்தது. ஆனால் அவர் அதை பொருட்படுத்தாமல் இறைவனின் கொள்கை கோட்பாட்டினை மக்கள் மத்தியில் நிலைநாட்டவேண்டும் என்ற இலட்சியத்துடன் வாழ்ந்துவந்தார். மேலும் அதற்காக அவர் அரும்பாடுபட்டார்.(பாரக்க: 37: 83-97 & 60:4) இதனால் எண்ணற்ற துயரங்களையும் கஷ்டங்களையும் சந்திக்க நேர்ந்தது. இருப்பினும் தன் இலட்சியத்தில் நிலைத்து நின்றதால் அவருடைய ஒவ்வொரு முயற்சியும் அவருக்கு அனுபவப் பாடமாக திகழ்ந்து தம் ஆற்றல்கள் வளர ஏதுவாக அமைந்துவிட்டன.

இதன் பலனாக அவர் "மனிதகுலத்தின் இமாம்" – "வழிகாட்டி" (Leadership) என்ற பட்டத்திற்கு உரியவரானார். மனிதவாழ்வின் சரியான பாதை எவை தவறான பாதை எவை என்பதை அறியும் மாமேதை ஆகிவிட்டார். இவையாவும் இப்ராஹிமுடைய முயற்சிக்கும் உழைப்பிற்கும் கிடைத்த பலன்களாகும். பனிஇஸ்ராயில் மக்களே! நீங்களோ இப்ராஹிமுடைய வம்சத்தவர்கள் என்பதால் உயர்பதவிக்கும் போற்றுதலுக்கும் உரியவர்கள் என்று எண்ணிக்கொண்டு இருக்கிறீர்கள். ஆனால்

இப்ராஹிமுடைய சந்ததியினராக இருந்தாலும் அல்லது வேறு யாராக இருந்தாலும் சரி, யார் இறைக்கொள்கை கோட்பாடுகளுக்கு மாறுசெய்து அநியாயம் செய்கிறார்களோ அவர்களை விட்டு இந்த உயர் பதவியும் அந்தஸ்தும் பறிபோய்விடும் என்ற விளக்கம் ஏற்கனவே அளிக்கப்பட்டு விட்டது.

125 وَاِذْ جَعَلْنَا الْبَيْتَ مَثَابَةً لِّلنَّاسِ
وَاَمْنًا ؕ وَاتَّخِذُوْا مِنْ مَّقَامِ
اِبْرٰهٖمَ مُصَلًّى ؕ وَعَهِدْنَآ
اِلٰٓى اِبْرٰهٖمَ وَاِسْمٰعِيْلَ اَنْ طَهِّرَا
بَيْتِىَ لِلطَّآئِفِيْنَ وَالْعٰكِفِيْنَ وَ
الرُّكَّعِ السُّجُوْدِ ۝

*125. (இதையும் எண்ணிப் பாருங்கள்: "கஃபா என்னும்) வீட்டை நாம் மக்கள் ஒதுங்கும் இடமாகவும் இன்னும், பாதுகாப் பான இடமாகவும் ஆக்கினோம்; இப்ராஹீம் நின்ற இடத்தை — மகாமு இப்ராஹீமை — தொழும் இடமாக நீங்கள் ஆக்கிக் கொள்ளுங்கள்" (என்றும் நாம் சொன்னோம்). இன்னும் 'என் வீட்டைச் சுற்றி வருபவர்கள், தங்கியிருப்பவர்கள், ருகூஃ செய்பவர்கள், ஸுஜூது செய்பவர்கள் ஆகியோருக்காகத் தூய்மையாக அதனை வைத்திருக்க வேண்டும்' என்று இப்ராஹீமிடமிருந்தும், இஸ்மாயீலிடமிருந்தும் நாம் உறுதி மொழி வாங்கினோம்.*

125. உயர் இலட்சியங்களைக் கொண்ட செயல்திட்டங்களை நடைமுறைப்படுத்த இப்ராஹிம் ஏற்படுத்திய தலைமைச் செயலகம்தான் 'கா.ஃபா' என்ற பெயர்பெற்ற இடமாகும். அதன் நோக்கம் ஒட்டுமொத்த மனிதஇனமும் தங்களுக்குள் உள்ள பகைமை மற்றும் வேற்றுமையை நீக்கிவிட்டு ஓரிறைக்கொள்கையின் அடிப்படையில் ஒருங்கிணைய வேண்டும் என்பதேயாகும். இப்படியாக குலம், கோத்திரம், நிறம், மொழி, நாடு என்ற அடிப்படையில் ஏற்பட்டுள்ள பிரிவினையையும் மனிதர்களிடையே நிலவிவரும் வேற்றுமையை நீக்குவதேயாகும். இவ்வாறாக உலக சமாதானத்திறகாக செயல்படும் இடமாக இந்த கா.ஃபா உருவெடுக்க வேண்டும். இதுவே இப்ராஹிம் நின்ற நிலைப்பாடாகும். மனிதன் ஒரு நாள் இல்லை ஒரு நாள் இந்த கொள்கையின் பக்கம் வந்தே ஆக வேண்டும். அப்போதுதான் மனிதன் சுயமாக சிந்தித்து செயலாற்றும் தகுதியை பெறமுடியும். (பார்க்க: 3:96, 14:35 & 22:26)

(நீங்களும் அந்த இலட்சிய இலக்கை பெற எண்ணினால் அவர் நின்ற இடத்தை அடைய விரும்பினால் இறைக் கொள்கையின் அடிப்படையில் முயலுங்கள்.)

கா.ஃபா என்ற இந்த இடத்தை ஒட்டுமொத்த மனிதஇனத்தின் தலைமை செயலகமாக ஆக்கும்படி இப்ராஹீம் மற்றும் இஸ்மாயில் ஆகிய இருவருக்கும் இறைவனிடமிருந்து அறிவுரை வந்தது. மேலும் இந்த இடத்ததை மனிதர்களின் சடங்கு சம்பிரதாயங்களிலிருந்து பாதுகாத்து தூய்மையான இடமாக வைத்திருக்க வேண்டும்(பாாக்க: 2:143). இங்கு அல்லாஹ்வின் கட்டளைக்கு மட்டும் அடிபணியும் இடமாக வைத்திருக்கவேண்டும். இதைக்கொண்டு ஒட்டுமொத்த மனிதஇனத்தின் பாதுகாக்கும் இயக்கமாக உருவெடுக்கவேண்டும். மேலும் மக்களிடையே ஏற்படும் பிரச்சனைகளுக்கு சுமூகமான முறையில் தீர்த்து பிரிவினைவாதத்திற்கு முடிவுகட்ட வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டனர்.

126 وَاِذْ قَالَ اِبْرٰهٖمُ رَبِّ اجْعَلْ
هٰذَا بَلَدًا اٰمِنًا وَّارْزُقْ اَهْلَهٗ
مِنَ الثَّمَرٰتِ مَنْ اٰمَنَ مِنْهُمْ
بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِ ؕ قَالَ وَ
مَنْ كَفَرَ فَاُمَتِّعُهٗ قَلِيْلًا ثُمَّ
اَضْطَرُّهٗٓ اِلٰى عَذَابِ النَّارِ ؕ
وَبِئْسَ الْمَصِيْرُ ۝

126. இந்த கொள்கையின்படி தலைமைச் செயலகத்தை ஆரம்பித்து வைத்த இப்ராஹிம், " இறைவா! அகிலங்கள் அனைத்தையும் பரிபாலிப்பவனே! உலகமக்கள் அனைவருடைய துன்பம் துயரங்களைத் தீர்த்து அமைதியை காக்கும் புகலிடமாக இந்த பட்டணத்தை ஆக்குவாயாக.(பார்க்க: 95:3) உலகில் எந்த பகுதியை சேர்ந்தவர்களாயினும் சரியே, யாரெல்லாம் உன்னுடைய வழிகாட்டுதலின் உண்மை நிலையை ஏற்று வருங்கால நலத்திட்டங்களைப் பற்றி சிந்தித்து செயலாற்ற விரும்புகிறார்களோ(பார்க்க: 22:25) அவர்கள் வாழ்வில் அனைத்து வசதிகளையும் சந்தோஷங்களையும்

*126. (இன்னும் நினைவு கூருங்கள்:) இப்ராஹீம்: "இறைவா! இந்தப் பட்டணத்தைப் பாதுகாப்பான இடமாக ஆக்கி வைப்பாயாக! இதில் வசிப்போரில் யார் அல்லாஹ்வையும், இறுதி நாளையும் நம்புகிறார்களோ அவர்களுக்குப் பல வகைக் கனிவர்க்கங்களையும் கொண்டு உணவளிப்பாயாக" என்று கூறினார்; அதற்கு இறைவன் கூறினான்: "(ஆம்;) யார் நம்பிக்கை கொள்ளவில்லையோ அவனுக்கும் சிறிது காலம் சுகானுபவத்தை அளிப்பேன்; பின்னர் அவனை நரக நெருப்பின் வேதனையில் நிர்ப்பந்திப்பேன் - அவன் சேரும் இடம் மிகவும் கெட்டதே."*

ஏற்படுத்தி தருவாயாக(பார்க்க: 14:25)." என்று தம் மனதில் உருவான அழகான எண்ணங்களை இறைவனிடம் சமர்ப்பித்தனர்.

"ஆம். கண்டிப்பாக கிடைக்கும். ஆனால் யார் இறைக்கொள்கை கோட்பாடுகளை ஏற்க மறுத்து தன் மனோஇச்சையின்படி வாழ்கிறார்களோ அவர்களுக்கு இறை நியதிப்படி குறுகிய காலப் பலன்கள் மட்டும் கிடைக்கும் அதாவது இந்த உலகில் வாழ்வதற்கான வாழ்வாதாரங்களும் வசதிகளும் எல்லோருக்கும் கிடைப்பது போல் கிடைத்துவிடும் (பார்க்க: 17:18-20). அதன்பின் காலப்போக்கில் அவர்கள் செய்துவரும் தீயச்செயல்களின் விளைவாக வறுமையும் நெருக்கடியும் இழிவும் பீடித்துக்கொண்டு அவர்கள் இவ்வுலகிலும் மறுஉலகிலும் நரகவேதனைக்கு ஆளாவார்கள்." என்பது இறைவனின் பதில் ஆகும். எத்தனை துரதிர்ஷ்டமான நிலைமை அத்தகையவர்களுக்கு!

127 وَإِذْ يَرْفَعُ إِبْرٰهِيمُ الْقَوَاعِدَ
مِنَ الْبَيْتِ وَإِسْمٰعِيلُ رَبَّنَا
تَقَبَّلْ مِنَّا إِنَّكَ أَنْتَ السَّمِيعُ
الْعَلِيمُ ۝

*127. இப்ராஹீமும், இஸ்மாயீலும் இவ்வீட்டின் அடித்தளத்தை உயர்த்திய போது, "எங்கள் இறைவனே! எங்களிடமிருந்து (இப்பணியை) ஏற்றுக் கொள்வாயாக; நிச்சயமாக நீயே (யாவற்றையும்) கேட்பவனாகவும் அறிபவனாகவும் இருக்கின்றாய்" (என்று கூறினர்).*

127. இத்தகைய உயர்ந்த எண்ணங்களுடன் இப்ராஹிமும் இஸ்மாயிலும் அந்த தலைமைச் செயலகத்தை தொடங்கிவைத்தனர். அதன் செயல்பாட்டு மேலும் விசாலப்படுத்த கட்டுமானப் பணியிலும் ஈடுபட்ட அவர்கள், இந்த சிறிய பணியினை ஏற்றுக்கொள்ளும்படி இறைவனிடம் பிரார்த்தித்த வண்ணமிருந்தனர். மனதில் உதிக்கும் எண்ணங்களையும் தெரிந்துக்கொள்ளும் ஆற்றலுடையவனாகவும் நம் பிரார்த்தனைகளை கேட்பவனாகவும் இருக்கின்றாய் என்று இறைவனை புகழாரம் செய்தவண்ணமிருந்தனர்.

128 رَبَّنَا وَاجْعَلْنَا مُسْلِمَيْنِ لَكَ
وَمِنْ ذُرِّيَّتِنَا أُمَّةً مُسْلِمَةً
لَكَ وَأَرِنَا مَنَاسِكَنَا وَتُبْ عَلَيْنَا
إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الرَّحِيمُ ۝

*128. "எங்கள் இறைவனே! எங்கள் இருவரையும் உன்னை முற்றிலும் வழிபடும் முஸ்லிம்களாக்குவாயாக;*

*எங்கள் சந்ததியினரிடமிருந்தும் உன்னை முற்றிலும் வழிபடும் ஒரு கூட்டத்தினரை (முஸ்லிம் சமுதாயத்தை) ஆக்கி வைப்பாயாக; நாங்கள் உன்னை வழிபடும் வழிகளையும் அறிவித்தருள்வாயாக; எங்களை(க் கருணையுடன் நோக்கி எங்கள் பிழைகளை) மன்னிப்பாயாக; நிச்சயமாக நீயே மிக்க மன்னிப்போனும், அளவிலா அன்புடையோனாகவும் இருக்கின்றாய்."*

128. இறைக்கொள்கை கோட்பாடுகளுக்கு உட்பட்டு அந்த தலைமை செயலகம் நிலைத்திருக்க வேண்டும் என்கின்ற தம் எண்ணங்களை இறைவனிடம் அவ்விருவரும் சமர்ப்பித்தனர். தாம் மட்டுமின்றி தமக்கு பின்னால் வரும் சந்ததியார்களும் இதேபோல் செயல்படவேண்டும் என்றும் அதற்கான வழிமுறைகளை காட்ட வேண்டும் என்றும் இறைவனிடம் வேண்டிக்கொண்டனர். யார் இறைவன் வகுத்துத்தந்துள்ள வழிமுறைகளைப் பின்பற்ற முன்வருகிறார்களோ அவர்களுக்கு இறைவனிடமிருந்து கண்ணியமான வாழ்க்கை வசதிகள் தேடி வந்துவிடுகின்றன(பார்க்க: 2:186) என்பதை அவ்விருவரும் அறிந்தவர்களாக இருந்தனர்.

129 رَبَّنَا وَابْعَثْ فِيهِمْ رَسُولًا مِنْهُمْ
يَتْلُوا عَلَيْهِمْ آيٰتِكَ وَيُعَلِّمُهُمُ
الْكِتٰبَ وَالْحِكْمَةَ وَيُزَكِّيهِمْ
إِنَّكَ أَنْتَ الْعَزِيزُ الْحَكِيمُ ۝

129. இறைவா! உன்னுடைய வழிகாட்டுதலை மக்களுக்கு எடுத்துரைத்து அவர்களுக்கு நீ வகுத்துத்தந்துள்ள சட்டதிட்டங்களையும் அதன் நோக்கங்களையும் (ஹிக்மாவை) விளக்கி, அவர்களிடையே உள்ள சீர்கேடுகளை நீக்கி, ஒரு உன்னதமான சமுதாயம் உருவாக, செயல்திட்டங்களை ஏற்படுத்தும் ஒரு இறைத்தூதரை நம்முடைய

*129.* 'எங்கள் இறைவனே! அவர்களிடையே உன்னுடைய வசனங்களை ஓதிக் காண்பித்து; அவர்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுத்து; அவர்களைத் தூய்மைப் படுத்தக் கூடிய ஒரு தூதரை அவர்களிலிருந்தே எழுந்திடச் செய்வாயாக - நிச்சயமாக நீயே வல்லமை மிக்கோனுமாகவும், பெரும் ஞான முடையோனுகவும் இருக்கின்றுய்."

சந்ததியினரிடமிருந்து அனுப்புவாயாக. இப்படியாக உன்னுடைய மார்க்கம் நிறைவுபெற்று (6:115) அதை பின்பற்றுவதால் ஏற்படும் நன்மைகளைப் பற்றியும் இதை நிராகரித்து வாழ்வதால் ஏற்படும் விபரீத விளைவுகளைப்பற்றியும் எடுத்துரைத்து (2:231), (17:39) , குர்ஆனின் அடிப்டையில் தலைச்சிறந்த சமுதாயம் வருவாக வழிநடத்திசெல்பவர் ஒருவர் வரவேண்டும். (அந்த இறைத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் ஆவார்.) நிச்சயமாக இந்த மாபெரும் பணியை நிறைவேற்ற இறைவனுடைய செயல்திட்டம் வல்லமையும் ஞானமும் மிக்கதாய் இருக்கின்றன என்று அவ்விருவரும் பிரார்த்தித்தனர்.

130 وَمَنْ يَّرْغَبُ عَنْ مِّلَّةِ اِبْرٰهٖمَ اِلَّا مَنْ سَفِهَ نَفْسَهٗ ؕ وَلَقَدِ اصْطَفَيْنٰهُ فِى الدُّنْيَا ۚ وَاِنَّهٗ فِى الْاٰخِرَةِ لَمِنَ الصّٰلِحِيْنَ ○

ருகூஃ 16

*130.* இப்ராஹீமுடைய மார்க்கத்தைப் புறக்கணிப்பவன் யார்? - தன்னைத் தானே தாழ்த்திக் கொள்பவனைத் தவிர; நிச்சயமாக நாம் அவரை(த் தூய்மையாளராக) இவ்வுல கில் தேர்ந்தெடுத்தோம்; நிச்சயமாக அவர் மறுமையில் நல்லடியார் கூட்டத்திலேயே இருப்பார்.

130. இவைகள்தான் இப்ராஹிமுடைய மாபெரும் இலட்சியங்களும் செயல்திட்டங்களும் ஆகும். இப்படியாகத்தான் அவர் தம் செயல்பாடுகளால் உலகிலும் பாராட்டிற்குரியவராக ஆனார். மறுமை வாழ்விலும் சுபிட்சமாக வாழக்கூடிய தகுதியுடையவர்கள் பட்டியலில் இடம் பெறுவார்.(பாாக்க: 16:120-122) இந்த மாபெரும் இலட்சியங்களையும் செயல்திட்டங்களையும் ஏற்க மறுப்பவனைப்பற்றி என்னவென்று சொல்வது? மனிதநேயம் மனிதமாண்புகள் மனிதவளம் போன்றவற்றில் அக்கறை காட்டாதவன், தான் மனிதனாய் பிறந்ததன் நோக்கத்தைப்பற்றி அறியாதவனே. இப்படிப்பட்டவர்கள் தம்மைத்தானே இழிநிலைக்கு ஆளாவார்கள் அல்லவா?

131 اِذْ قَالَ لَهٗ رَبُّهٗۤ اَسْلِمْ ۙ قَالَ اَسْلَمْتُ لِرَبِّ الْعٰلَمِيْنَ ○

*131.* இன்னும், அவரிடம் அவருடைய இறைவன்: "(என்னிடம் முற்றிலும் வழிபட்ட வராகச்) சரணடையும்" என்று சொன்ன போது அவர், "அகிலங்களின் இறைவனுக்கு முற்றிலும் வழிபட்டோனுகச் சரணடைந் தேன்" என்று கூறினுர்.

131. இவைகள்தான் இப்ராஹிமுடைய செயல்பாடுகள். இறைவனுடைய வழிகாட்டுதல்களுக்கு அடிபணிந்து வாழும்படி கூறப்பட்டபோது அகிலங்களையெல்லாம் படைத்து பரிபாலிப்பவனாகிய இறைவனுடைய கட்டளைக்கு முற்றிலும் அடிபணிகிறேன் என்றார். எனவே முஸ்லிம் என்றால் முஸ்லிமுக்கு பிறந்தவன் என்பது அர்த்தமல்ல. மாறாக இறைவனுக்கும் முற்றிலும் அடிபணிந்து செயல்படுபவன் என்பதுதான் பொருளாகும்.

132 وَوَصّٰى بِهَاۤ اِبْرٰهٖمُ بَنِيْهِ وَيَعْقُوْبُ ؕ يٰبَنِىَّ اِنَّ اللّٰهَ اصْطَفٰى لَكُمُ الدِّيْنَ فَلَا تَمُوْتُنَّ اِلَّا وَاَنْتُمْ مُّسْلِمُوْنَ ؕ

*132.* இதையே இப்ராஹீம் தம் குமாரர் களுக்கு வஸிய்யத்து (உபதேசம்) செய்தார்; யஃகூபும் (இவ்வாறே செய்தார்); அவர் கூறினுர்: "என் குமாரர்களே! அல்லாஹ் உங்களுக்குச் சன்மார்க்கத்தை (இஸ்லாமை) தேர்ந்தெடுத்துள்ளான். நீங்கள் முஸ்லிம் களாக அன்றி மரணிக்காதீர்கள்."

132. தான் இறைநெறிமுறைகளில் நிலைத்து நின்று செயல்பட்டதோடு மட்டுமல்லாமல் தன் பிள்ளைகளுக்கும் அதே போன்று இந்த மார்க்கத்தை வாழ்நாள் முழுவதும் கடைபிடித்து செயல்படும்படி உபதேசித்தார். உயிரிருக்கும் வரையில் இதே அடிப்படையில் வாழவேண்டும் என்று அறிவுரை செய்தார். இஸ்ரவேலர்களின் தந்தையாக கருதப்பட்ட யாகூப்பும் (Jaccob) இதே நெறிமுறைகளின்படி வாழ்ந்து காட்டினார்.

133 أَمْ كُنتُمْ شُهَدَآءَ إِذْ حَضَرَ
يَعْقُوبَ الْمَوْتُ إِذْ قَالَ لِبَنِيهِ
مَا تَعْبُدُونَ مِنۢ بَعْدِى قَالُوا
نَعْبُدُ إِلٰهَكَ وَإِلٰهَ ءَابَآئِكَ إِبْرٰهِـۧمَ
وَإِسْمٰعِيلَ وَإِسْحٰقَ إِلٰهًا
وٰحِدًا وَنَحْنُ لَهُۥ مُسْلِمُونَ ○

*133. யஃகூபுக்கு மரணம் நெருங்கிய போது, நீங்கள் சாட்சியாக இருந்தீர்களா? அப்பொழுது அவர் தம் குமாரர்களிடம்: "எனக்குப் பின் நீங்கள் யாரை வணங்குவீர்கள்?" எனக் கேட்டதற்கு, "உங்கள் நாயனை - உங்கள் மூதாதையர் இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக் ஆகியோரின் நாயனை - ஒரே நாயனையே - வணங்குவோம்; அவனுக்கே (முற்றிலும்) வழிப்பட்ட முஸ்லிம்களாக இருப்போம்" எனக் கூறினர்.*

133. யாகூப் தன் வாழ்வின் இறுதி காலக்கட்டத்தில் தன் பிள்ளைகளிடம் என்ன அறிவுரை செய்தார் என்று உங்களுக்குத் தெரியுமா? என்னுடைய மரணத்திற்குப்பின் யாருடைய கட்டளைகளுக்கு அடிபணிந்து வாழ்வீர்கள் என்று அவர்களிடம் வினவினார். உம்முடைய மூத்ததந்தையான இப்றாஹிம், தந்தை இஸ்மாயில் மற்றும் இஸ்ஹாக் ஆகியோர் யாருடைய கட்டளைகளுக்கு அடிபணிந்து வாழ்ந்தார்களோ அகிலங்களை பரிபாலிப்பவனாகிய அதே இறைவனின் கட்டளைகளுக்கு அடிபணிந்து வாழ்வோம் என்று உறுதிமொழி அளித்தனர். மேலும் வாழ்நாள் முழுவதும் உலகமக்கள் நன்மைக்காக பாடுபடுபவர்களாக (முஸ்லிமகளாக) இருப்போம் என்றும் உறுதியளித்தனர்.

134 تِلْكَ أُمَّةٌ قَدْ خَلَتْ لَهَا مَا
كَسَبَتْ وَلَكُم مَّا كَسَبْتُمْ وَلَا
تُسْـَٔلُونَ عَمَّا كَانُوا يَعْمَلُونَ ○

*134. அந்த உம்மத்து (சமூகம்) சென்று விட்டது: அவர்கள் சம்பாதித்தவை அவர்களுக்கே; நீங்கள் சம்பாதித்தவை உங்களுக்கே! அவர்கள் செய்து கொண்டிருந்தது பற்றி நீங்கள் கேட்கப்பட மாட்டீர்கள்.*

134. இவைகள்தான் யூதர்களுடைய முன்னோர்களின் உண்மை வாழ்க்கை வரலாறுகளாகும். அவர்கள் அனைவரும் இலட்சியங்களுடன் வாழ்ந்துகாட்டியவர்கள். ஆனால் இந்த யூதர்களோ அவர்களின் வாரிசுதாரர்கள் என்பதால் உயர்வும் கண்ணியமும் கிடைத்திட வேண்டும் என்று கனவு காண்கிறார்கள். உயர்வும் தாழ்வும் அவரவர் செய்யும் செயல்களைப் பொருத்தே அமையும். இதில் வாரிசு என்ற பேச்சுக்கு இடமேது? அவர்கள் செய்தது அவர்களுக்கு, நீங்கள் செய்வது உங்களுக்கு. நீங்கள் என்ன செய்தீர்கள் என்று அவர்களிடமோ அவர்கள் என்ன செய்துவந்தார்கள் என்று உங்களிடமோ விசாரணை செய்யப்படமாட்டாது.

135 وَقَالُوا كُونُوا هُودًا أَوْ نَصٰرٰى
تَهْتَدُوا قُلْ بَلْ مِلَّةَ إِبْرٰهِـۧمَ
حَنِيفًا وَمَا كَانَ مِنَ الْمُشْرِكِينَ ○

*135. "நீங்கள் யூதர்களாக அல்லது கிறிஸ்தவர்களாக மாறிவிடுங்கள் - நீங்கள் நேர் வழியை அடைவீர்கள்" என்று அவர்கள் கூறுகிறார்கள். "அப்படியல்ல! (நேரான வழியைச் சார்ந்த) இப்ராஹீமின் மார்க்கத்தையே பின்பற்றுவோம், (இணை வைக்கும்) முஷ்ரிக்குகளில் நின்றும் அவரில்லை" என்று (நபியே!) நீர் கூறுவீராக!*

135. (தற்போது முஸ்லிம்களிடைய ஹனஃபி, ஷாஃபி, ஹம்பலி, மாலிகி ஆகிய நான்கு இமாம்களில் ஏதாவது ஒரு இமாமை பின்பற்றினால்தான் நேர் வழி பெற முடியும் என்பதுபோல்) யூதர்களாகவோ கிறிஸ்தவர்களாகவோ மாறினால்தான் நேர்வழி பெற முடியும் என்று கூறுகிறார்கள். இப்றாஹிம் பின்பற்றிய மார்க்கத்தின்பால் ஏன் அழைப்பு விடுவதில்லை என்று அவர்களிடம் கேளுங்கள். ஏனெனில் இப்றாஹிம் யுதராகவோ கிறிஸ்தவராகவோ இருந்ததில்லை(பாாக்க: 3:67) அவர் இறை வழிகாட்டுதல்களுக்கு மட்டும் இணங்கி செயல்படுபவராக இருந்தார். இறைவனுடைய கட்டளைகளில் வேறு எந்த கட்டளையையும் இணையாக வைத்து பேசவுமில்லை செயல்படவுமில்லை. ஆனால் நீங்களோ சுயமாக வழிமுறைகளை ஏற்படுத்திக்கொண்டு இறைவனின் கட்டளைகளோடு இணையாகவைத்து பின்பற்றிவருகிறீர்கள். இது மட்டுமா? இறைத்தூதரையே இறைவனின் அவதாரமாகவும் இறைவனின் மகனாகவும் அல்லது இறைவனாகவும் எடுத்துக்கொள்கிறீர்கள்.

136 قُولُوٓا ءَامَنَّا بِاللَّهِ وَمَآ أُنزِلَ إِلَيْنَا
وَمَآ أُنزِلَ إِلَىٰٓ إِبْرٰهِـۧمَ وَإِسْمٰعِيلَ
وَإِسْحٰقَ وَيَعْقُوبَ وَالْأَسْبَاطِ
وَمَآ أُوتِىَ مُوسَىٰ وَعِيسَىٰ وَمَآ
أُوتِىَ النَّبِيُّونَ مِن رَّبِّهِمْ لَا
نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِّنْهُمْ وَنَحْنُ
لَهُۥ مُسْلِمُونَ ○

136. "வாருங்கள் ! யாருடைய வழிமுறைகளை கடைபிடிப்பதால் வாழ்வில் உயர்வும் சிறப்பும் கிடைக்கும் என்பதை நாம் உங்களுக்கு அறிவிக்கிறோம். நாம் அல்லாஹ்வை ஏற்றுக் கொள்கிறோம். மேலும் ஏனைய நபிமார்கள் மூலமாக அல்லாஹ்வால் இறக்கியருளப்பட்ட வழிகாட்டுதல்களை

*136. (முஃமின்களே!) "நாங்கள் அல்லாஹ்வையும், எங்களுக்கு இறக்கப்பட்ட (வேதத்)தையும்; இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யஃகூப் இன்னும் அவர் சந்ததியினருக்கு இறக்கப்பட்டதையும்; மூஸாவுக்கும், ஈஸாவுக்கும் கொடுக்கப்பட்டதையும் இன்னும் மற்ற நபிமார்களுக்கும் அவர்களின் இறைவனிடமிருந்து கொடுக்கப்பட்டதையும் நம்புகிறோம்; அவர்களில் நின்றும் ஒருவருக்கிடையேயும் நாங்கள் வேறுபாடு காட்ட மாட்டோம்; இன்னும் நாங்கள் அவனுக்கே முற்றிலும் வழிபடுகிறோம்" என்று கூறுவீர்களாக.*

ஏற்றுக்கொள்கிறோம். இந்த வழிகாட்டுதல் அனைத்தும் ஒரே அடிப்படையைக் கொண்டவையாகும். இதற்கு முன் இப்ராஹிம், இஸ்மாயில், இஸ்ஹாக், யாகூப் மற்றும் பனிஇஸ்ராயில் சமுதாயத்தில் வந்த மற்ற இறைத்தூதர்கள் யாவரும் அந்தந்த காலக் கட்டத்தில் வந்த இறைத்தூதர்கள் என்பதையும் அது மட்டுமின்றி மூசா மற்றும் ஈசா என்னும் நபிமார்கள் மூலமாக இறக்கியருளப்பட்ட வழிகாட்டுதல்கள் அனைத்தும் ஒரே அடிப்படையை கொண்டவையாகும் என்பதையும் நாம் ஏற்றுக்கொள்கிறோம். இறைத்தூதர்கள் விஷயத்திலோ இறை வழிகாட்டுதல்கள் விஷயத்திலோ நாம் பாகுபாடு காட்டுவதில்லை. இப்படியாக வந்த இறை வழிகாட்டுதல்களை நாம் முற்றிலும் ஏற்று நடப்பதால் நமக்கு வாழ்வில் உயர்வும் சிறப்பும் கிடைக்கின்றன என்பதை தெரிந்துக்கொள்ளுங்கள்" என்று அவர்களிடம் எடுத்துரையுங்கள்.

13 فَإِنْ اٰمَنُوْا بِمِثْلِ مَآ اٰمَنْتُمْ
بِهٖ فَقَدِ اهْتَدَوْا ۚ وَإِنْ تَوَلَّوْا
فَإِنَّمَا هُمْ فِىْ شِقَاقٍ ۚ فَسَيَكْفِيْكَهُمُ
اللّٰهُ ۚ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ ۝

*137. ஆகவே, நீங்கள் ஈமான் கொள்வதைப் போல் அவர்களும் ஈமான் கொண்டால் நிச்சயமாக அவர்கள் நேர் வழியை பெற்றுவிடுவார்கள்; ஆனல் அவர்கள் புறக்கணித்துவிட்டால் நிச்சயமாக அவர்கள் பிளவில்தான் இருக்கின்றனர். எனவே அவர்களி(ன் கெடுதல்களி)லிருந்து உம்மைக் காப்பாற்ற அல்லாஹ்வே போதுமானவன்; அவன் (யாவற்றையும்) செவியுறுவோனுகவும், (எல்லாம்) அறிந்தோனுமாகவும் இருக்கின்றான்.*

137. இப்படியாக இறை வழிகாட்டுதல்களை ஏற்று நடப்பவர்களைப்போல் இவர்களும் அவற்றை ஏற்று நடக்க முன்வந்தால் இவர்களுக்கும் இறைவன் வகுத்துள்ள நியதிப்படி நேர்வழி கிடைத்துவிடும். ஆனால் அவர்கள் அவற்றை ஏற்க மறுத்தால், காலஞ்சென்ற நபிமார்களை ஏற்க மறுப்பதற்கு சமமாகும். அவர்கள் தம் பிடிவாதத்தில் நிலைத்து நின்று உம்மை எதிர்த்தால் நீர் அவர்களைப் பற்றி பொருட்படுத்தாதீர். அவர்களுடைய சூழ்ச்சிகளிலிருந்து பாதுகாத்துக்கொள்ள அல்லாஹ்வின் ஏற்பாட்டில் அநேக வழிமுறைகள் உள்ளன. ஏனெனில் இறைவனின் இந்த ஆட்சி அமைப்புமுறை அனைத்து விஷயத்தையும் அறிந்துக்கொள்ளும் பேராற்றலுடையதாக விளங்குகின்றது.

138 صِبْغَةَ اللّٰهِ ۚ وَمَنْ أَحْسَنُ
مِنَ اللّٰهِ صِبْغَةً ۫ وَّنَحْنُ لَهٗ
عٰبِدُوْنَ ۝

*138. "(இதுவே) அல்லாஹ்வின் வர்ணம் (ஞான ஸ்னனம்) ஆகும்; வர்ணம் கொடுப்பதில் அல்லாஹ்வைவிட அழகானவன் யார்? அவனையே நாங்கள் வணங்குகின்றோம்" (எனக் கூறுவீர்களாக).*

138. வர்ண சாயங்களை ஒருவர்மீது ஒருவர் தூவிக்கொள்வதிலோ நீரில் மூழ்கி எழுந்து ஞான ஸ்நானம் என்று சொல்லிக்கொள்வதிலோ மக்களின் பிரச்சனைகளுக்கு தீர்வோ, வளமான வாழ்க்கையோ கிடைத்துவிடாது என்பதை அந்த நஸாராக்களிடம் (கிறிஸ்தவர்களிடம்) கூறிவிடுங்கள். வாழ்வின் உயர்வும் கண்ணியமும் என்பது இறைவன் வகுத்துள்ள சட்டதிட்டங்களில் ஒன்றிவிடுவதில்தான் கிடைக்கும். அந்த ஏக இறைவனின் சி:.பத்துக்கள் என்ற குணநல வர்ணங்களை விட சிறந்த வர்ணம் எதுவாக இருக்கமுடியும்? இறைவனின் அழகிய குணநலங்களை மனிதஅளவில் தமக்குள் வளர்த்துக்கொள்ள முயலவேண்டும். அதாவது அவன் இரக்கமுடையவன் என்றால் மனிதனும் அந்த இரக்க குணத்ததை

தனக்குள் வளர்த்துக்கொள்ள வேண்டும். இப்படியாக அல்லாஹ்விடம் அழகிய குணநலன்கள் பல உள்ளன. அந்த குணநலங்களை ஒவ்வொருவரும் சமச்சீர்நிலையில் தமக்குள் வளர்த்துக்கொள்ள பாடுபடவேண்டும். இதற்காக அல்லாஹ் வகுத்துத் தந்துள்ள வாழ்க்கை நெறிமுறைகளை மட்டும் ஏற்றுக்கொண்டு அதன்படி வாழ்ந்தால் மட்டுமே அந்த அழகிய குணநலன்கள் உங்களுக்குள் வளரும்.

139 قُلْ أَتُحَاجُّونَنَا فِي اللَّهِ وَهُوَ رَبُّنَا وَرَبُّكُمْ وَلَنَا أَعْمَالُنَا وَلَكُمْ أَعْمَالُكُمْ وَنَحْنُ لَهُ مُخْلِصُونَ ۝

*139. அல்லாஹ்வைப் பற்றி நீங்கள் எங்களிடம் தர்க்கிக்கிறீர்களா? அவனே எங்கள் இறைவனும், உங்கள் இறைவனும் ஆவான்; எங்கள் செய்கைகளின் (பலன்) எங்களுக்கு; உங்கள் செய்கைகளின் (பலன்) உங்களுக்கு; மேலும் நாங்கள் அவனுக்கே கலப்பற்ற (ஈமான் உடைய)வர்களாக இருக்கின்றோம்" என்று (நபியே! அவர்களுக்கு) நீர் கூறுவீராக.*

139. நாங்களும் உங்களைப் போன்றே இறைவன்மீது நம்பிக்கை கொண்டவர்கள்தாம் என்று அவர்கள் கூறிவருகிறார்கள். விஷயம் இவ்வாறிருக்க இறைவனை ஏற்றுக்கொள்ளும்படி எங்களிடம் கூறிவருவது ஏன் என்று கேட்கிறார்கள். வாருங்கள். நீங்கள் இறைவனை ஏற்றுக்கொண்டதற்கும் நாங்கள் ஏற்றுக்கொண்டதற்கும் என்ன வித்தியாசம் என்பதை விளக்குகிறோம்.

பனிஇஸ்ராயில் சமூகத்தவர்களை மட்டும் அருட்கொடைகளை கொடுப்பவன்தான் இறைவன் என்ற கண்ணோட்டம் இஸ்ரவேலர்களிடம் உள்ளது. ஆனால் நாங்களோ அகிலங்கள் அனைத்தையும் படைத்து பரிபாலிப்பவன்தான் இறைவன் என்ற கண்ணோட்டத்தை கொண்டிருகிறோம் (பார்க்க: 1 : 1-2).

மனித உருவில் தோன்றி மனிதர்களின் பாவச் செயல்களுக்கு பகரமாக விளங்குபவர்தான் இறைவனான இயேசு என்ற கண்ணோட்டத்தை கிறிஸ்தவர்கள் வைத்திருக்கிறார்கள். ஆனால் நாங்களோ இறைவன் பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை. அவன் மனித உருவில் வருவதுமில்லை. அவன் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற நியதிப்படி அவரவர் செய்யும் செயல்களுக்குரிய வினையை அவரே சந்திக்கவேண்டும் என்று இறைவன் விதித்துள்ளான். இதிலிருந்து யாரும் தப்ப முடியாது என்று நம்புகிறோம். இதில் யாருடைய பரிந்துரையின் பேரிலோ இரத்தம் சிந்தி பாவச்செயல்களை மன்னித்துவிடுவது என்ற பேச்சுக்கோ ஒருபோதும் இடமில்லை.(பார்க்க: 2:123) இப்போது நீங்களும் நாங்களும் இறைவனை ஏற்றுக் கொண்டதற்கு என்ன வித்தியாசம் என்பதை புரிந்துக் கொண்டீர்களா? இதற்கு பின்பும் நீங்கள் இறைவனைப்பற்றி தர்கிப்பவர்களாக இருந்தால், அது உங்களுடைய விருப்பம். நம்மைப் பொருத்தவரையில் நாம் முற்றிலும் இறைவனின் கொள்கை கோட்பாடுகளுக்கு உளப்பூர்வமாக ஏற்று செயல்படுவராக இருக்கின்றோம். எங்கள் செயல்களின் பலன் எங்களுக்கு உங்கள் செயல்களின் பலன் உங்களுக்கு என்ற இந்த விஷயத்தை அவர்களுக்கு விளக்கிவிடுங்கள்.

140 أَمْ تَقُولُونَ إِنَّ إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ وَيَعْقُوبَ وَالْأَسْبَاطَ كَانُوا هُودًا أَوْ نَصَارَىٰ ۗ قُلْ أَأَنْتُمْ أَعْلَمُ أَمِ اللَّهُ ۗ وَمَنْ أَظْلَمُ مِمَّنْ كَتَمَ شَهَادَةً عِنْدَهُ مِنَ اللَّهِ ۗ وَمَا اللَّهُ بِغَافِلٍ عَمَّا تَعْمَلُونَ ۝

140. இந்த அளவிற்கு விரிவான விளக்கங்களை அளித்தபின்பும் (பார்க்க: 2:136) இப்ராஹிம், இஸ்மாயில், இஸ்ஹாக், யாகூப் மற்றும் அவர்களுடைய சந்ததியார்கள் யாவரும் யூதர்களே அல்லது கிறிஸ்வர்களே என்ற விவாதத்தில் இருக்கின்றீர்களா? அல்லது உங்கள் விவாதம் "இறைவன் புறத்திலிருந்து வந்த செய்திகளின் அடிப்படையிலானதா? ஆக உண்மை நிலையை

140. "இப்ராஹீமும், இஸ்மாயீலும், இஸ்ஹாக்கும், யஃகூபும், இன்னும் அவர்களுடைய சந்ததியினர் யாவரும் நிச்சயமாக யூதர்கள் அல்லது கிறிஸ்தவர்களே" என்று கூறுகின்றீர்களா? (நபியே!) நீர் கேட்பீராக: "(இதைப் பற்றி) உங்களுக்கு நன்றாகத் தெரியுமா அல்லது அல்லாஹ்வுக்கா? அல்லாஹ்விடமிருந்து தன்பால் வந்திருக்கும் சாட்சியங்களை மறைப்பவனைவிட அநியாயக்காரன் யார்? இன்னும் அல்லாஹ் நீங்கள் செய்பவை பற்றிப் பராமுகமாக இல்லை."

அல்லாஹ்விற்கு நன்றாக தெரியுமா அல்லது உங்களுக்கா?" என்று அவர்களிடம் கேளுங்கள். இந்த விஷயத்தைப் பற்றிய உண்மை விவரம் அவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் உண்மை விஷயங்களை தெரிந்துக்கொண்டே இது அல்லாஹ்விடமிருந்து வந்தவை என்று கூறி உண்மையை மறைக்கிறார்கள். மக்களிடம் இந்த உண்மையை மறைக்கலாம். ஆனால் அல்லாஹ்விடம் மறைக்கமுடியுமா?. உங்களுடைய ஒவ்வொரு அசைவும் அவனுடைய கண்காணிப்பில் வராமல் இருந்துவிடமுடியாது என்பதையும் அவர்களிடம் சொல்லிவிடுங்கள். (பார்க்க: 50 : 17 & 18)

141 تِلْكَ أُمَّةٌ قَدْ خَلَتْ لَهَا مَا كَسَبَتْ وَلَكُم مَّا كَسَبْتُمْ وَلَا تُسْأَلُونَ عَمَّا كَانُوا يَعْمَلُونَ ۝

141. அந்த உம்மத்து (சமூகம்) சென்று விட்டது. அவர்கள் சம்பாதித்தவை அவர்களுக்கே; நீங்கள் சம்பாதித்தவை உங்களுக்கே! அவர்கள் செய்து கொண்டிருந்தது பற்றி நீங்கள் கேட்கப்பட மாட்டீர்கள்.

141. இதற்கு பின்பும், உங்களுடைய முன்னோர்கள் இவ்வாறு இருந்ததில்லை என்று வாதிப்பீர்களாயின் இதனால் ஆகப்போவது எதுவும் கிடையாது. ஏனெனில் அவர்கள் செயல்பட்டது அவர்களுக்கு. நீங்கள் செயல்படுவது உங்களுக்கு. (ஏற்கனவே 2:134)ல் குறிப்பிட்டது போல நீங்கள் செய்ததைப் பற்றி அவர்களிடமோ அவர்கள் செய்ததுப்பற்றி உங்களிடமோ வினவப்பட மாட்டாது. நீங்கள் என்ன செய்தீர்கள் என்பதைப்பற்றி உங்களிடம்தான் கேட்கப்படும். இதுவே மார்க்கத்தின் அடிப்படையான மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற கோட்பாடாகும்.

142 سَيَقُولُ السُّفَهَاءُ مِنَ النَّاسِ مَا وَلَّاهُمْ عَن قِبْلَتِهِمُ الَّتِي كَانُوا عَلَيْهَا قُل لِّلَّهِ الْمَشْرِقُ وَالْمَغْرِبُ يَهْدِي مَن يَشَاءُ إِلَىٰ صِرَاطٍ مُّسْتَقِيمٍ ۝

பகுதி 2
ருகூஉ 17

142. மக்களில் அறிவீனர்கள் கூறுவார்கள்: "(முஸ்லிம்களாகிய) அவர்கள் முன்னர் நோக்கியிருந்த கிப்லாவை விட்டுத் திருப்பி விட்டது எது?" என்று. (நபியே!) நீர் கூறும்: "கிழக்கும், மேற்கும் அல்லாஹ்வுக்கே உரியவை; தான் நாடியவரை அவன் நேர் வழியில் நடத்திச் செல்வான்" என்று.

142. ஏற்கனவே கிப்லா என்னும் தலைமைச் செயலகம் பைத்துல் மு∴கத்தஸாக இருந்துவரும் நிலையில், இறைவனின் ஆணைக்கு முற்றிலும் தலை வணங்கும் முஸ்லிம்கள் அதை புறக்கணித்து விட்டு இந்த கா∴பாவை புதிய தலைமை செயலகமாக தேர்ந்தெடுத்துக் கொண்டது ஏன் என்று அந்த யூதர்கள் அறிவில்லாமல் கேட்டு வருகிறார்கள். அவர்கள் சற்று சிந்தித்திருந்தால் உண்மை விஷயம் என்னவென்று புரிந்திருக்கும். பைத்துல் மு∴கத்தஸ் என்பது பனிஇஸ்ராயில் சமூகத்தவர்களின் தனிப்பட்ட தலைமை செயலகமாக செயல்பட்டு வருகிறது. ஆனால் சாந்தியும் சமாதானத்தின் அடிப்படையிலான இந்த மாபெரும் இஸ்லாமிய அமைப்பு ஒட்டுமொத்த மனிதகுல மேம்பாட்டின்பால் விடப்படும் அழைப்பாகும். எனவே இப்படிப்பட்ட அமைப்பு தனிப்பட்ட சமூகம் என்ற அடிப்படையில் செயல்படலாகாது. கிழக்கிலும் மேற்கிலும் உள்ள உலகமக்கள் அனைவரின் பாதுகாப்பை முன் வைத்தே வகுக்கப்படும் செயல் திட்டங்களாகும். இந்த குறிக்கோள்களை முன் வைத்து அல்லாஹ்வின் 'மஷீயத்' என்னும் செயல் திட்டத்தின்படி முஸ்லிம்களுக்கு நேர்வழி காட்டப்படுகிறது.

143. சமூகநலத் தொண்டர்களே ! இவர்களுடைய இந்த ஆட்சேபனைகளைப் பற்றி நீங்கள் சற்றும் கவனம் செலுத்தாதீர்கள். அல்லாஹ்வின் செயல்திட்டப்படி நீங்கள் உலகமக்கள் மத்தியில் நடுநிலை

143 وَكَذٰلِكَ جَعَلْنٰكُمْ اُمَّةً وَّسَطًا لِّتَكُوْنُوْا شُهَدَآءَ عَلَى النَّاسِ وَ يَكُوْنَ الرَّسُوْلُ عَلَيْكُمْ شَهِيْدًا ؕ وَمَا جَعَلْنَا الْقِبْلَةَ الَّتِىْ كُنْتَ عَلَيْهَآ اِلَّا لِنَعْلَمَ مَنْ يَّتَّبِعُ الرَّسُوْلَ مِمَّنْ يَّنْقَلِبُ عَلٰى عَقِبَيْهِ ؕ وَاِنْ كَانَتْ لَكَبِيْرَةً اِلَّا عَلَى الَّذِيْنَ هَدَى اللّٰهُ ؕ وَمَا كَانَ اللّٰهُ لِيُضِيْعَ اِيْمَانَكُمْ ؕ اِنَّ اللّٰهَ بِالنَّاسِ لَرَءُوْفٌ رَّحِيْمٌ ○

*143.* இதே முறையில் நாம் உங்களை ஒரு நடு நிலேயுள்ள உம்மத்தாக (சமுதாய மாக) ஆக்கியுள்ளோம்; (அப்படி ஆக்கிய து) நீங்கள் மற்ற மனிதர்களின் சாட்சியாளர் களாக இருப்பதற்காகவும், ரஸூல் (நம் தூதர்) உங்கள் சாட்சியாளராக இருப்பதற் காகவுமேயாகும்: யார் (நம்) தூதரைப் பின்பற்றுகிருர்கள்; யார் (அவரைப் பின் பற்ருமல்) தம் இரு குதிங் கால்கள் மீது பின் திரும்பிச் செல்கிருர்கள் என்பதை அறி(வித்து விடு)வான் வேண்டி கிப்லாவை நிர்ணயித்தோம்; இது அல்லாஹ் நேர்வழி காட்டியோருக்குத் தவிர மற்றவர்களுக்கு நிச் சயமாக ஒரு பளுவாகவே இருந்தது; அல் லாஹ் உங்கள் ஈமானை (நம்பிக்கையை) வீணுக்கமாட்டான்; நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது மிகப்பெரும் கருணை காட்டு பவன், நிகரற்ற அன்புடையவன்.

வகிக்கும் சமூகத்தினராக இருந்து பணியாற்றவேண்டும். அவர்களில் யார் பக்கமும் சாயாமல் அனைவரையும் சரிசமமாக பாவித்து செயல்பட வேண்டும். அவர்களுக்கிடையே யாரும் யாருக்கெதிராகவும் அநீதி இழைக்காதவாறு சாந்தியும் சமாதானமும் நிலைக்க கண்காணிக்கும் காவலர்களாக இருக்க வேண்டும். அவர்களிடம் வந்த இறைத்தூதர் அல்லது இறை வழிகாட்டுதல்கள் இறைவனுடைய ஆட்சியமைப்பு உருவாக வந்த அரசியல் சாஸனம் (Constitutional Status) என்ற அடிப்படையில் செயல்பட வேண்டும். இதுவே ஒரு சிறந்த ஆட்சியமைப்பு என்பதற்கு உங்களுடைய செயல்பாடுகளும் நடத்தையும் சாட்சியாக திகழ வேண்டும்.

ஆக கா..பா என்னும் தலைமைச் செயலகம் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் என்ற அடிப்படையில் இல்லாமல் உலகமக்கள் அனைவரின் பாதுகாப்பை முன் வைத்து இயங்கவேண்டும். எனவே நபியே ! நீர் தேர்ந்தெடுத்த கிப்லாவை இறைவன் ஒப்புதல் அளித்ததற்கு காரணம் என்னவென்றால் இதைக்கொண்டு உண்மையிலேயே உம்மை பின்பற்றுபவர்கள் யார் உம்மை நிராகரிப்பவர்கள் யார் என்ற உண்மையை தெளிவாக்கிடத்தான்.

சம்பிரதாய கலாச்சாரத்தில் இன்னமும் மூழ்கி இருப்பவர்களுக்கு அதை விட்டு வெளியே வருவது மிகவும் சிரமமாகத் தெரியும். பாரம்பரியம் மூடநம்பிக்கை போன்றவற்றை நீக்கி இறைவனின் வழிகாட்டுதல்களை பின்பற்ற முன்வந்தால் மட்டுமே அதைவிட்டு வெளியே வரமுடியும். மேலும் நம்முடைய குலம் கோத்திரம் கலாச்சாரம் சமுதாயம் என்ற அடிப்படையில் வாழ நினைப்பவர்கள் சம்பிரதாய சடங்குகளை விட்டுவிட்டால் பெருத்த நஷ்டத்திற்கு ஆளாகிவிடுவோம் என்றும் பயப்படுகிறார்கள். இது தவறான எண்ணங்களாகும். அல்லாஹ்வின் கட்டளைப்படி ஒட்டுமொத்த மனிதசமுதாயத்தின் நலன் என்ற அடிப்படையில் செயல்படுவோர்களின் செயல்கள் எந்த் விதத்திலும் வீண்போகாது என்பது அல்லாஹ்வின் நிலைப்பாடாகும். இதனால் ஒட்டுமொத்த சமுதாயமும் மேம்பட்டு திகழும். அனைத்து வசதி வாய்ப்புகளும் பெருகிவரும்.

144 قَدْ نَرٰى تَقَلُّبَ وَجْهِكَ فِى السَّمَآءِ ۚ فَلَنُوَلِّيَنَّكَ قِبْلَةً تَرْضٰٮهَا ۚ فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَرَامِ ؕ وَحَيْثُ مَا كُنْتُمْ فَوَلُّوْا وُجُوْهَكُمْ شَطْرَهٗ ؕ وَاِنَّ الَّذِيْنَ اُوْتُوا الْكِتٰبَ لَيَعْلَمُوْنَ اَنَّهُ الْحَقُّ مِنْ رَّبِّهِمْ ؕ وَمَا اللّٰهُ بِغَافِلٍ عَمَّا يَعْمَلُوْنَ ○

144. கா..பாதான் இனி நம் ..கிப்லா (தலைமைச் செயலகம்) என்ற தீர்மானம் ஆனதோடு செயலாக்கமும் அதன் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிட வேண்டும் என்று இறைத் தூதரான முஹம்மது நபி அவர்கள் அளவிலா ஆவல் கொள்வது இறைவனின் கவனத்திலிருந்து தப்பவில்லை. இப்படி கண்டிப்பாக ஆகும் என்று அவருக்கு ஆறுதல் அளிக்கப்படுகிறது. இதற்காக அவர் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால் அங்கு நடைபெற்று வரும் இறை வழிகாட்டுதலுக்கு மாற்றமான செயல்களை தடுப்பதிலேயே தம் முழு கவனத்தையும் செலுத்தவேண்டும். உலகில் எந்த பகுதியில் இருந்தாலும் சரியே. தம் முழு கவனத்தையும் இந்த நோக்கமாகவே இருத்தல் அவசியம். உண்மை விஷயம் என்னவென்றால் அந்த வேதக்காரர்களுக்கு இந்த கட்டளைகள் இறைவனிமிருந்து தான் வருகின்றன என்று நன்றாகத் தெரியும். ஏனெனில் இது பற்றிய குறிப்புகள்

*144. (நபியே!) நாம் உம் முகம் அடிக்கடி வானத்தை நோக்கக் காண்கிறோம்; எனவே நீர் விரும்பும் கிப்லாவின் பக்கம் உம்மைத் திடமாக திருப்பி விடுகிறோம்; ஆகவே நீர் இப்பொழுது (மக்காவின்) மஸ்ஜிதுல் ஹறாம் பக்கம் உம் முகத்தைத் திருப்பிக் கொள்ளும். (முஸ்லிம்களே!) இன்னும் நீங்கள் எங்கிருந்தாலும் (தொழுகையின் போது) உங்கள் முகங்களை அந்த (கிப்லாவின்) பக்கமே திருப்பிக் கொள்ளுங்கள்; நிச்சயமாக எவர்கள் வேதம் கொடுக்கப்பட்டிருக்கின்றார்களோ அவர்கள், இது அவர்களுடைய இறைவனிடமிருந்து வந்த உண்மை என்பதை நிச்சயமாக அறிவார்கள்; அல்லாஹ் அவர்கள் செய்வது பற்றிப் பராமுகமாக இல்லை.*

அவர்கள் வேதங்களிலேயே இருக்கின்றன. ஆனால் அவர்களிடமுள்ள பிடிவாதக் குணமும் பொறாமையும் இறைத்தூதரையும் அவருடைய போதனையும் ஏற்றுக்கொள்ள அவர்களை தடுக்கின்றன. எனினும் அவர்கள் செய்வதுயாவும் இறைவனின் பார்வையிலிருந்து தப்பாது என்பதை அவர்கள் உணர்ந்தவர்களாக இல்லை.

145 وَلَئِنْ أَتَيْتَ الَّذِينَ أُوتُوا الْكِتَابَ بِكُلِّ آيَةٍ مَّا تَبِعُوا قِبْلَتَكَ ۚ وَمَا أَنتَ بِتَابِعٍ قِبْلَتَهُمْ ۚ وَمَا بَعْضُهُم بِتَابِعٍ قِبْلَةَ بَعْضٍ ۚ وَلَئِنِ اتَّبَعْتَ أَهْوَاءَهُم مِّن بَعْدِ مَا جَاءَكَ مِنَ الْعِلْمِ ۙ إِنَّكَ إِذًا لَّمِنَ الظَّالِمِينَ ۝

*145. வேதம் கொடுக்கப்பட்டவர்களிடம் நீர் எல்லாவிதமான அத்தாட்சிகளையும் கொண்டு வந்த போதிலும் அவர்கள் உம் கிப்லாவைப் பின்பற்ற மாட்டார்கள்; நீரும் அவர்களுடைய கிப்லாவைப் பின்பற்றுபவர் அல்லர்; இன்னும் அவர்களில் சிலர் மற்றவர்களின் கிப்லாவைப் பின்பற்றுபவர்களும் அல்லர்; எனவே (இதைப் பற்றிய) ஞானம் உமக்குக் கிடைத்த பின் நீர் அவர்களுடைய விருப்பங்களைப் பின்பற்றி நடப்பீராயின், நிச்சயமாக நீர் அநியாயக்காரர்களில் ஒருவராக இருப்பீர்.*

145. எங்கு போட்டி பொறாமை பிடிவாதமும் இருக்கிறதோ அங்கு ஆதாரங்களோ அத்தாட்சிகளோ வேலை செய்யாது. உலகிலுள்ள அனைத்து ஆதாரங்களையும் சமர்ப்பித்தாலும் அவர்கள் உம்முடைய தலைமைச் செயலகத்தை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். உமக்கு தெளிவு கிடைத்தபின் அவர்களுடைய தலைமை செயலகத்தை ஏற்று நீரும் செயல்படமுடியாது. அவர்களுடைய நிலமை என்னவென்று தெரியுமா? உம்மை எதிர்ப்பதில் அவர்கள் ஒருவரையொருவர் கைகோர்த்துக்கொண்டு நிற்கிறார்கள். ஆனால் அவர்களில் பலருடைய தலைமைச் செயலகங்கள் வெவ்வேறாய் இருக்கின்றன. ஆக இறை வழிகாட்டுதல்கள் அனைத்து விஷயங்கயையும் தெளிவாக்கிய பின்னர் அவர்களுடைய மனவிருப்பங்களை நீர் பின்பற்றினால் இறைக் கொள்கைகளுக்கு எதிராக செயல்படுபவர்களின் பட்டியலில் இடம் பெற்றுவிடுவீர்.

146 الَّذِينَ آتَيْنَاهُمُ الْكِتَابَ يَعْرِفُونَهُ كَمَا يَعْرِفُونَ أَبْنَاءَهُمْ ۖ وَإِنَّ فَرِيقًا مِّنْهُمْ لَيَكْتُمُونَ الْحَقَّ وَهُمْ يَعْلَمُونَ ۝

*146. எவர்களுக்கு நாம் வேதங்களைக் கொடுத்தோமோ அவர்கள் தம் (சொந்த) மக்களை அறிவதைப் போல் (இந்த உண்மையை) அறிவார்கள்: ஆனால் அவர்களில் ஒரு பிரிவினர், நிச்சயமாக அறிந்து கொண்டே உண்மையை மறைக்கின்றனர்.*

146. இந்த வேதக்காரர்களுக்கு உண்மை விஷயங்கள் அனைத்தும் தெரிந்துதான் இருக்கின்றன. இறை வழிகாட்டுதல்களின் பக்கம் நீர் விடும் அழைப்பை, எவ்வாறு தான் பெற்றெடுத்த குழந்தைகயை அறிந்துக்கொள்வானோ அவ்வாறே அவர்களும் தெரிந்துக்கொள்கிறார்கள். அப்படி தெரிந்திருந்தும் என்ன பயன்? அவர்களிலுள்ள மதக் குருமார்கள் உண்மை விஷயங்கள் வெளியே வராமல் மறைத்து வைப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள்.

147 الْحَقُّ مِن رَّبِّكَ ۖ فَلَا تَكُونَنَّ مِنَ الْمُمْتَرِينَ ۝

*147. (கிப்லாவைப் பற்றிய) இவ்வுண்மை உம் இறைவனிடமிருந்து வந்ததாகும்; ஆகவே (அதனைச்) சந்தேகிப்போரில் ஒருவராக நீர் ஆகிவிட வேண்டாம்.*

147. ஆக தலைமைச் செயலகம் சம்பந்தமான உண்மை நிலவரம் உமக்கு இறைவனிடமிருந்து எடுத்துரைக்கப்படுகிறது. எனவே இனி அதைப்பற்றிய விவாதம் தேவையற்றது.

148 وَلِكُلٍّ وِّجْهَةٌ هُوَ مُوَلِّيهَا فَاسْتَبِقُوا الْخَيْرٰتِ ۗ أَيْنَ مَا تَكُونُوا يَأْتِ بِكُمُ اللّٰهُ جَمِيعًا ۗ إِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيرٌ ○

**ருகூஃ 18**

*148. ஒவ்வொரு (கூட்டத்த)வருக்கும், (தொழுகைக்கான) ஒரு திசையுண்டு; அவர்கள் அதன் பக்கம் திரும்புபவர்களாக உள்ளனர், நற்செயல்களின் பால் நீங்கள் முந்திக் கொள்ளுங்கள்; நீங்கள் எங்கு இருப்பினும் அல்லாஹ் உங்கள் யாவரையும் ஒன்று சேர்ப்பான் - நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருட்களின் மீதும் பேராற்றல் மிக்கோனாக இருக்கிறான்.*

148. ஒரு நிரந்தர தலைமைச் செயலகம் இருக்கவேண்டியது இன்றியமையாதது என்றாலும், அது ஒரு குறிப்பிட்ட இடத்தில்தான் இருக்கவேண்டும் என்பது ஒருபோதும் இல்லை. இதை நீங்கள் மறந்து விடக்கூடாது. ஏனெனில் சமூகம் அல்லது இடம்தான் முக்கியம் என்பது அல்ல. மேலும் நீங்கள் கவனித்தீர்களானால் உலகில் ஒவ்வொரு சமூகத்தினரும் தத்தம் செயலகத்தை உருவாக்கி வைத்துதான் செயல்படுகிறார்கள். இதில் கவனிக்கவேண்டிய விஷயம் என்னவென்றால் மனிதவளம் பெருக சமூகசேவையில் ஈடுபட்டு நாட்டின் வளர்ச்சிக்காக பாடுபடுவதில் முன்நிலை வகிப்பவர்கள் யார் என்பதேயாகும். (பாாக்க: 2:177) வெறும் தற்காலிக உலகின் சொகுசு வாழ்க்கைக்கான முன்னேற்றம் என்பது மட்டுமல்ல (பாாக்க: 57:20) & 102:1-2). மனிதனுள் மனித நேயம் வளரச்செய்து உயர் பண்புகளைக் கொண்ட சுவனவாதியாக அவன் வாழும் இந்த பூமியை ஆக்கிட வேண்டும். அந்த சுவனம் எவ்வாறு இருக்கும்? பாாக்க: 83:21- 28. நீங்கள் இந்த இலக்கை முன்வைத்து செயல்பட்டு வந்தால் உலகின் எந்த பகுதியில் இருந்தாலும் சரியே, அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை முன்வைத்தே செயல்படவேணடும். நிச்சயமாக எல்லா படைப்புகளும் அவற்றின் செயல்பாடுகளும் அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில்தான் (Control) இருக்கின்றன என்பதை மறக்கலாகாது. இப்படிப்பட்டவர்களுக்குத் தான் இம்மையும் மறுமையும் செழிக்கும்.

149 وَمِنْ حَيْثُ خَرَجْتَ فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَرَامِ ۖ وَإِنَّهُ لَلْحَقُّ مِن رَّبِّكَ ۗ وَمَا اللّٰهُ بِغَافِلٍ عَمَّا تَعْمَلُونَ ○

*149. ஆகவே (நபியே!) நீர் எங்கிருந்து புறப்பட்டாலும் (தொழுகையின் போது) உம் முகத்தைப் புனிதப் பள்ளிவாயிலின் பக்கமே திருப்பிக்கொள்வீராக; நிச்சயமாக இதுதான் உம் இறைவனிடமிருந்து வந்த உண்மை- அல்லாஹ் நீங்கள் செய்பவை பற்றிப் பராமுகமாக இல்லை.*

149. எங்கிருந்து இந்த செயல் திட்டத்தை தொடங்க முடிவெடுத்தாலும் இந்த தலைமைச் செயலகத்தின் பரிசுத்த கோட்பாடுகளை கவனத்தில் கொண்டு செயலில் இறங்கவேண்டும் என்பது இந்த முஸ்லிம்கள் ஜமாஅத்தின் தலையான கடமையாகும். இதுவே உங்கள் இறைவனிடமிருந்து வந்த உண்மையை அடிப்படையாக கொண்ட கட்டளையாகும். நீங்கள் எக்காரணத்தைக் கொண்டும் இதற்கு மாற்றமாக செயல்படக் கூடாது. அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற சட்டம் எப்போதும் உங்களைக் கண்காணித்து பின்தொடர்கிறது என்பதை மறந்துவிடாதீர்கள்.

150 وَمِنْ حَيْثُ خَرَجْتَ فَوَلِّ وَجْهَكَ شَطْرَ الْمَسْجِدِ الْحَرَامِ ۚ وَحَيْثُ مَا كُنْتُمْ فَوَلُّوا وُجُوهَكُمْ شَطْرَهُ لِئَلَّا يَكُونَ لِلنَّاسِ عَلَيْكُمْ حُجَّةٌ إِلَّا الَّذِينَ ظَلَمُوا مِنْهُمْ فَلَا تَخْشَوْهُمْ وَاخْشَوْنِي وَلِأُتِمَّ نِعْمَتِي عَلَيْكُمْ وَلَعَلَّكُمْ تَهْتَدُونَ ○

150. மீண்டும் கேட்டுக் கொள்ளுங்கள், உங்கள் வாழ்க்கை பயணத்தின் அடிப்படை கோட்பாடுகள் உங்களுக்கு அறிவிக்கப்படுகின்றன. உலகின் எந்த பகுதியை சேர்ந்தவர்களாயினும் சரியே, அங்கு இந்த செயல்திட்டத்தை தொடங்க முன்வந்தால் உங்களுடைய முழு கவனமும் இந்த பரிசுத்த தலைமைச் செயலகத்தின் கொள்கை கோட்பாடுகளின் பக்கமே இருத்தல் அவசியம். இறைத்தூதரே! நீரும் இவ்வாறே செய்வீர். உங்களை பின்பற்றிவருபவர்களும் இவ்வாறே செய்யட்டும். நீங்கள் அவ்வாறு செயல்பட்டுவந்தால் உங்களுடைய ஆட்சி அமைப்பின் இலட்சியங்கள் நிறைவேறும். நீங்கள் வெற்றி பெறுவீர்கள். ஒரு சிலர் தம் பிடிவாத போக்கினால் இந்த கொள்கைகளை ஏற்றுக்கொள்ளாமல் இருக்கலாம்.

*150.* ஆகவே (நபியே!) நீர் எங்கிருந்து புறப்பட்டாலும் (தொழுகையின் போது) உம் முகத்தைப் புனிதப் பள்ளிவாயிலின் பக்கமே திருப்பிக் கொள்ளும்; (முஃமின்களே!) உங்களில் அநியாயக்காரர்களைத் தவிர மற்ற மனிதர்கள் உங்களுடன் வீண் தர்க்கம் செய்ய இடங்கொடாமல் இருக்கும் பொருட்டு, நீங்களும் எங்கே இருந்தாலும் புனிதப் பள்ளியின் பக்கமே உங்கள் முகங்களைத் திருப்பிக் கொள்ளுங்கள்; எனவே, அவர்களுக்கு அஞ்சாதீர்கள்; எனக்கே அஞ்சுங்கள்; இன்னும், என்னுடைய நிஃமத்களை (அருள் கொடைகளை) உங்கள் மீது முழுமையாக்கி வைப்பதற்கும், நீங்கள் நேர்வழியினைப் பெறுவதற்கும் (பிறருக்கு அஞ்சாது, எனக்கே அஞ்சுங்கள்).

*151* كَمَآ أَرْسَلْنَا فِيكُمْ رَسُولًا مِّنكُمْ يَتْلُوا
عَلَيْكُمْ ءَايَـٰتِنَا وَيُزَكِّيكُمْ وَيُعَلِّمُكُمُ
ٱلْكِتَـٰبَ وَٱلْحِكْمَةَ وَيُعَلِّمُكُم مَّا لَمْ
تَكُونُوا تَعْلَمُونَ ۝

*151.* இதே போன்று, நாம் உங்களிடையே உங்களிலிருந்தே ஒரு தூதரை, நம் வசனங்களை உங்களுக்கு எடுத்து ஓதுவதற்காகவும்; உங்களைத் தூய்மைப்படுத்துவதற்காகவும்; உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கற்றுக் கொடுப்பதற்காகவும்; இன்னும் உங்களுக்குத் தெரியாமல் இருந்தவற்றை, உங்களுக்குக் கற்றுக் கொடுப்பதற்காகவும் அனுப்பியுள்ளோம்.

*152* فَٱذْكُرُونِىٓ أَذْكُرْكُمْ وَٱشْكُرُوا لِى وَ
لَا تَكْفُرُونِ ۝

*152.* ஆகவே, நீங்கள் என்னை நினைவு கூருங்கள்; நானும் உங்களை நினைவு கூருவேன். இன்னும், நீங்கள் எனக்கு நன்றி செலுத்துங்கள்; எனக்கு மாறு செய்யாதீர்கள்.

*153* يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا ٱسْتَعِينُوا بِٱلصَّبْرِ
وَٱلصَّلَوٰةِ ۚ إِنَّ ٱللَّهَ مَعَ ٱلصَّـٰبِرِينَ ۝

**ருகூஃ 19**

*153.* நம்பிக்கை கொண்டோரே! பொறுமையுடனும், தொழுகையுடனும் (இறைவனிடம்) உதவி தேடுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் பொறுமையுடையவர்களுடன் இருக்கிறான்.

இதற்கு எதிராக பேசி வருபவர்களைப் பற்றி நீங்கள் அச்சங்கொள்ளத் தேவையில்லை. இறை வழிகாட்டுதலுக்கு எதிராக செயல்பட்டு விட்டோமோ என்ற அச்சம் மட்டும் உங்களிடம் இருக்க வேண்டும். வாழ்க்கைக்கான வழிகாட்டுதல்கள் உங்களுக்கு அளிக்கப்பட்டதன் நோக்கமே நீங்கள் நேர்வழி பெற்று வாழ்வின் எல்லா அருட்கொடைகளையும் பெற்றுக்கொள்ளத்தான் (பாாக்க: 5:3). உங்களுடைய ஒவ்வொரு செயலும் அந்த இலக்கை நோக்கியே செல்லவேண்டும்.

151. இந்த குறிக்கோளை முன்வைத்துதான் உங்களில் ஒருவரை இறைத்தூதராக இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு உங்களிடம் வந்துள்ளார். இவர் இறைக்கொள்கை கோட்பாடுகளை உங்களிடம் எடுத்துரைக்கிறார். இறைச் சட்டதிட்டங்கள் என்ன என்பதை அவர் உங்களுக்கு தெளிவாக்குகிறார். மேலும் அந்த சட்டதிட்டங்களின் நோக்கங்கள் (ஹிக்மா) என்ன என்பதையும் எடுத்துரைக்கிறார். அதாவது இந்த இறை வழிகாட்டுதல்கள் கிடைப்பதற்கு முன் உங்களுக்கு தெரியாத எல்லா விஷயங்களையும் எடுத்துரைக்கிறார். இதன் அடிப்படையில் உங்களுடைய ஆற்றல்கள் எல்லா வகையிலும் வளர சிறந்ததொரு சமூகஅமைப்பு மற்றும் ஆட்சியை ஏற்படுத்துகிறார்.

152. நீங்கள் இறைவனின் வழிகாட்டுதலை கவனத்தில் கொண்டு செயல்பட்டுவந்தால் உங்களுக்கு சுபிட்சமான வாழ்வு, உயர்வு மற்றும் கண்ணியமும் கிடைக்கும். (பாாக்க: 21:10, 21:24, 23:71 & 43:44) ஆக ஒரு மாபெரும் இலட்சியங்களைக் கொண்ட வாழ்க்கை நெறிமுறைகள் உங்களுக்கு அளிக்கப்பட்டுள்ளன. அதை மதித்து செயலாற்றுங்கள். நீங்கள் ஒரு போதும் அதிலிருந்து விலகிக் கொள்ளாதீர்கள்.

153. ஒட்டுமொத்த மனிதஇனத்தின் மேம்பாடு என்ற குறிக்கோளை மையமாகக் கொண்டு உருவாக்கப்படும் இந்த அமைப்புமுறை ஒரு சில சந்தர்ப்பவாதிகளுக்கும் சுயநலவாதிகளுக்கும் எதிராக அமைகிறது. எனவே இப்படிப்பட்டவர்களால் பல இன்னல்களும் பேராபத்துகளும் ஏற்படும். இதை எதிர்கொள்ள இரண்டு விஷயங்களை மனதில் பதிய வைத்துக்கொள்ளவேண்டும். ஒன்று – உங்களுக்கு எத்தனை இன்னல்கள் ஏற்பட்டாலும் மனஉறுதிப்பாட்டையும் தைரியத்தையும் ஒருபோதும் கைவிடக் கூடாது. மன வலிமையுடன் தொடர் முயற்சியும் தேவை. இரண்டாவதாக எதிர்தரப்பினர் எவ்வளவுதான் தடைகளை ஏற்படுத்திவந்தாலும் நீங்கள் இறை வழிகாட்டுதல் என்ற சலாத்தை விட்டுவிடக்கூடாது. நீங்கள் இவ்வாறு செயல்பட்டுவந்தால் இறைவன்

வகுத்துள்ள நியதிப்படி (Allah's System) உங்களுக்கு வெற்றி கிடைப்பது நிச்சயம்.

154 وَلَا تَقُولُوا لِمَنْ يُقْتَلُ فِي سَبِيلِ اللَّهِ أَمْوَاتٌ بَلْ أَحْيَاءٌ وَلَٰكِنْ لَا تَشْعُرُونَ

*154. இன்னும், அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டோரை "(அவர்கள்) இறந்துவிட்டவர்கள்" என்று கூறாதீர்கள்; அப்படியல்ல! அவர்கள் உயிருள்ளவர்கள்; எனினும் நீங்கள் (இதை) உணர்ந்து கொள்ள மாட்டீர்கள்.*

154. இந்த உலகில் இறைவனுடைய ஆட்சியமைப்பை ஏற்படுத்துவது என்பது பட்டுகம்பளத்தில் நடந்து சாதிக்கும் ஒரு சொகுசான காரியமல்ல. பல முள்வேலிகளை கடந்துச் செல்ல வேண்டி வரும். சில சமயங்களில் பலர் உயிர் தியாகங்களையும் செய்ய நேரிடும். ஆனால் இந்த மாபெரும் இலட்சியத்திற்காக தன் உயிரை துறந்தவர்கள் மரணிப்பதில்லை. அவர்கள் இறந்துவிட்டனர் என்று சொல்வதும் முறையாகாது. 'நிரந்தர சொர்க்கவாசிகள்' என்பதே சரியான சொல்லாகும். (பாரக்க: 3 : 169) எனவே அப்படிப்பட்டவர்கள் தம் இறைவனிடத்தில் நிரந்தர வாழ்வினை பெற்றுவிடுகின்றனர். ஆனால் மனிதன் உயிருடன் இருக்கும்போது நீங்கள் அவனைப் பார்த்து உணர்ந்துக் கொள்வது போன்று இந்த தியாகிகள் இறைவனிடத்தில் வாழ்வினைப் பெறுவது உங்கள் கண்களுக்கு புலப்படாது. இந்த கோட்பாட்டின்படி அல்லாஹ்வின் பாதையில் உயிர்நீத்தோர் குடும்பத்தாருக்கு அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பு தொடர்ந்து உதவி செய்யும்.

155 وَلَنَبْلُوَنَّكُمْ بِشَيْءٍ مِنَ الْخَوْفِ وَالْجُوعِ وَنَقْصٍ مِنَ الْأَمْوَالِ وَالْأَنْفُسِ وَالثَّمَرَاتِ وَبَشِّرِ الصَّابِرِينَ

*155. நிச்சயமாக நாம் உங்களை ஓரளவு அச்சத்தாலும், பசியாலும், பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றின் இழப்பினாலும் சோதிப்போம்; ஆனால் பொறுமையுடையோருக்கு (நபியே!) நீர் நன்மாராயங் கூறுவீராக!*

155. இந்த மாபெரும் இலட்சிய பணியில் சில சமயங்களில் பல இக்கட்டான சூழ்நிலைகளை சந்திக்க நேரிடும் உங்களில் மனவலிமை, கட்டுப்பாடு, மற்றும் தியாக மனப்பான்மை எந்த அளவிற்கு வளர்ந்துள்ளன என்பதை அப்போதுதான் பரிசோதிக்க முடியும். மோதல்கள் ஏற்படாமல் இதை அறிந்துக் கொள்ளமுடியாது. (பாரக்க: 67:2 ) இதில் சில சமயங்களில் போர் அல்லது கலவரங்கள் ஏற்படலாம். நேரத்தோடு உணவு கிடைக்காமல் பசி பட்டினியாலும் வாடநேரிடும். பொருட்சேதமும் உயிர்ச்சேதமும் ஏற்படும், சிலருடைய விளைச்சல்களும் தோட்டங்களும் பாழாகிவிடும். இவை எல்லாம் ஏற்பட்டாலும் எத்தனை இன்னல்களையும் சோதனைகளையும் சந்திக்க நேர்ந்தாலும் யார் இறைக்கொள்கை கோட்பாடுகளில் நிலைத்து நின்று அயராது உழைக்கிறார்களோ அவர்களுக்கே இறுதியாக வெற்றி கிடைக்கும்.

156 الَّذِينَ إِذَا أَصَابَتْهُمْ مُصِيبَةٌ قَالُوا إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ

*156. (பொறுமை உடையோராகிய) அவர்களுக்குத் துன்பம் ஏற்படும் போது, 'நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள்; நிச்சயமாக நாம் அவனிடமே திரும்பிச் செல்வோம்' என்று கூறுவார்கள்.*

156. உயர் இலட்சியங்களையும் தியாக மனப்பான்மையையும் கொண்ட இவர்களைப் பொருத்தவரை இந்த இன்னல்களும் துயரங்களும் அவர்களுககு கிடைக்கவிருக்கும் வெற்றிக்கு முன்னால் ஒரு பெரிய இழப்பாக இருக்காது. எனவே தம் கொள்கையை விட்டு சற்றும் அசரமாட்டார்கள். உலகில் இறைவனின் ஆட்சியமைப்பை உருவாக்கி சீரமைப்பு பணியில் தம்மை அர்பணித்து செயல்படும்போது (பாரக்க: 6:162) எத்தனை துன்பம் துயரங்கள் வந்தாலும் அவற்றை பொருட்படுத்தாமல் தாம் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை இலக்காகக் கொண்டு செயல்படுபவர்களாகவே இருக்கிறோம் என்று

கூறுவார்கள். மனிதன் தம் பிரச்சனைகளுக்கு நிரந்தர தீர்வு காண அல்லாஹ்வின் இந்த வழிகாட்டுதலுக்கே திரும்பி வந்தாக வேண்டும்.

157 أُولَٰٓئِكَ عَلَيْهِمْ صَلَوٰتٌ مِّن رَّبِّهِمْ وَرَحْمَةٌ ۖ وَأُولَٰٓئِكَ هُمُ الْمُهْتَدُونَ ○

*157. இத்தகையோர் மீது தான் அவா களுடைய இறைவனின் நல்லாசியும், நற் கிருபையும் உண்டாகின்றன, இன்னும் இவர் கள் தாம் நேர் வழியை அடைந்தவர்கள்.*

157. இப்படிப்பட்ட தியாக உள்ளங்கள் படைத்த இலட்சியவாதிகளே இறைவனிடமிருந்து ஆதரவும் நல்லருளும் பெறக்கூடியவர்கள் ஆகிறார்கள். (பாரக்க: 33:43 & 33:56) இவர்களுக்கே இறைவன் புறத்திலிருந்து சகல வசதிகளும் அருட்கொடைகளும் கிடைத்தவண்ணம் இருக்கும். இவர்களே தம் இலட்சிய குறிக்கோளை அடையக்கூடியவர்கள் ஆவார்கள்.

158 إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِن شَعَآئِرِ اللَّهِ ۖ فَمَنْ حَجَّ الْبَيْتَ أَوِ اعْتَمَرَ فَلَا جُنَاحَ عَلَيْهِ أَن يَطَّوَّفَ بِهِمَا ۚ وَمَن تَطَوَّعَ خَيْرًا فَإِنَّ اللَّهَ شَاكِرٌ عَلِيمٌ ○

*158. நிச்சயமாக 'ஸஃபா', 'மர்வா' (என் னும் மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங் களில் நின்றும் உள்ளன; எனவே எவர் (கஃபா என்னும்) அவ்வீட்டை ஹஜ் அல் லது உம்ரா செய்கிறார்களோ அவர்கள் அவ் விரு மலைகளையும் சுற்றி வருதல் குற்ற மல்ல; இன்னும் எவனொருவன் உபரியாக நற்கருமங்கள் செய்கிறானோ, (அவனுக்கு) நிச் சயமாக அல்லாஹ் நன்றியறிதல் காண்பிப் பவனாகவும், (அவனுடைய நற்செயல்களை) நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.*

158. இந்த மாபெரும் செயல்திட்டங்கள் நிறைவேற ஒரு கூட்டமைப்பு இருக்கவேண்டியது அவசியமாகிறது. மேலும் மக்கள் பிரச்சனைகளையும் தேவைகளையும் அறிந்து அவற்றை நிறைவேற்ற கலந்தாலோசனை செய்யும் ஒரு செயலகமோ அல்லது ஜமாத்தோ தேவை. (பாரக்க: 42:38) காபாதான் அந்த செயலகம் என்பதை ஏற்கனவே அறிவிக்கப்பட்டது. (பாரக்க: 2:143) இதற்காக வருடம் ஒரு முறை ஹஜ் என்ற அடிப்படையிலோ அவசரக்காலக் கூட்டமாக உம்ரா என்ற விதத்தில் அவ்வப்போதோ கூடி கலந்து ஆலோசிப்பது அவசியமாகிறது. மக்கள் நலத்திட்டங்களில் விரைந்து செயல்படுவதே அவற்றின் குறிக்கோளாக இருக்கின்றன. (பாரக்க: 2:148) இப்போது இருப்பதோ காபா என்னும் இடத்தில் ஏற்கனவே உள்ள சில வழிமுறைகள் பற்றியதாகும். உதாரணமாக "ஸ:பா மர்வா"வை சுற்றி வருதல். இவையெல்லாம் அல்லாஹ்வின் செயல்முறைகள் அடிப்படையில் மனிதர்கள் அனைவரும் ஓரினத்தவன் என்பதை பிரதிபலிக்கும் நினைவுச் சின்னங்களாக இருந்து வருகின்றன. ஏதுவரையில் காபாவின் முக்கிய குறிக்கோளான மக்கள் நலத்திட்டங்களின் அமைப்பை இந்த வழிமுறைகள் குறிக்கீடுகளாக இல்லையோ அதுவரை அவற்றை கடைபிடிப்பதில் எந்தவித ஆட்சேபனையும் இல்லை. ஆக எவர் இந்த நற்பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிறார்களோ அவர்களுடைய உழைப்புகளின் பலன்கள் நிச்சயமாக கிடைக்கும். ஏனெனில் ஒருவன் செய்யும் காரியங்கள் அனைத்தும் அல்லாஹ்வின் ஞான ஏட்டிற்கு வெளியே செல்ல முடியாது. (பாரக்க: 40 : 19)

159 إِنَّ الَّذِينَ يَكْتُمُونَ مَآ أَنزَلْنَا مِنَ الْبَيِّنَٰتِ وَالْهُدَىٰ مِنۢ بَعْدِ مَا بَيَّنَّٰهُ لِلنَّاسِ فِى الْكِتَٰبِ ۙ أُولَٰٓئِكَ يَلْعَنُهُمُ اللَّهُ وَيَلْعَنُهُمُ اللَّٰعِنُونَ ○

159. இவைகள்தாம் ஹஜ் மற்றும் உம்ராவிற்கு செல்வதன் நோக்கங்களாகும். இது அல்லாஹ்வின் வேதமான இந்த குர்ஆனில் தெளிவாக விளக்கப்படுகிறது. இந்த மாபெரும் செயல்திட்டங்களின் நற்பலன்களை உலகமக்கள் கண்கூடாக பார்த்து அறிந்துக்கொள்ள அனைவரையும் அழைப்பு விடுத்து இதைப் பற்றி தெளிவாக்கப்படுகின்றன. (பாரக்க: 22:28) ஆனால் இந்த உயர்ந்த செயல்திட்டங்களை சடங்கு சம்பிரதாயங்களின் போர்வையில் மறைக்க முயலுவீர்களானால் அல்லாஹ்வின் வழிகாட்டுதல்கள் பயனற்று போகும்.

159. நாம் அருளிய தெளிவான அத்தாட்சி களையும், நேர்வழியையும் - அதனை நாம் வேதத்தில் மனிதர்களுக்காக விளக்கிய பின்னரும் - யார் மறைக்கின்றார்களோ, நிச்சயமாக அவர்களை அல்லாஹ் சபிக்கிறான்; மேலும் அவர்களைச் சபிப்ப(தற்கு உரிமை உடைய)வர்களும் சபிக்கிறார்கள்.

மேலும் இந்த அருட்கொடைகள் கிடைப்பதற்கு காரணியாக விளங்கும் இயற்கை அருட்கொடைகள் (Natural Resources) உங்களுக்கு கிடைக்காமல் போயிவிடும்.

160 إِلَّا الَّذِينَ تَابُوا وَأَصْلَحُوا وَبَيَّنُوا فَأُولَٰئِكَ أَتُوبُ عَلَيْهِمْ ۚ وَأَنَا التَّوَّابُ الرَّحِيمُ

160. எவர்கள் பாவமன்னிப்புத் தேடி (தங்களைத்) திருத்திக் கொண்டு (தாங்கள் மறைத்தவற்றை) தெளிவுபடுத்திக் கொண்டார்களோ அவர்களைத் தவிர (மற்றவர்கள் சாபத்திற்குரியவர்கள்.) அவர்களை நான் மன்னித்து விடுகிறேன். நான் மன்னிப்பவனுகவும், கிருபையுடையோனுகவும் இருக்கின்றேன்.

160. ஒருவேளை நீங்கள் இவ்வாறு அல்லாஹ்வின் செயல்திட்டங்களை மூடி மறைத்து அருட்கொடைகளை இழந்து நின்றால் இதிலிருந்து விமோசனம் பெற ஒருபோதும் வாய்ப்பே இல்லை என்பதில்லை. மீண்டும் உங்கள் வாழ்வில் மறுமலர்ச்சி பெற உங்களால் முடியும். அதற்காக நீங்கள் எந்தந்த வகையில் அல்லாஹ்வின் செயல்திட்டங்களுக்கு மாற்றமாக செயல்பட்டு வந்தீர்களோ அவற்றையெல்லாம் விட்டுவிட்டு மீண்டும் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை தெளிவாக புரிந்து ஏற்றுக்கொண்டு அதன்படி சமுதாயத்தை உருவாக்க பாடுபடுங்கள். அவ்வாறு செய்வீர்களானால் அல்லாஹ்வின் அமைப்புமுறை (Allah's System) நிச்சயமாக உங்களுக்கு துணை நிற்கும்.

161 إِنَّ الَّذِينَ كَفَرُوا وَمَاتُوا وَهُمْ كُفَّارٌ أُولَٰئِكَ عَلَيْهِمْ لَعْنَةُ اللَّهِ وَالْمَلَائِكَةِ وَالنَّاسِ أَجْمَعِينَ

161. யார் (இவ்வேத உண்மைகளை) நிராகரிக்கிறார்களோ, இன்னும் (நிராகரிக்கும்) காஃபிர்களாகவே மரித்தும் விடுகிறார்களோ, நிச்சயமாக அவர்கள் மீது, அல்லாஹ்வுடையவும், மலக்குகளுடையவும், மனிதர்கள் அனைவருடையவும் சாபம் உண்டாகும்.

161. ஆனால் எந்த சமுதாயம் வேத உண்மைகளை ஏற்க மறுத்து தவறான வழியிலேயே செல்கிறதோ அப்படிப்பட்ட சமுதாயமே இறை நிராகரிப்பவர்கள் என ஆகிறார்கள். அந்த சமுதாயம் நிச்சயமாக அல்லாஹ்வின் அருட்கொடைகளை இழந்து தவிக்கும். இது மட்டுமின்றி இயற்கை சக்திகளின் (மலக்குகளின்) ஆதரவையும் பலன்களையும் பெறமுடியாமல் போகும். இதனால் மக்கள் அனைவரின் வாழ்க்கைத் தரமும் மோசமாகி அந்த ஆட்சிக்கு மக்களுடைய ஆதரவும் கிடைக்காமல் போயிவிடும்.

162 خَالِدِينَ فِيهَا ۖ لَا يُخَفَّفُ عَنْهُمُ الْعَذَابُ وَلَا هُمْ يُنْظَرُونَ

162. அவர்கள் அ(ச் சாபத்)திலேயே என்றென்றும் இருப்பார்கள்; அவர்களுடைய வேதனை இலேசாக்கப்படமாட்டாது; மேலும், (மன்னிப்புக் கோர) அவர்களுக்கு அவகாசமும் கொடுக்கப்படமாட்டாது.

162. மேலும் அவர்களின் நிலமை தொடர்ந்து அழிவினை நோக்கியே செல்லும். அவர்களுடைய அழிவினால் ஏற்படும் வேதனைகள் இலேசாக்கப்படமாட்டாது. அதுமட்டுமின்றி அந்த அழிவிலிருந்து தம்மை காப்பாற்றிக்கொள்ள அவர்களுக்கு மீண்டும் அவகாசம் அளிக்கப்படமாட்டாது.

(சமுதாயங்களின் அழிவு என்பது அவர்கள் செய்துவரும் தீயச்செயல்களின் விளைவுகள் என்ற அடிப்படையில் உருவாக்கக்கூடியவை ஆகும். அந்த விளைவுகள் உடனே தோற்றத்திற்கு வராமல் ஒரு குறிப்பிட்ட காலத் தவணைக்குப்பின் உருவெடுக்கின்றன. இந்த காலத் தவணை யுகம் அல்லது நூற்றாண்டுகள் என்ற அடிப்படையிலும் ஏற்படும். அந்த தவணை காலத்திற்கு பின் அந்த சமுதாயம் தம்மை திருத்திக்கொள்ளும் வாய்ப்பை பெறுவதில்லை. எனவே அந்த சமுதாயம் அழிந்தே தீரும். இதுவே இறைவன் உருவாக்கிய விதிமுறையாகும்.) (பார்க்க: 35:45)

163 وَإِلَٰهُكُمْ إِلَٰهٌ وَاحِدٌ لَا إِلَٰهَ إِلَّا هُوَ
الرَّحْمَٰنُ الرَّحِيمُ ۝

*163.* மேலும், உங்கள் நாயன் ஒரே நாயன் தான்; அவனைத் தவிர வேறு நாயனில்லை; அவன் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன்.

163. மேலே சொன்ன விஷயங்கள் யாவும் நடந்தே தீரும். ஏனெனில் இந்த பிரபஞ்சத்தில் அந்த ஏக இறைவனுடைய சட்டங்களே ஆளுகின்றன. அதாவது அந்த ஏக இறைவனான அல்லாஹ்வின் இயற்கைச் சட்டங்கள். இவற்றை தவிர வேறு எந்த சட்டங்களும் இந்த பிரபஞ்சத்தில் ஆள்வதில்லை. அதே அடிப்படையில் உலக மக்களின் வளர்ச்சி பல படித்தரங்களை கடந்து தன் இறுதி இலக்கை நோக்கி செல்கிறது. இது அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் செயல்திட்டமாகும். உலகில் யார் இதற்கு தடையாக நிற்கிறார்களோ அவர்கள் எல்லாம் அகற்றப்படுவார்கள் (பாரக்க: 6:45) . இதுவே சமுதாயங்களின் அழிவு எனப்படும்.

164 إِنَّ فِي خَلْقِ السَّمَاوَاتِ وَالْأَرْضِ
وَاخْتِلَافِ اللَّيْلِ وَالنَّهَارِ وَ
الْفُلْكِ الَّتِي تَجْرِي فِي الْبَحْرِ
بِمَا يَنْفَعُ النَّاسَ وَمَا أَنْزَلَ اللَّهُ
مِنَ السَّمَاءِ مِنْ مَاءٍ فَأَحْيَا بِهِ
الْأَرْضَ بَعْدَ مَوْتِهَا وَبَثَّ فِيهَا
مِنْ كُلِّ دَابَّةٍ وَتَصْرِيفِ الرِّيَاحِ
وَالسَّحَابِ الْمُسَخَّرِ بَيْنَ السَّمَاءِ
وَالْأَرْضِ لَآيَاتٍ لِقَوْمٍ يَعْقِلُونَ ۝

ருகூஉ 20

*164.* நிச்சயமாக வானங்களையும், பூமியையும் (அல்லாஹ்) படைத்திருப்பதிலும்; இரவும், பகலும் மாறி, மாறி வந்து கொண்டிருப்பதிலும்; மனிதர்களுக்குப் பயன் தருவதைக் கொண்டு கடலில் செல்லும் கப்பல்களிலும்; வானத்திலிருந்து அல்லாஹ் தண்ணீரை இறக்கி அதன் மூலமாக பூமி இறந்த பின் அதை உயிர்ப்பிப்பதிலும்; அதன் மூலம் எல்லா விதமான பிராணிகளையும் பரவ விட்டிருப்பதிலும், காற்றுகளை மாறி, மாறி வீசச் செய்வதிலும்; வானத்திற்கும், பூமிக்குமிடையே கட்டுப்பட்டிருக்கும் மேகங்களிலும் - சிந்தித்துணரும் மக்களுக்கு (அல்லாஹ்வுடைய வல்லமையையும், கருணையையும் எடுத்துக் காட்டும்) சான்றுகள் உள்ளன.

164. இந்த பிரபஞ்சத்தின் படைப்பைப்பற்றி ஆராய்ந்துப் பாருங்கள். அந்த ஏக இறைவனால் எவ்வாறு படைக்கப்பட்டு செயல்படுகின்றன என்பதைப் பாருங்கள். அவனால் படைக்கப்பட்ட பிரம்மாண்டமான வானங்கள் மற்றும் பூமி எவ்வாறு ஆக்கப்பூர்வமாக செயல்படுகின்றன என்பதை சிந்தித்துப் பாருங்கள். அதில் இரவும் பகலும் எவ்வாறு இடைவிடாது முறைப்படி மாறிமாறி வருகின்றன என்பதையும் கவனித்துப்பாருங்கள். மலைகள் போல் தோன்றும் பெரிய பெரிய கப்பல்கள் கடலின் மேல்பரப்பில் எவ்வாறு பயனுள்ள பொருட்களை சுமந்து செல்கின்றன என்பதையும் சிந்தித்துப் பாருங்கள். அல்லாஹ் ஏற்படுத்தியுள்ள அமைப்பின் (System) துணையின்றி இவைகள் எல்லாம் செயல்படுமா என்பதை சிந்தித்துப் பாருங்கள். வானிலிருந்து ருசிமிக்க குடிநீரை எவ்வாறு இறக்கி அருளப்படுகின்றன என்பதையும் பாருங்கள். அதைக்கொண்டு உயிரற்ற நிலையில் இருந்த பூமி எவ்வாறு புத்துயிர் பெற்று செழிப்பாக ஆவிடுகிறது என்பதையும் கவனியுங்கள். இந்த பூமியில் எல்லா விதமான உயிரினங்களும் எவ்வாறு பல்கி பரவி வருகின்றன என்பதையும் சிந்தித்துப்பாருங்கள். பருவகாலத்திற்கு ஏற்ப *(Monsoon)* காற்று எவ்வாறு தன் திசையில் மாறிமாறி வீசிவருகிறது என்பதையும் ஆராய்ந்துப் பாருங்கள். இந்த பூமிக்கும் வானத்திற்கும் இடையே மழை நீரை சுமந்துச்செல்லும் மேகங்கள் எவ்வாறு கட்டுக்கோப்பாக செயல்படுகின்றன என்பதையும் கவனித்துப் பாருங்கள்.

இவற்றையெல்லாம் சிந்தித்துப் பார்க்கும்போது இவை எல்லாவற்றையும் படைத்து இயக்கி வைக்கும் ஆற்றல் எந்த மனிதனுக்காவது இருக்கிறதா? ஒருபோதுமில்ல. மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தி செயல்படுகிறது என்பதை ஏற்றுக்கொண்டால் அவ்வாறு செயல்பட வைக்கும் மாபெரும் சக்திகளை பெற்றவனே அந்த ஏக இறைவனாகிய அல்லாஹ் என்ற முடிவிற்கு வருவீர்கள். ஆனால் சிந்தித்து ஆராய்பவர்களால் (விஞ்ஞானிகள் என்னும் உலமாக்கள்) மட்டுமே அல்லாஹ்வின் வல்லமைப் பற்றியும் கருணைப்பற்றியும் புறிந்துகொள்ளமுடியும்.

165 وَمِنَ النَّاسِ مَنْ يَّتَّخِذُ مِنْ
دُوْنِ اللّٰهِ اَنْدَادًا يُّحِبُّوْنَهُمْ كَحُبِّ
اللّٰهِ ؕ وَالَّذِيْنَ اٰمَنُوْٓا اَشَدُّ حُبًّا
لِّلّٰهِ ؕ وَلَوْ يَرَى الَّذِيْنَ ظَلَمُوْٓا اِذْ
يَرَوْنَ الْعَذَابَ ۙ اَنَّ الْقُوَّةَ
لِلّٰهِ جَمِيْعًا ۙ وَّاَنَّ اللّٰهَ شَدِيْدُ
الْعَذَابِ ○

*165. அல்லாஹ் அல்லாதவர் ள அவனுக்கு இணையாக வைத்துக் கொண்டு, அவர்களை அல்லாஹ்வை நேசிப்பதற்கொப்ப நேசிப் போரும் மனிதர்களில் இருக்கிறார்கள்; ஆனால் நம்பிக்கை கொண்டவர்கள் அல்லாஹ்வை நேசிப்பதில் உறுதியான நிலையுள்ளவர்கள்; இன்னும் (இணை வைக்கும்) அக்கிரமக்கார்ரர் களுக்குப் பார்க்க முடியுமானால், (அல்லாஹ் தரவிருக்கும்) வேதனை எப்படியிருக்கும் என் பதைக் கண்டு கொள்வார்கள்; அனைத்து வல்லமையும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது; நிச்சயமாக தண்டனை கொடுப்பதில் அலலாஹ் மிகவும் கடுமையானவன் (என்பதையும் கண்டு கொள்வார்கள்).*

165. உலகில் பலர் இருக்கிறார்கள். அவர்கள் அல்லாஹ் அல்லாத பிற தெய்வங்களை அல்லாஹ்விற்கு சமமாக சகல வல்லமையும் பேராற்றலும் பெற்று விளங்குவதாக எண்ணிக் கொள்கிறார்கள். நீங்கள் எவ்வாறு அல்லாஹ்வின் வழிகாட்டுதலை பற்றுதலோடு கடைபிடித்து வருகிறீர்களோ அவ்வாறே அவர்களும் சுயமாக வழிமுறைகளை உருவாக்கி அதுதான் தெய்வ வழிப்பாடு என்றெண்ணி பாசப்பிணைப்புடன் கடைபிடித்து வருகிறார்கள் ஆனால் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்றுக்கொண்டவாகள் அதில் என்றென்றும் உறுதியுடன் நிலைத்திருப்பார்கள். அவர்றைத் தவிர வேறு எந்த வழிமுறைகளையும் பின்பற்றமாட்டார்கள் (பார்க்க: 7:3). ஆனால் பிறதெய்வ வழிபாட்டை மேற்கொண்டுள்ளவர்கள் தாம் செய்துவரும் செயல்களின் விளைவுகள் தோற்றத்திற்கு வரும் வரை அவ்வாறு செய்து வருவார்கள். அவர்களுக்கு ஏற்படும் துயர் சம்பவங்களை கண்டு பிறதெய்வங்கள் அவற்றை சரிசெய்யும் சக்திகள் பெற்று விளங்கவில்லை என்ற உண்மையை அப்போது விளங்கிக் கொள்வார்கள். சகல வல்லமையும் உடைய அல்லாஹ்வின் வாழ்க்கை நெறிமுறைகளை விட்டுவிட்டதனால் என்ன அழிவு ஏற்படுகிறது என்பதை உணர்வார்கள். அப்போது உணர்ந்து என்ன பயன்? அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து தப்ப முடியாது.

166 اِذْ تَبَرَّاَ الَّذِيْنَ اتُّبِعُوْا مِنَ الَّذِيْنَ
اتَّبَعُوْا وَرَاَوُا الْعَذَابَ وَتَقَطَّعَتْ
بِهِمُ الْاَسْبَابُ ○

*166. (இத்தவறான வழியில்) யாரைப் பின்பற்றினார்களோ அ(த்தலை)வர்கள் தம் மைப் பின்பற்றியோரைக் கைவிட்டு விடு வார்கள், இன்னும் அவர்கள் வேதனையைக் காண்பார்கள்; அவர்களிடையேயிருந்த தொடர்புகள் யாவும் அறுபட்டுவிடும்.*

166. மேலும் இதுநாள் வரையில் தாம் பின்பற்றி வந்த மதகுருமார்களும் தலைவர்களும் தமக்கு துணை நிற்பதை விட்டு எவ்வாறு விலகிவிடுகிறார்கள் என்ற உண்மை அழிவு ஏற்படும் அந்தக் காலக் கட்டத்தில்தான் தெரிந்துக் கொள்வார்கள். அவர்கள் அவைரும் உங்களை நிற்கதியில் விட்டுவிடுவார்கள். இப்படியாக அவர்களுடன் இருந்து வந்த தொடர்பும் துண்டிக்கப்பட்டு விடும். வரும் முன் காப்போம் என்பதை எடுத்துச்சொன்னால் அவர்கள் அதை செவியேற்கவில்லை.

167 وَقَالَ الَّذِيْنَ اتَّبَعُوْا لَوْ اَنَّ لَنَا
كَرَّةً فَنَتَبَرَّاَ مِنْهُمْ كَمَا تَبَرَّءُوْا
مِنَّا ؕ كَذٰلِكَ يُرِيْهِمُ اللّٰهُ اَعْمَالَهُمْ
حَسَرٰتٍ عَلَيْهِمْ ؕ وَمَا هُمْ بِخٰرِجِيْنَ
مِنَ النَّارِ ○

*167. (அத்தலைவர்களைப்) பின்பற்றியவர் கள் கூறுவார்கள்: "நமக்கு (உலகில் வாழ) இன்னொரு வாய்ப்புக் கிடைக்குமானால், அ(த்தலை)வர்கள் நம்மைக் கைவிட்டு விட்ட தைப் போல் நாமும் அவர்களைக் கைவிட்டு விடுவோம்." இவ்வாறே அல்லாஹ் அவர் கள் செய்த செயல்களை அவர்களுக்குப் பெருந் துக்கம் அளிப்பதாக எடுத்துக் காட்டுவான்; அன்றியும், அவர்கள் நரக நெருப்பினின்றும் வெளியேறுகிறவர்களும் அல்லர்.*

167. அந்தக் காலக்கட்டத்தில் வேதனை தாங்கமுடியாமல் அவர்கள், "காலத்தின் சுழல் பின்வாங்கப்பட்டு தங்களுக்கு மீண்டும் ஒரு வாய்ப்பு கிடைக்கப்பெற்றால் இந்த மதகுருமார்களும் தலைவர்களும் நம்மை எவ்வாறு கைவிட்டுவிட்டார்களோ அவ்வாறே நாமும் அவர்களை ஒரே அடியாக தலைமுழ்கிவிட்டு இறைவா! உன் வழிகாட்டுதலையே பின்பற்றிவருவோம்'' என்று புலம்புவார்கள். ஆனால் அந்த புலம்பலுக்கு எந்த பலனும் இருக்காது. ஏனெனில் அவர்களுக்கு அளிக்கப்பட்ட காலத்தவணை முடிந்துவிட்டது. இப்படியாக அல்லாஹ்வின் வழிகாட்டுதலை விட்டுவிட்டு சுயமாக உருவாக்கிய வழிமுறைகளை பின்பற்றி வந்ததால் அவர்கள் அந்த அழிவிலிருந்து பாதுகாத்துக் கொள்ள முடிவதில்லை.

168 يَٰٓأَيُّهَا ٱلنَّاسُ كُلُوا۟ مِمَّا فِى
ٱلْأَرْضِ حَلَٰلًا طَيِّبًا وَلَا تَتَّبِعُوا۟
خُطُوَٰتِ ٱلشَّيْطَٰنِ ۚ إِنَّهُۥ لَكُمْ عَدُوٌّ
مُّبِينٌ ○

**ருகூஉ 21**

*168. மனிதர்களே! பூமியிலுள்ள பொருட்களில், அனுமதிக்கப்பட்டவற்றையும், பரிசுத்த மானவற்றையும் உண்ணுங்கள்; ஷைத்தானின் அடிச்சுவடுகளை பின்பற்றுதீர்கள் - நிச்சய மாக அவன் உங்களுக்கு பகிரங்கமான பகை வனுவான்.*

168. நீங்கள் எப்போதும் உங்கள் நலத்தில் மட்டும் அக்கறை காட்டுங்கள். பிறரைப் பற்றியோ நாட்டில் ஏற்றத்தாழ்வு ஏற்படுவதைப்பற்றியோ கவலைபடாதீர்கள். அதையெல்லாம் இறைவன் பார்த்துக் கொள்வான். செல்வச்சிறப்பு என்பதெல்லாம் இறைவன் புறத்திலிருந்து கிடைக்கக் கூடியவை. எனவே கூடுமானவரையில் சுருட்டிக்கொள்ளுங்கள் என்று மத குருமார்களும் தலைவர்களும் மக்களிடம் சதா பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

மனிதர்களே! அவர்களின் இந்த பேச்சுக்களை செவி சாய்க்காதீர்கள். உங்கள் தேவைக்குப் போக மிகுதியானவற்றை தேவை உள்ளவர்களின் தேவைகளை பூர்த்தி செய்யத்தான் அந்தச் செல்வங்கள் உங்களுக்கு அளிக்கப்படுகின்றன (பார்க்க: 2:219). அதற்கேற்ற வகையில் பயன்படுத்துங்கள். உங்களின் அத்தியாவசிய தேவைகளுக்கு எடுத்துக் கொள்ளுங்கள் (பார்க்க: 2:21&22 & 41:10). மனோஇச்சை என்னும் ஷைத்தானை பின்பற்றி வருபவர்களை நீங்கள் பின்பற்றாதீர்கள். ஏனெனில் அவர்கள் மனித நேயத்திற்கும் ஒற்றுமைக்கும் பகிரங்கமான பகைவர்கள் ஆவார்கள்.

169 إِنَّمَا يَأْمُرُكُم بِٱلسُّوٓءِ وَٱلْفَحْشَآءِ
وَأَن تَقُولُوا۟ عَلَى ٱللَّهِ مَا
لَا تَعْلَمُونَ ○

*169. நிச்சயமாக அவன் தீயவற்றையும், மானக் கேடானவற்றையும் செய்யும்படியும்; அல்லாஹ்வைப் பற்றி நீங்கள் அறியாததைக் கூறும்படியும் உங்களை ஏவுகிருன்.*

169. நிச்சயமாக மனோஇச்சை என்னும் ஷைத்தான் சமூக நல்லிணக்கத்தை பாழாக்கும் செயல்களையும் மானக்கேடான செயல்களையும் செய்யும்படி சதா தூண்டிக் கொண்டிருக்கும். அல்லாஹ் சொல்லாத விஷயங்களையெல்லாம் அல்லாஹ் சொன்னதாக இட்டுக்கட்டி கூறும்படியும் ஏவிக் கொண்டிருக்கும். இதை அடிப்படையாகக் கொண்டு செயல்படுபவர்களின் பேச்சை கேட்காதீர்கள்.

170 وَإِذَا قِيلَ لَهُمُ ٱتَّبِعُوا۟ مَآ أَنزَلَ
ٱللَّهُ قَالُوا۟ بَلْ نَتَّبِعُ مَآ أَلْفَيْنَا عَلَيْهِ
ءَابَآءَنَآ ۗ أَوَلَوْ كَانَ ءَابَآؤُهُمْ لَا يَعْقِلُونَ
شَيْـًٔا وَلَا يَهْتَدُونَ ○

170. மேலும், "அல்லாஹ் இறக்கி வைத்த இ(வ்வேதத்)தைப் பின்பற்றுங்கள்" என்று அவர்களிடம் கூறப்பட்டால், அவர்கள் "அப்படியல்ல! எங்களுடைய மூதாதையர் கள் எந்த வழியில் (நடக்கக்) கண்டோமோ, அந்த வழியையே நாங்களும் பின்பற்று கிறோம்" என்று கூறுகிருர்கள்; என்ன! அவர் களுடைய மூதாதையர்கள், எதையும் விளங்காதவர்களாகவும், நேர்வழி பெருதவர்களாகவும் இருந்தால் கூடவா?

170. அவர்களுடைய செயல்பாடுகளுக்கு என்ன ஆதாராம் என்று கேட்டுப் பாருங்கள். அதற்கு மூதாதையர்களின் வழிமுறைகளை ஆதாரமாக காட்டுவார்கள். நல்லவை தீயவை எது என்பதை அறிந்துக்கொள்ள அதை ஆதாரமாக எடுத்துகொள்ளமுடியுமா? நன்மை தீமையை பிரித்துக்காட்டக் கூடிய உரைக்கல் இறைவனின் வேதமான இந்த குர்ஆனுக்கு மட்டுமே உரியவை ஆகும். (பார்க்க: 2:185 & 25:1) ஆக அல்லாஹ் இறக்கியருளியுள்ள வேதத்தை (குர்ஆனை) பின்பற்றுங்கள் என்று அவர்களிடம் சொன்னால் தம் மூதாதையர்கள் எந்த வழியில் நடக்க கண்டோமோ அதையே நாங்களும் பின்பற்றுவோம் என்று கூறுகிறார்கள். அவர்களுடைய அந்த மூதாதையர்கள் எதையும் விளங்கிக் கொள்ளாதவர்களாக இருந்திருக்கிறார்களே. அவர்கள் எந்த வகையிலும் நேர்வழி பெற்றவர்களாக இல்லையே. அப்போதும் அவர்களையே இவர்கள் பின்பற்றுவார்களா? ஆச்சரியமே! (பார்க்க: 5:104,10:78, 11:62 ,11:87, 23:24, 38:7 & 43:23.

171 وَمَثَلُ الَّذِينَ كَفَرُوا كَمَثَلِ الَّذِي يَنْعِقُ بِمَا لَا يَسْمَعُ إِلَّا دُعَاءً وَنِدَاءً صُمٌّ بُكْمٌ عُمْيٌ فَهُمْ لَا يَعْقِلُونَ ○

*171. அந்த காஃபிர்களுக்கு உதாரணம் என்னவென்ருல்: ஒரு (ஆடு, மாடு மேய்ப்ப) வனின் கூப்பாட்டையும், கூச்சலேயும் தவிர வேறெதையும் கேட்டு, அறிய இயலாதவை (கால் நடை) போன்றவர்கள்; அவர்கள் செவிடர்களாகவும், ஊமையர்களாகவும், குருடர்களாகவும் இருக்கின்றனர்; அவர்கள் எ(ந்த நற்போ)தனேயும் உணர்ந்து கொள்ள மாட்டார்கள்.*

171. இறை வழிகாட்டுதலை நிராகரித்துவிட்டு மூட நம்பிக்கையில் வாழ்ந்து வருவதன் விளைவு அவர்களை மனிதத் தன்மையை இழந்து விலங்கின அளவிற்கு கொண்டு போய்விடுகிறது. எதையும் சிந்தித்து சீர்தூக்கிப் பார்க்கும் ஆற்றல்களை இழந்து விடுகிறார்கள். (பார்க்க: 7:179) ஆடு மாடுகளை மேய்ப்பவன்போல் அந்த மதகுருமார்கள் இவர்களை மேய்த்துக் கொண்டிருப்பார்கள். அந்த மக்களும் சில வார்த்தைகளை மனனம் செய்துக்கொண்டு சதா அவற்றையே திரும்ப திரும்ப உச்சரித்துக் கொண்டிருப்பார்கள். தாம் உச்சரிப்பது அந்த

ஆடு மேய்ப்பவனுக்கும் தெரியாது அந்த ஆடுகளுக்கும் புரியாது. இதுதான் மூதாதையர்களின் வழிமுறையை கடைபிடித்து வருபவர்களின் வாழ்க்கை தரமாகும். இப்படிப்பட்டவர்களிடம் இந்த நற்போதனைகள் பலன் தராது.

172 يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ وَاشْكُرُوا لِلَّهِ إِنْ كُنْتُمْ إِيَّاهُ تَعْبُدُونَ ○

*172. நம்பிக்கை கொண்டவர்களே! நாம் உங்களுக்கு அளித்துள்ளவற்றில் தூய்மை யானவற்றையே உண்ணுங்கள்; நீங்கள் அல் லாஹ்வையே வணங்குபவர்களாக இருப்பீர் களாயின், அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தி வாருங்கள்.*

172. அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்றுக் கொண்டவர்களே! நீங்கள் அவ்வாறு மூடத்தனமாக நடந்துக் கொள்ளாதீர்கள். அல்லாஹ் உங்களுக்காக படைத்தவற்றிலிருந்து தூய்மையானதை உண்ணுங்கள். அல்லாஹ் விலக்கியுள்ளதை தவிர வேறு எதையும் இது ஆகுமானது இது ஆகுமானதல்ல என்று அட்டவணையை ஏற்படுத்தாதீர்கள். (பார்க்க: 16:116) அல்லாஹ் உங்களுக்கு அளித்தவற்றை அவன் நிர்ணயித்த சட்டத்தின்படி பயன்படுத்துங்கள் (பார்க்க: 2:219). அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்யாதீர்கள். அதுவே அவனுக்கு நீங்கள் செலுத்தும் நன்றி கடனாகும்.

173 إِنَّمَا حَرَّمَ عَلَيْكُمُ الْمَيْتَةَ وَالدَّمَ وَلَحْمَ الْخِنْزِيرِ وَمَا أُهِلَّ بِهِ لِغَيْرِ اللَّهِ ۖ فَمَنِ اضْطُرَّ غَيْرَ بَاغٍ وَلَا عَادٍ فَلَا إِثْمَ عَلَيْهِ ۚ إِنَّ اللَّهَ غَفُورٌ رَحِيمٌ ○

*173. தாஞகவே செத்ததும், இரத்தமும, பன்றியின் மாமிசமும், அல்லாஹ் அல்லாத பெயர் சொல்லப்பட்டதும் ஆகியவைகளேத் தான் உங்கள் மீது ஹராமாக ஆக்கியிருக் கிருன்; ஆனுல் எவரேனும் பாவம் செய்யாத நிலேயில் - வரம்பு மீருமல் (இவற்றை உண்ண) நிர்ப்பந்திக்கப்பட்டால் அவர் மீது குற்றமில்லே: நிச்சயமாக அல்லாஹ் கருணே மிக்கோனும், மன்னிப்பவனுமாக இருக் கின்ருன்.*

173. அப்படி உண்பதற்கு விலக்கப்பட்டவை எவை என்பதை தெரிந்துக்கொள்ளுங்கள். தானாக செத்தவை, இரத்தம், பன்றியின் மாமிசம் – அழுகிப்போனவை மற்றும் அல்லாஹ் அல்லாதோரின் பெயர்சொல்லி அறுக்கப்பட்டவை – ஆக இவைகள்தாம் உங்களுக்கு விலக்கப்பட்டவைகளாகும். இருப்பினும் சில சமயங்களில் உண்பதற்கு எதுவும் கிடைக்காத நிலையில் உண்ணாமல் இருந்தால் உயிர் போய்விடும் என்னும் நிர்ப்பந்தம் இருந்தால் இந்த விலக்கப்பட்டதையும் உண்பதில் குற்றமில்லை. ஆக அல்லாஹ் நிர்ணயித்துள்ள வரம்புகளை மீறுதல் கூடாது. இப்படியாக அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் மனிதனின் அனைத்து தேவைகளையும் அனுசரனையில் வைத்து இயற்றப்பட்டுள்ளன. ஏனெனில் மனித வாழ்வின் முழு பாதுகாப்பையும் மையமாக கொண்டுள்ளன. இதுவே அல்லாஹ்வின் கருணை குணநலமாகும்.

174 إِنَّ الَّذِينَ يَكْتُمُونَ مَا أَنْزَلَ اللَّهُ مِنَ الْكِتَابِ وَيَشْتَرُونَ بِهِ ثَمَنًا قَلِيلًا ۙ أُولَٰئِكَ مَا يَأْكُلُونَ فِي بُطُونِهِمْ إِلَّا النَّارَ وَلَا يُكَلِّمُهُمُ اللَّهُ يَوْمَ الْقِيَامَةِ وَلَا يُزَكِّيهِمْ وَلَهُمْ عَذَابٌ أَلِيمٌ ○

174. ஹலால் ஹராம் – உண்ண அனுமதி அளிக்கப்பட்டவை மற்றும் விலக்கப்பட்டவை – சம்பந்தமாக இதுவே அல்லாஹ் நிர்ணயித்துள்ள சட்டமாகும் . (பார்க்க: 5:3, 5:87, 6:118 & 119, 6:121, 6:145, 10:59, 16:115 & 116, 22:30, 66:1) எனினும் சிலர் அல்லாஹ் நிர்ணயித்துள்ள

*174.* எவர், அல்லாஹ் வேதத்தில் அருளியவற்றை மறைத்து அதற்குக் கிரயமாக சொற்பத் தொகை பெற்றுக் கொள்கிறார்களோ, நிச்சயமாக அவர்கள் தங்கள் வயிறுகளில் நெருப்பைத் தவிர வேறெதனையும் உட்கொள்ளவில்லை; மறுமை நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும் மாட்டான்; அவர்களைப் பரிசுத்தமாக்கவுமாட்டான்; அவர்களுக்கு துன்புறுத்தும் வேதனையும் உண்டு.

இந்த உண்மை விஷயத்தை மறைத்து அவர்களாகவே இது ஹலால் இது ஹராம் என்று அட்டவணைகளை தயாரித்து வைத்துக் கொள்கின்றனர். மேலும் சொற்ப ஆதாயங்களுக்காக அல்லாஹ்வின் சட்டதிட்டங்களில் தலையிடுகின்றனர். இந்த அட்டவணைகள் எவ்வளவுதான் மகத்தானதாக இருந்தாலும் இவர்களுடைய இந்த செயல் தம் வயிறுகளில் நெருப்பை நிரப்பிக்கொள்வதற்குச் சமம்தான் என்பதை தெரிந்துக்கொள்ளுங்கள். இப்படிப்பட்ட இவர்களுடைய செயல்களின் விளைவுகள் தோற்றத்திற்கு வரும் காலக்கட்டத்தில் அல்லாஹ் நிர்ணயித்த நியதியின்படி இவர்களுக்கு கிடைக்கக்கூடிய உயர்வுகளும் சந்தோஷங்களும் கிடைக்கும் என்ற பேச்சிற்கே இடமிருக்காது. மேலும் இவர்களுடைய வளர்ச்சிகள் தடைப்பட்டு இவர்கள் அழிவு என்னும் பாழ்குழியில் தள்ளப்படுவார்கள்.

175 أُولَٰئِكَ الَّذِينَ اشْتَرَوُا الضَّلَالَةَ
بِالْهُدَىٰ وَالْعَذَابَ بِالْمَغْفِرَةِ ۚ
فَمَا أَصْبَرَهُمْ عَلَى النَّارِ ۝

*175.* அவர்கள் தாம் நேர்வழிக்கு பதிலாக வழிகேட்டையும்; மன்னிப்பிற்கு பதிலாக வேதனையையும் விலைக்கு வாங்கிக் கொண்டவர்கள். இவர்களை நரக நெருப்பை சகித்துக் கொள்ளச் செய்தது எது?

175. ஏனெனில் இவர்கள் நேர்வழிக்கு பதிலாக தவரான வழியை கடைபிடிப்பவர்களாக இருந்தவர்கள். மேலும் அல்லாஹ் வகுத்துத்தந்த பாதுகாப்பான வாழ்விற்கு பதிலாக வேதனை தரும் அழிவினை கொள்முதல் செய்துக் கொண்டவர்கள். நீங்களே சற்று சிந்தித்துப் பாருங்கள். எல்லா விஷயங்களையும் அறிந்திருந்தும் அப்படி எதுவும் அழிவும் வேதனைகளும் வராது. அப்படி வரும்போது சமாளித்துக் கொள்ளலாம் என்று எந்த தைரியத்தில் இருக்கிறார்கள்? அதாவது அந்த அழவினை அவர்களால் ஒருபோதும் தாங்கிக்கொள்ள முடியாது.

176 ذَٰلِكَ بِأَنَّ اللَّهَ نَزَّلَ الْكِتَابَ
بِالْحَقِّ ۗ وَإِنَّ الَّذِينَ اخْتَلَفُوا فِي
الْكِتَابِ لَفِي شِقَاقٍ بَعِيدٍ ۝

*176.* இதற்குக் காரணம்: நிச்சயமாக அல்லாஹ் இவ்வேதத்தை உண்மையுடன் அருள் செய்தான்; நிச்சயமாக இன்னும் இவ்வேதத்திலே கருத்து வேறுபாடு கொண்டவர்கள் (சத்தியத்தை விட்டும்) பெரும் பிளவிலேயே இருக்கின்றனர்.

176. அல்லாஹ் இறக்கியருளியுள்ள இந்த வேதம் வாழ்க்கையில் நிரூபணமாகக்கூடிய உண்மைகளை (Provable facts or Universal Truth) அடிப்படையைக் கொண்டது. இதில் சொல்லப்பட்ட விஷயங்களில் முரண்பாடுகள் என்ற பேச்சிற்கே இடமில்லை (பார்க்க: 4:82). அல்லாஹ்வின் சட்டதிட்டங்களில் மனிதனுடைய தலையீடு இருக்குமானால் அவன் சுயமாக பல வழிமுறைகளை இதற்கு மாற்றமாக ஏற்படுத்திக்கொள்வான். அதனால் அவர்களும் அவர்களை சார்ந்தவர்களும் நேர்வழியிலிருந்து வெகுதூரம் சென்றுவிடுவார்கள். அதைத்தொடர்ந்து காலப்போக்கில் அவர்களுக்குள் பகைமையும் குரோதமும் ஏற்பட்டு அழிவை சந்திக்க நேரிடும்.

177 لَيْسَ الْبِرَّ أَنْ تُوَلُّوا وُجُوهَكُمْ
قِبَلَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ وَلَٰكِنَّ
الْبِرَّ مَنْ آمَنَ بِاللَّهِ وَالْيَوْمِ
الْآخِرِ وَالْمَلَائِكَةِ وَالْكِتَابِ
وَالنَّبِيِّينَ وَآتَى الْمَالَ عَلَىٰ حُبِّهِ
ذَوِي الْقُرْبَىٰ وَالْيَتَامَىٰ وَالْمَسَاكِينَ
وَابْنَ السَّبِيلِ وَالسَّائِلِينَ وَ
فِي الرِّقَابِ وَأَقَامَ الصَّلَاةَ وَآتَى

177. இப்படிப்பட்டவர்கள் சில சடங்கு சம்பிரதாயங்களை கடைபிடித்துக்கொண்டு அதுவே தம் வாழ்வின் இலட்சியம் என்றும், அதைக் கட்டிக்காக்க வேண்டியது தம் கடமை என்றும் எண்ணிக் கொள்கிறார்கள். நீங்கள் இவற்றின் பக்கமே செல்லாதீர்கள். ஏனெனில் வாழ்வில் கண்ணியமும் உயர்வும் இறை வழிகாட்டுதலை கடைபிடித்து வருவதன் மூலமே கிடைக்குமே அன்றி தம் முகத்தை மேற்குதிசை நோக்கியோ கிழக்குதிசை நோக்கியோ திருப்பி வைத்துக்கொள்வதில் ஒருபோதும் கிடைக்காது. இதை மனதில் நன்றாக பதிய வைத்துக்கொள்ளுங்கள். இவையாவும் ஒருமைப்பாட்டின் பிரதிபலிப்பாக

الزَّكٰوةَ ۚ وَالْمُوْفُوْنَ بِعَهْدِهِمْ اِذَا عٰهَدُوْا ۚ وَالصّٰبِرِيْنَ فِى الْبَاْسَآءِ وَالضَّرَّآءِ وَحِيْنَ الْبَاْسِ ؕ اُولٰٓئِكَ الَّذِيْنَ صَدَقُوْا ؕ وَاُولٰٓئِكَ هُمُ الْمُتَّقُوْنَ ○

## ருகூஃ 22

*177. புண்ணியம் என்பது உங்கள் முகங்களைக் கிழக்கிலோ, மேற்கிலோ திருப்பிக் கொள்வதில் இல்லை; ஆனால் புண்ணியம் என்பது அல்லாஹ்வின் மீதும், இறுதி(த் தீர்ப்பு) நாளின் மீதும், மலக்குகளின் மீதும், வேதத்தின் மீதும், நபிமார்கள் மீதும் ஈமான் கொள்ளுதல்; (தன்) பொருளை இறைவன் மேலுள்ள நேசத்தின் காரணமாக, பந்துக்களுக்கும், அநாதைகளுக்கும், மிஸ்கீன் (ஏழை)களுக்கும், வழிப் போக்கர்களுக்கும், யாசிப்பவர்களுக்கும், (அடிமைகள், கடனாளிகள்) போன்றோரின் மீட்புக்காவும் செலவு செய்தல்; இன்னும் தொழுகையை ஒழுங்காகக் கடைப்பிடித்து முறையாக ஜகாத் கொடுத்து வருதல் (இவையே புண்ணியமாகும்); இன்னும் தாம் வாக்களித்தால் தம் வாக்குறுதிகளை நிறைவேற்றுவோரும்; (வறுமை, இழப்பு போன்ற) துன்பத்திலும், (நோய் நொடிகள் போன்றவற்றின்) கஷ்டத்திலும், யுத்த சமயத்திலும், உறுதியுடனும், பொறுமையுடனும் இருப்போரும் தான் நன்னெறியாளர்கள்; இன்னும் அவர்கள் தாம் முத்தகீன்கள் (பயபக்தியுடையவர்கள்).*

இருக்கிறது. எனவே அதன் நோக்கம் சமுதாயத்தின் ஒருங்கிணைக்கத்தான். இறைவனின் ஆட்சியமைப்பில் முக்கிய அங்கங்களாக இவை விளங்குகின்றன. அந்த ஆட்சியமைப்பின் அடிப்படை கொள்கை மற்றும் செயல்முறை பின்வருமாறு இருக்கும்.

அல்லாஹ்வை ஏற்றுக்கொள்ளுதல், அல்லாஹ் வகுத்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற விதிமுறைகள் மற்றும் மறுமை என்னும் ஆகிரத்தை ஏற்றுக்கொள்ளுதல், அல்லாஹ்வின் செயல்திட்டங்களை நிறைவேற்ற காரணிகளாக திகழும் பிரபஞ்ச சக்திகளான மலக்குகளை ஏற்றுக்கொள்ளுதல், இறைத்தூதர்களை ஏற்றுக்கொள்ளுதல், மேலும் அவர்கள் மூலமாக இறக்கியருளப்பட்ட வேதங்கள் யாவும் ஒரே அடிப்படையை கொண்டது என்பதையும் ஏற்றுக்கொள்ளுதல் (பார்க்க: 2:4) ஆகியவை அடிப்படை கோட்பாடுகள் (ideologies) ஆகும்.

இந்த அடிப்படை கோட்பாடுகளை ஏற்றுக்கொண்ட பின் அவற்றின் செயலாக்கம் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதையும் தெரிந்துக்கொள்ளுங்கள். நீங்கள் சொத்து செல்வங்களை குவிப்பதை விட்டுவிட்டு உங்கள் உழைப்பில் கிடைக்கின்ற செல்வங்களை பிறருடைய முன்னேற்றத்திற்காக பொதுவில் வைக்க முன்வரவேண்டும் (பார்க்க: 3:92). இந்த செல்வங்கள் உற்றார் உறவினர், சமுதாயத்தில் ஆதரவற்ற நிலையில் வசிப்பவர்கள், தொழில் மற்றும் வியாபாரத்தை இழந்து தவிப்பவர்கள், அல்லது எந்த வேலையும் செய்யஇயலாத உடல் ஊனமுற்றவர்கள், பிரயாணத்தில் வழி தெரியாமல் தவிப்பவர்கள் அல்லது போதுமான வருமானத்தை ஈட்டிக்கொள்ள இயலாதவர்கள் ஆகியவர்களின் தேவைகளை நிறைவேற்ற தம் செல்வங்களை அர்ப்பணிக்க முன்வரவேண்டும். சுருங்கச் சொன்னால் இறைவனின் கொள்கை கோட்பாடுகளை சமுதாயத்தில் நிலைநிறுத்த வேண்டும். இதுவே தொழுகை என்னும் ஸலாத் ஆகும். மேலும் ஒட்டுமொத்த மனிதஇனத்தின் வளர்ச்சிகாக ஜகாத் கொடுத்து அயராது பாடுபடவேண்டும். மக்களுக்கு நீங்கள் அளித்து வரும் வாக்குறுதிகளை நிறைவேற்றவேண்டும். இந்த மனித நேய செயல் திட்டங்களுக்கு எதிராக போர் தொடுத்தாலோ பாதிப்புகளை ஏற்படுத்தினாலோ துன்புறுத்தினாலோ அவை அனைத்தையும் எதிர்கொண்டு பொறுப்புணர்வுடன் தம் கொள்கையில் உறுதியுடன் ஒருவருக்கொருவர் துணை நிற்கவேண்டும்.

மேலே சொன்ன இந்த அடிப்படை கோட்பாடுகளிலும் அதன் செயலாக்க முறையிலும் நிலைத்து நின்று தம்மை அர்ப்பணித்துக் கொள்பவர்களே அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் ஏற்றுக்கொண்டதற்கு உண்மையான அர்த்தமாகும். இப்படிப்பட்டவர்களே இறைநெறிமுறைகளை பேணிநடப்பவர்கள் (முத்தகீன்கள்) என்று தம்மை பறைசாற்றிக்கொள்ள தகுதியானவர்கள் ஆவார்கள்.

178 يَاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا كُتِبَ عَلَيْكُمُ الْقِصَاصُ فِى الْقَتْلٰى ؕ اَلْحُرُّ بِالْحُرِّ وَ الْعَبْدُ بِالْعَبْدِ وَ الْاُنْثٰى بِالْاُنْثٰى ؕ فَمَنْ عُفِىَ لَهٗ مِنْ اَخِيْهِ شَىْءٌ فَاتِّبَاعٌ ۢ بِالْمَعْرُوْفِ وَ اَدَآءٌ اِلَيْهِ بِاِحْسَانٍ ؕ ذٰلِكَ تَخْفِيْفٌ مِّنْ رَّبِّكُمْ وَ رَحْمَةٌ ؕ فَمَنِ اعْتَدٰى بَعْدَ ذٰلِكَ فَلَهٗ عَذَابٌ اَلِيْمٌ ○

*178. ஈமான் கொண்டோரே! கொலைக்காகப் பழி தீர்ப்பது உங்கள் மீது விதிக்கப்பட்டுள்ளது - சுதந்திரமுடையவனுக்குச் சுதந்திரமுடையவன்; அடிமைக்கு அடிமை; பெண்ணுக்குப் பெண் இருப்பினும் (கொலை செய்த) அவனுக்கு அவனது (முஸ்லிம்) சகோதரனு(கிய கொலை யுண்டவனின் வாரிசுகளா)ல் ஏதும் மன்னிக்கப் படுமானல், வழக்கமான முறையைப் பின் பற்றி (இதற்காக நிர்ணயிக்கப் பெறும்) நஷ்ட ஈட்டைக் கொலை செய்தவன் பெருந் தன்மையுடனும், நன்றியறிதலுடனும் செலுத்தி விடல் வேண்டும் - இது உங்கள் இறைவனிட மிருந்து கிடைத்த சலுகையும் கிருபையுமா கும்; ஆகவே, இதன் பிறகு (உங்களில்) யார் வரம்பு மீறுகிருரோ, அவருக்குக் கடுமை யான வேதனையுண்டு.*

178. இத்தகைய முத்த..கீன்கள் மனித உரிமைகளை கட்டிக்காக்க அனைத்து பாதுகாப்பு ஏற்பாடுகளும் செய்யவேண்டும். அண்டை நாட்டவர்களால் அத்துமீறல்கள் இருக்கும்போது அவற்றை ஒடுக்க போர்கள் தொடுக்கப்படுகின்றன. அதுபோல் உள்நாட்டிலும் அநியாயம் அக்கிரமங்களை ஒழித்துக்கட்ட குற்றவாளிகளுக்கு தகுந்த தண்டனை அளிப்பது மிகமிக அவசியாகிறது. இவ்வாறு செய்யவில்லை என்றால் மனித உயிர்களுக்கும் உடமைகளுக்கும் பாதுகாப்பு கிடைக்காது. மனித உயிர் விலை மதிப்பற்றது. (பார்க்க: 5:32). ஆகவே இதற்காக கொலைக் குற்றங்களுக்கு தக்க தண்டனைச் அளிக்க சட்டங்களை உருவாக்கி அவற்றை நீதிமன்றம் மூலமாக நிறைவேற்றவேண்டும்.

குற்றவாளிகளுக்கு தீர்ப்பு சொல்வதில் எப்போதும் நீதியையும் நியாத்தையும் கட்டிக்காக்க வேண்டியது மிகமிக அவசியம். இதில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பாகுபாட்டிற்கே இடமளிக்கக்கூடாது. கொலையாளி மற்றும் கொலையுண்டவனின் சமூக அந்தஸ்து என்ன என்ற வித்தியாசத்தையும் பார்க்கக்கூடாது. எல்லா மனிதர்களின் உயிர்களும் ஒரே மாதிரியானது.

கோலையாளி சுதந்திர ஆணாக இருந்தால் அதே சுதந்திர ஆணுக்கு மரண தண்டனை அளிக்கவேண்டும. கொலையாளி அடிமையாக வாழ்பவனாக இருந்தால் அதே அடிமை ஆணுக்கு மரண தண்டனை உண்டு. கொலையாளி ஒரு பெண்ணாக இருந்தாலும் அவள் ஒரு பெண் என்பதால் அந்த தண்டனையிலிருந்து தப்பிக்க முடியாது. அவளுக்கும் அதே தண்டனைதான்.

இப்போது இருப்பது கொலை சம்பவத்தின் பின்னணியைப் பற்றியது. அதாவது கொலை திட்டமிட்ட கொலையாகவும் இருக்கலாம். எதிர்பாராத விதமாகவும் நிகழ்திருக்கலாம். முதல் வகை குற்றத்திற்கு மரண தண்டனையோ அல்லது அதன் நோக்கத்தை முன்வைத்து கடுங்காவல் ஆயுள் தண்டனையோ (பார்க்க: 4:93) விதிக்கலாம். மற்ற குற்றங்களுக்கு தகுந்த தண்டனைதான் அளித்திட வேண்டும். குற்றத்தைவிட அதிகபட்சமாக தண்டனை அளிப்பது கூடாது. (பார்க்க: 42 : 40 & 17:33)

ஆனால் இரண்டாவது வகையான கொலைக்கு – அதாவது எதிர்பாராதவிதமாக நடந்திருந்தால் (பார்க்க: 4:92) ல் குறிப்பிடப்பட்டிருப்பது போல் நஷ்டஈட்டை கொலையுண்டவனின் வாரிசுகள் ஒப்புதலின் பேரில் (பார்க்க: 17:33) அதை அழகிய முறையில் செலுத்திடவேண்டும். இப்படியாக கொலைக் குற்றங்களில் தற்செயலாக நடந்துவிடும் கொலைக்கு தக்க விடுவிப்பு **(Exemption)** அளிக்க அல்லாஹ்வின் சட்டதிட்டத்தில் இடமுண்டு. ஆக இவ்வாறு தெளிவான விளக்கங்கள் அளிக்கப்பட்ட பின் எவர் நீதிமன்ற தீர்ப்பு விவகாரத்தில் வரம்பு மீறுகிறாரோ அந்த நீதிபதிக்கும் கடுமையான தண்டனை (வேதனை) உண்டு.

179 وَلَكُمْ فِي الْقِصَاصِ حَيٰوةٌ يّٰٓاُولِي الْاَلْبَابِ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ ○

*179. நல்லறிவாளர்களே! கொலைக்குப் பழி தீர்க்கும் இவ்விதியின் மூலமாக உங்களுக்கு வாழ்வுண்டு; (இத்தகைய குற்றங்கள் பெருகாமல்) நீங்கள் உங்களை(த் தீமைகளில் நின்று) காத்துக் கொள்ளலாம்.*

179. மேலே சொன்ன விஷயத்தை சற்று நிதானித்து சிந்தித்துப் பார்த்தால், குற்றங்களுக்கு தக்க தண்டனை அளிப்பதைக் கொண்டே ஒட்டுமொத்த சமுதாயத்தின் பாதுகாப்பான வாழ்வின் இரகசியம் அடங்கியுள்ளது என்ற உண்மையை அறிந்துக் கொள்வீர்கள். அப்போதுதான் சட்ட ஒழுங்கு சீர்கெடாமல் பாதுகாப்பாக வாழமுடியும்.

180 كُتِبَ عَلَيْكُمْ اِذَا حَضَرَ اَحَدَكُمُ الْمَوْتُ اِنْ تَرَكَ خَيْرَا ۨ الْوَصِيَّةُ لِلْوَالِدَيْنِ وَالْاَقْرَبِيْنَ بِالْمَعْرُوْفِ حَقًّا عَلَى الْمُتَّقِيْنَ ○

*180. உங்களில் எவருக்கு மரணம் நெருங்கி விடுகிறதோ அவர் ஏதேனும் பொருள் விட்டுச் செல்பவராக இருப்பின், அவர் (தம்) பெற்றோருக்கும், பந்துக்களுக்கும் முறைப்படி வஸிய்யத்து (மரண சாஸனம்) செய்வது விதியாக்கப்பட்டிருக்கிறது; (இதை நியாயமான முறையில் நிறைவேற்றுவது) முத்தகீன்கள் (பயபக்தியுடையோர்) மீது கடமையாகும்.*

180. மனித உயிர்களின் பாதுகாப்பு விஷயத்திற்குப் பின் சொத்து மற்றும் உடமைகளின் பாதுகாப்பு பற்றிய கேள்வி எழுகிறது. சொத்து செல்வங்கள் அவரவர் பொறுப்பில் இருக்கும் பட்சத்தில் இந்த சட்டம் இவ்வாறு இருக்கும். ஆயுட் காலம் முடியும் தருவாயில் இருப்பதாக உணர்பவர்கள் தங்கள் கைவசமுள்ள சொத்து செல்வங்களிலிருந்து தம் பெற்றோர்களுக்கும் நெருங்கிய உறவினர்களுக்கும் முறைப்படி மரண சாஸனமான உயில் எழுதி வைக்கவேண்டும். இவ்வாறு எழுதி வைப்பது அல்லாஹ்வின் நெறிமுறைகளை பேணி நடப்பவர்களான முத்தஃகீன்கள் மீது கடமையாகும். வாரிசுதாரர்களுக்கு பாகப்பிரிவினை இந்த மரண சாஸனமான உயிலில் உள்ளது போக மீதமுள்ள சொத்துக்களிலிருந்து 4:11–ல் குறிப்பிட்டது போல பிரிக்கவேண்டும்.

181 فَمَنْ بَدَّلَهٗ بَعْدَ مَا سَمِعَهٗ فَاِنَّمَآ اِثْمُهٗ عَلَى الَّذِيْنَ يُبَدِّلُوْنَهٗ ۚ اِنَّ اللّٰهَ سَمِيْعٌ عَلِيْمٌ ○

*181. வஸிய்யத்தை (மரண சாஸனத்தை)க் கேட்ட பின்னர், எவரேனும் ஒருவர் அதை மாற்றினால், நிச்சயமாக அதன் பாவமெல்லாம் யார் அதை மாற்றுகிறார்களோ அவர்கள் மீதே சாரும் - நிச்சயமாக அல்லாஹ் (யாவற்றையும்) கேட்பவனாகவும், அறிபவனாகவும் இருக்கின்றான்.*

181. எழுத்து வடிவம் தர இயலாத நிலையில் இந்த மரண சாஸனம் குறைந்தது நம்பிக்கைக்குரிய இரண்டு சாட்சியாளர்கள் முன்னிலையில் செய்யப்பட வேண்டும் (பார்க்க: 5:106) அந்த சாஸனத்தைப் பற்றிய உண்மை விஷயம் கேட்டு தெரிந்துக்கொண்டபின் அதை மாற்றிவிட அந்த சாட்சியாளர்களுக்கு உரிமை இல்லை. அவ்வாறு மாற்றினால் அல்லாஹ்வின் சட்டத்தின் பார்வையில் அவர்கள் குற்றவாளிகள் ஆவார்கள். மேலும் அனைத்து விஷயங்களும் அல்லாஹ்விற்கு தெரியும் என்ற உண்மையை அவர்கள் ஏற்க மறுத்ததாக பொருள்படும்.

182 فَمَنْ خَافَ مِنْ مُّوْصٍ جَنَفًا اَوْ اِثْمًا فَاَصْلَحَ بَيْنَهُمْ فَلَآ اِثْمَ عَلَيْهِ ۗ اِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ ○

*182. ஆனால் வஸிய்யத்து செய்பவரிடம் (பாரபட்சம் போன்ற) தவறோ அல்லது மன முரண்டான அநீதமோ இருப்பதையஞ்சி ஒருவர் (சம்பந்தப்பட்டவர்களிடையே) சமாதானம் செய்து (அந்த வஸிய்யத்தை) சீர் செய்தால் அ(ப்படிச் செய்ப)வர் மீது குற்றமில்லை; நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்*

182. ஒரு வேளை சாஸனத்தை எழுதியவர் ஒருதலைபட்சமாக செயல்பட்டு அநீதி இழைத்துள்ளார் என்று எண்ணி, நியாயம் வழங்க நாடினால் சம்பந்தப்பட்ட வாரிசுக்களிடையே சமாதானம் ஏற்பட முயலுவதில் குற்றமில்லை. நிச்சயமாக அல்லாஹ்வுடைய சட்டதிட்டங்கள் அநீதி இழைக்காமல் பாதுகாப்பளிக்கின்றன. இந்த சட்டங்கள் அனைவரின் நலன்களை நோக்கமாக கொண்டுள்ளன.

183 يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُونَ ۙ

ருகூஃ 23

*183. ஈமான் கொண்டோர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் (அது) விதிக்கப்பட்டுள்ளது; (அதன் மூலம்) நீங்கள் தூய்மையுடையோர் ஆகலாம்.*

183. நாட்டின் நலனிலும் அனைத்துதரப்பு மக்களின் பாதுகாப்பை முன்வைத்து செயல்பட முன்வருபவர்களிடம் கடமைஉணர்வு, தைரியம், எதையும் தாங்கிக்கொள்ளும் மனவலிமையும் சுயகட்டுப்பாடும் அவசியமாகிறது. எனவே இயல்பான வாழ்விற்குப் பதிலாக சிறப்பு பயிற்சிகளை தரும் ஒரு மாற்றமான வழிமுறை கையாளப்படுகிறது. இதற்காகவே உங்கள் மீது நோன்பு கடமையாக்கப்படுகிறது. இதைக்கொண்டு நீங்கள் இறைநெறிமுறைகளை பேணி நடக்க தகுதியானவர்களாக ஆகிவிடலாம். இந்த வழிமுறை புதிதான ஒன்றல்ல. காலம்காலமாக உங்களுக்கு முன்னிருந்த சமுதாயங்களுக்கும் இதே வழிமுறை ஏற்படுத்தப்பட்டிருந்தது. அதாவது இறைவனுடைய கட்டளைக்கு கட்டுப்பட்டு வாழ்பவர்களாக (Disciplined life) உங்களை நீங்கள் ஆக்கிக்கொள்ள வேண்டும் என்பதே அதன் நோக்கமாகும்.

184 أَيَّامًا مَعْدُودَاتٍ ۚ فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيضًا أَوْ عَلَىٰ سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَّامٍ أُخَرَ ۚ وَعَلَى الَّذِينَ يُطِيقُونَهُ فِدْيَةٌ طَعَامُ مِسْكِينٍ ۖ فَمَنْ تَطَوَّعَ خَيْرًا فَهُوَ خَيْرٌ لَهُ ۚ وَأَنْ تَصُومُوا خَيْرٌ لَكُمْ ۖ إِنْ كُنْتُمْ تَعْلَمُونَ

*184. (இவ்வாறு விதிக்கப் பெற்ற நோன்பு) சில குறிப்பிட்ட நாட்களில் (கடமையாகும்); ஆனால் (அந்நாட்களில்) எவரேனும் நோயாளியாகவோ, அல்லது பயணத்திலோ இருந்தால், (அவர் அக்குறிப்பிட்ட நாட்களின் நோன்பைப்) பின்னால் வரும் நாட்களில் நோற்க வேண்டும்; எனினும் (கடுமையான நோய், முதுமை போன்ற காரணங்களினால்) நோன்பு நோற்பதைக் கடினமாகக் காண்பவர்கள் அதற்குப் பரிகாரமாக - ஃபித்யாவாக - ஒரு மிஸ்கீனுக்கு (ஏழைக்கு) உணவளிக்க வேண்டும்; எனினும் எவரேனும் தாமாகவே அதிகமாகக் கொடுக்கிறாரோ அது அவருக்கு நல்லது - ஆயினும் நீங்கள் (நோன்பின் பலனை அறிவீர்களானால்), நீங்கள் நோன்பு நோற்பதே உங்களுக்கு நன்மையாகும் (என்பதை உணர்வீர்கள்).*

184. நோன்பு என்பது நாட்களின் எண்ணிக்கையில் நிர்ணயமாகிறது. எனவே நோய்வாய் பட்டுள்ளவர்கள் மற்றும் பிரயாணத்தை மேற்கொண்டுள்ளவர்கள் ஆகியோர்களால் நோன்பு நோற்க இயலாமல் போகலாம். இப்படிப்பட்டவர்கள் மற்ற நாட்களில் இந்த எண்ணிக்கையை பூர்த்தி செய்துக் கொள்ளவேண்டும். ஒருவேளை தீரா நோயுள்ளவர்கள், என்றைக்கும் நோன்பு நோற்க இயலாதவர்கள், சம்பாதிக்க வசதி பெறாதவர்களில் ஒருவருக்கு இதற்குப் பகரமாக உணவளிக்க வேண்டும். இன்னும் அதிகமாக கொடுப்பவர்கள் மீது தவறில்லை. அது அவருக்கு நல்லதேயாகும். இருப்பினும் நோன்பின் சிறப்பினைப் பற்றி சிந்தித்துப் பார்த்தால் நோன்பு நோற்பதே சாலச்சிறந்தது என்பதை உணர்வீர்கள்.

நோன்பு நோற்கும் விஷயத்தில் சட்டரீதியாக யாரையும் கண்காணிக்க முடியாது. எனவே நோன்பு நோற்க முடியுமா முடியாதா என்பது அவரவர் மனோ நிலையைப் பொருத்தது. ஆக இறைவன் கட்டளைக்கு இணங்க தயாரா இல்லையா என்பதுதான் கேள்வி. ஒரு வேளை உணவு உண்ணாமல் பசித்திருப்பது என்பதில்லை. நோன்பினால் ஏற்படக் கூடிய பலன்களை முன்வைத்துப் பார்க்கும்போது ஃபித்யாவாக பணம் கொடுத்துவிடுவதைவிட சிரமமாக இருப்பினும் நோன்பு நோற்பதே நல்லது.

185 شَهْرُ رَمَضَانَ الَّذِي أُنْزِلَ فِيهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِنَ الْهُدَىٰ وَالْفُرْقَانِ ۚ فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَصُمْهُ ۖ وَمَنْ كَانَ مَرِيضًا

185. இந்த சுய மனக்கட்டுப்பாட்டின் பயிற்சி ஏன் ரமலான் (Ramzan) மாதத்தில் நிர்ணயமானது என்ற கேள்வி எழுகிறது. ஏனெனில் இந்த குர்ஆன் இறக்கியருளப்படுவது இந்த மாதத்தில்தான் ஆரம்பமானது. இந்த குர்ஆன் உலகிலுள்ள ஒட்டுமொத்த மனித இனத்தின் பாதுகாப்பான வாழ்க்கைக்கு வழி காட்டுகிறது. மேலும் இந்த குர்ஆன் நன்மை தரும் செயல்கள் எவை மற்றும் மனித வாழ்வின் வளர்ச்சிக்கு தடையாக நிற்கும் தீயச்செயல்கள்

أَوْ عَلَىٰ سَفَرٍ فَعِدَّةٌ مِّنْ أَيَّامٍ أُخَرَ ۗ يُرِيدُ اللَّهُ بِكُمُ الْيُسْرَ وَلَا يُرِيدُ بِكُمُ الْعُسْرَ وَلِتُكْمِلُوا الْعِدَّةَ وَلِتُكَبِّرُوا اللَّهَ عَلَىٰ مَا هَدَاكُمْ وَلَعَلَّكُمْ تَشْكُرُونَ ○

*185. ரமளான் மாதம் எத்தகையதென்றால் அதில் தான் மனிதர்களுக்கு (முழுமையான) வழிகாட்டியாகவும், தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும்; (நன்மை - தீமைகளைப்) பிரித்தறிவிப்பதுமான அல் குர்ஆன் இறக்கியருளப் பெற்றது; ஆகவே, உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ, அவர் அம்மாதம் நோன்பு நோற்க வேண்டும்; எனினும் எவர் நோயாளியாகவோ அல்லது பயணத்திலோ இருக்கிறாரோ (அவர் அக் குறிப்பிட்ட நாட்களின் நோன்பைப்) பின் வரும் நாட்களில் நோற்க வேண்டும்; அல்லாஹ் உங்களுக்கு இலகுவானதை நாடுகிறானே தவிர, உங்களுக்கு சிரமமானதை அவன் நாடவில்லை; குறிப்பிட்ட நாட்கள் (நோன்பில் விடுபட்டுப் போனதைப்) பூர்த்தி செய்யவும், உங்களுக்கு நேர்வழி - காட்டியதற்காக, அல்லாஹ்வின் மகத்துவத்தை நீங்கள் போற்றி நன்றி செலுத்துவதற்காகவுமே (அல்லாஹ் இதன் மூலம் நாடுகிறான்).*

எவை என்பதை பிரித்து அறிவிக்கும் நிரந்தர கொள்கை கோட்பாடுகளைக்கொண்ட வேதமாக விளங்குகிறது (25:1). ஆக நோன்பு இறை வழிகாட்டுதலுக்கு இணங்கி வாழ ஒரு பயிற்சி அளிக்கும் வழிமுறையாக விளங்குகிறது. எனவே எவர் இந்த மாதத்தை பெறுகிறாரோ அவர் நோன்பு நோற்கவேண்டும். எனினும் நோய்வாய்ப்பட்டவர்கள் மற்றும் பிரயாணத்தில் இருப்பவர்கள் குறிப்பிட்ட நாட்களின் எண்ணிக்கையை மற்ற நாட்களில் பூர்த்தி செய்துக் கொள்ளவேண்டும். ஏனெனில் அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் உங்களுக்கு சிரமமானதை நாடவில்லை. எளிதானதையே நாடுகின்றன. எனவே விடுபட்ட நோன்பை மற்ற நாட்களில் நீங்கள் பூர்த்தி செய்துக்கொள்ளலாம்.

நினைவில் கொள்ளுங்கள்! நோன்பு என்பது வெறும் சடங்கு சம்பிரதாயம் என்ற அடிப்படையில் கடமையாக்கப்பட்ட ஒன்றல்ல. அல்லாஹ்வின் வழிகாட்டுதலைக் கொண்டு உலகம் முழுவதும் அல்லாஹ்வின் கொள்கை கோட்பாடுகளையும் அவற்றின் மகத்துவத்தையும் உயர்வையும் எடுத்துரைக்க தகுதி உடையவர்களாக உங்களை நீங்கள் ஆக்கிக் கொள்ளவேண்டும். மேலும் இதன்பால் நீங்கள் எடுக்கும் ஒவ்வொரு முயற்சியின் பலன்களையும் பூரணமாக பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதே நோன்பின் நோக்கங்களாகும்.

186 وَإِذَا سَأَلَكَ عِبَادِي عَنِّي فَإِنِّي قَرِيبٌ ۖ أُجِيبُ دَعْوَةَ الدَّاعِ إِذَا دَعَانِ ۖ فَلْيَسْتَجِيبُوا لِي وَلْيُؤْمِنُوا بِي لَعَلَّهُمْ يَرْشُدُونَ ○

*186. (நபியே!) என் அடியார்கள் என்னைப் பற்றி உம்மிடம் . கேட்டால்: "நிச்சயமாக நான் சமீபமாகவே இருக்கிறேன், பிரார்த்தனை செய்பவரின் பிரார்த்தனைக்கு அவர் பிரார்த்தித்தால் விடையளிக்கின்றேன்; அவர்கள் என்னிடமே (பிரார்த்தித்துக்) கேட்கட்டும்; என்னையே நம்பட்டும். அப்பொழுது அவர்கள் நேர்வழியை அடைவார்கள்" என்று கூறுவீராக.*

186. மேலும் இதையும் தெரிந்துக்கொள்ளுங்கள். வெறும் நோன்பு நோற்பதால் மட்டும் அல்லாஹ்வின் நெருக்கம் கிடைத்துவிடும் என்று எண்ணிக்கொள்ளாதீர்கள். இறைச் செய்திகளை எடுத்துரைப்பவரே! அல்லாஹ்வின் அடியார்கள் அல்லாஹ்வைப் பற்றி கேட்டால், அல்லாஹ் எல்லா நேரங்களிலும் அவர்களின் அருகாமையிலேயே இருப்பதாக சொல்லிவிடும். இவ்வாறாக எந்த ஒரு பிரச்சனைப் பற்றியும் அல்லாஹ்விடமிருந்து கிடைக்கின்ற தீர்வு என்ன என்பதை அறிய நாடினால் அதன் விளக்கங்கள் இந்த குர்ஆனில் கண்டிப்பாக இருக்கின்றன என்பதையும் எடுத்துரையுங்கள். இப்படியாக அவர்களுடைய ஒவ்வொரு கேள்விக்கும் பதில் கிடைத்துவிடும். அல்லாஹ்வின் நெருக்கம் பெற நாடினால் அவர்கள் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை நன்கறிந்து அதன்படி செயல்பட முன்வரவேண்டும். (மேலும் பார்க்க: 7:55, 32:15&16, 40:60 & 42:26) இதைக்கொண்டுதான் வாழ்வின் நேர்வழியை அவர்களால் அடைந்துக் கொள்ளமுடியும். மேலும் ஆக்கப்பூர்வமான நற்செயல்களால் மட்டுமே தம் வாழ்வின் எல்லா சந்தோஷங்களையும் பெற்றுக்கொள்ளமுடியும் (3:195) என்பதையும் எடுத்துரையுங்கள்.

187 أُحِلَّ لَكُمْ لَيْلَةَ الصِّيَامِ الرَّفَثُ
إِلَىٰ نِسَائِكُمْ ۚ هُنَّ لِبَاسٌ لَكُمْ
وَأَنْتُمْ لِبَاسٌ لَهُنَّ ۗ عَلِمَ
اللَّهُ أَنَّكُمْ كُنْتُمْ تَخْتَانُونَ
أَنْفُسَكُمْ فَتَابَ عَلَيْكُمْ وَعَفَا
عَنْكُمْ ۖ فَالْآنَ بَاشِرُوهُنَّ وَ
ابْتَغُوا مَا كَتَبَ اللَّهُ لَكُمْ ۚ
وَكُلُوا وَاشْرَبُوا حَتَّىٰ يَتَبَيَّنَ
لَكُمُ الْخَيْطُ الْأَبْيَضُ مِنَ الْخَيْطِ
الْأَسْوَدِ مِنَ الْفَجْرِ ۖ ثُمَّ أَتِمُّوا
الصِّيَامَ إِلَى اللَّيْلِ ۚ وَلَا تُبَاشِرُوهُنَّ
وَأَنْتُمْ عَاكِفُونَ فِي الْمَسَاجِدِ ۗ
تِلْكَ حُدُودُ اللَّهِ فَلَا تَقْرَبُوهَا ۗ
كَذَٰلِكَ يُبَيِّنُ اللَّهُ آيَاتِهِ لِلنَّاسِ
لَعَلَّهُمْ يَتَّقُونَ ○

*187. நோன்புக் கால இரவில் நீங்கள் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப் பட்டுள்ளது; அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும், நீங்கள் அவர்களுக்கு ஆடையாகவும் இருக்கின்றீர்கள்; நீங்கள் இரகசியமாகத் தம்மைத் தாமே வஞ்சித்துக் கொண்டிருந்ததை அல்லாஹ் நன்கறிவான்; அவன் உங்கள் மீது இரக்கங்கொண்டு உங்களை மன்னித்தான்; எனவே, இனி (நோன்பு இரவுகளில்) உங்கள் மனைவியருடன் கூடி அல்லாஹ் உங்களுக்கு விதித்ததைத் தேடிக் கொள்ளுங்கள்; இன்னும் ஃபஜ்ரு (அதி காலை) நேரம் என்ற வெள்ளை நூல் (இரவு என்ற) கருப்பு நூலிலிருந்து தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள், பருகுங்கள்; பின்னர், இரவு வரும் வரை நோன்பைப் பூர்த்தி செய்யுங்கள்; இன்னும் நீங்கள் பள்ளி வாசலில் தனித்து (இஃதிகாஃபில்) இருக்கும் போது, உங்கள் மனைவியருடன் கூடாதீர்கள் - இவையே அல்லாஹ் விதித்த வரம்புகளாகும்; அந்த வரம்புகளை(த் தாண்ட) முற்படாதீர்கள்; இவ்வாறே (கட்டுப்பாடுடன்) தங்களைக் காத்து பயபக்தியுடையோர் ஆவதற்காக அல்லாஹ் தன்னுடைய சான்றுகளைத் தெளிவாக்குகின்றான்.*

188 وَلَا تَأْكُلُوا أَمْوَالَكُمْ بَيْنَكُمْ
بِالْبَاطِلِ وَتُدْلُوا بِهَا إِلَى الْحُكَّامِ
لِتَأْكُلُوا فَرِيقًا مِنْ أَمْوَالِ النَّاسِ
بِالْإِثْمِ وَأَنْتُمْ تَعْلَمُونَ ○

187. இதையும் தெரிந்துக்கொள்ளுங்கள்! நோன்பு என்பது பகல் நேரத்தில் கடைபிடிக்க வேண்டிய ஒன்றாகும். இரவு நேரங்களில் உணவருந்துவதிலோ தாம்பத்திய உறவில் ஈடுபடுவதிலோ தடை ஒன்றுமில்லை. இவையாவும் துறவித்தனத்தை கடைபிடிக்கும் யூதர்கள் மற்றும் கிறிஸ்தவர்களின் வீணான சம்பிரதாயங்களாகும் (57:27). கணவன் மனைவி இடையே நிகழும் உறவுமுறையில் அல்லாஹ்வின் சட்டம் குறுக்கிடுவதில்லை. ஏனெனில் மனிதனின் தேவைகள் மற்றும் தேற்றங்கள் என்ன என்று அல்லாஹ்விற்கு நன்கு தெரியும். ஆக கணவன் மனைவி உறவுமுறை நகமும் சதையும் போன்றதாகும். ஒருவர் மற்றவர் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளும் உறவுமுறையாகும். இதில் மூன்றாமவனின் தலையீடு இருக்கலாகாது. எனவே இதுநாள்வரையில் உங்களிடையே மறைமுகமாக இருந்து வந்த வழிமுறைகளை விட்டுவிட்டு கணவன் மனைவி இடையே ஏற்படும் உடலுறவு முறையில் நிர்ணயிக்கப்பட்ட விதிமுறைகளின்படி (பார்க்க:2:223) நோன்பு காலங்களில் இரவு நேரங்களில் இணைந்துக்கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. மேலும் இரவு நேரங்களில் உணவருந்தவும் செய்யலாம் பருகவும் செய்யலாம். பொழுது விடியும் முன்வரையில் (Before sunrise) இவ்வாறு செய்துக்கொள்ளலாம். பகல் நேரம் முழுவதும் நோன்பு இருந்துவிட்டு சூரியன் மறையும்வரை (Sun Set) நோன்பை பூர்த்தி செய்துக்கொள்ள வேண்டும். மேலும் பயிற்சி முகாம்களில் தங்கியிருந்து பிரத்தியேக முறையில் கடுமையான பயிற்சிகளை மேற்கொள்பவர்கள் தம் முழு கவனத்தையும் சமூக பிரச்சனைகளுக்கு தீர்வு காண்பதிலும் பயிற்சி எடுத்துக்கொள்வதிலுமே இருக்கவேண்டும். எனவே அந்த காலக்கட்டங்களில் மனைவியிடம் உடலுறவு கொள்வதும் கூடாது.

ஆக இதுவே நோன்பு என்கிற மனக்கட்டுப்பாடு மற்றும் தற்காப்பு பயிற்சி சம்பந்தமாக அல்லாஹ் நிர்ணயித்துள்ள வரம்புகளாகும். இதில் யாரும் தலையிடக்கூடாது. அவற்றை கட்டிக் காக்கவேண்டும். இவ்வாறாக நடைமுறைபடுத்துவதில் எளிதாக இருப்பதற்காக அல்லாஹ்வின் சட்டங்கள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

188. ஏற்கனவே சொன்னது போல நோன்பின் நோக்கத்தை ஒருபோதும் மறந்துவிடக் கூடாது. நோன்பைக் கொண்டு வாழ்வின் எல்லா கட்டங்களிலும் நல்லது எது தீயது எது என்பதை அறிந்து, எவ்வளவுதான் தமக்கு சாதகமாக இருந்தாலும் தீயவற்றிலிருந்து விலகி அனைத்து தரப்பு மக்களையும் முன்னேற்ற பாதையில் அழைத்துச்செல்ல தகுதியுடையவர்களாக தம்மை ஆக்கிக் கொள்ளவேண்டும் என்பதே அதன் நோக்கமாகும். எனவே அநியாய செயல்களில் ஒருபோதும் ஈடுபடவேண்டாம். ஆக ஒருவர் மற்றவர் சொத்து செல்வங்களை அநியாயமாக அபகரித்துக்கொள்வது ஒருபோதும் கூடாது. விவகாரம் நீதிமன்றம் வரை போயிருந்தால் அங்கு அதிகாரிகளிடம் இலஞ்சம் கொடுத்து தனக்கு சாதகமாக தீர்ப்புபெற முயலாதீர்கள். இவ்வாறு அநியாயமாக சொத்து செல்வங்களை ஈட்டிக் கொள்வதன் விளைவு

188. அன்றியும், உங்களுக்கிடையில் ஒருவர் மற்றவரின் பொருளைத் தவறான முறையில் சாப்பிடாதீர்கள்; மேலும், நீங்கள் அறிந்து கொண்டே பிற மக்களின் பொருள்களிலிருந்து (எந்த) ஒரு பகுதியையும், அநியாயமாகத் தின்பதற்காக அதிகாரிகளிடம் (இலஞ்சம் கொடுக்க) நெருங்காதீர்கள்.

என்ன என்பதை நீங்கள் நன்கு அறிகிறீர்கள். அதாவது சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வும் தீராப் பகையும் பிரச்சனைகளும் ஏற்படும்.

இவ்வாறாக சட்ட ஒழுங்கில் உங்கள் அனைவரையும் (Social Justice and Discipliine) கொண்டு வர இந்த நோன்பு துணை புரிகிறது.

189 يَسْـَٔلُوْنَكَ عَنِ الْاَهِلَّةِ ؕ قُلْ هِىَ مَوَاقِيْتُ لِلنَّاسِ وَالْحَجِّ ؕ وَلَيْسَ الْبِرُّ بِاَنْ تَاْتُوا الْبُيُوْتَ مِنْ ظُهُوْرِهَا وَلٰـكِنَّ الْبِرَّ مَنِ اتَّقٰى ۚ وَاْتُوا الْبُيُوْتَ مِنْ اَبْوَابِهَا ۖ وَاتَّقُوا اللّٰهَ لَعَلَّكُمْ تُفْلِحُوْنَ ○

ருகூஉ 24

189. (நபியே! தேய்ந்து, வளரும்) பிறைகள் பற்றி உம்மிடம் கேட்கிறார்கள்; நீர் கூறும்: "அவை மக்களுக்குக் காலம் காட்டுபவையாகவும், ஹஜ்ஜையும் அறிவிப்பவையாகவும் உள்ளன. (முஃமின்களே! ஹஜ்ஜை நிறைவேற்றிய பிறகு உங்கள்) வீடுகளுக்குள் மேற்புறமாக வருவதில் புண்ணியம் (எதுவும் வந்து விடுவது) இல்லை; ஆனால் இறைவனுக்கு அஞ்சி நற்செயல் புரிவோரே புண்ணியமுடையோராவர்; எனவே வீடுகளுக்குள் (முறையான) வாசல்கள் வழியாகவே செல்லுங்கள்; நீங்கள் வெற்றியடையும் பொருட்டு அல்லாஹ்வை அஞ்சி நடந்து கொள்ளுங்கள்.

189. ரம்லான் (Ramzan) என்பது நோன்பிற்காக குறிப்பிடப்பட்ட மாதமேயாகும். அதனால் அந்த மாதம் புனிதம் என்றோ மற்ற மாதங்கள் புனிதமற்றவை என்றோ எண்ணிவிடக் கூடாது. இறைச் செய்திகளை எடுத்துரைப்பவரே! அவர்கள் உன்னிடம் பிறையைப் பற்றி விசாரிக்கிறார்கள். இவையாவும் மாதம் என்ற காலக்கட்டங்களின் நிர்ணயமே அன்றி வேறில்லை என்பதை அவர்களுக்கு விளக்கிவிடு. இவற்றின் பலன்கள் என்ன (Day,dates,months,year etc) என்பதும் எல்லோருக்கும் தெரியும். அதன்படி ஹஜ்ஜுடைய மாதம் எது என்பதையும் தெரிந்துக்கொள்ள இது உதவுகிறது.

அதே போல ஹஜ் முடித்துக்கொண்டு வீடுகளுக்கு முன் பக்கமாக வரக்கூடாது. பின் புறத்திலிருந்துதான் வர வேண்டும். அதில்தான் பாவப் புண்ணிய கணக்கு உண்டு என்பதெல்லாம் (Superstition) வாஸ்துசாஸ்திரம் என்ற மூடநம்பிக்கைகளாகும். பாவப் புண்ணியம் இவற்றைக்கொண்டு ஏற்படுவதில்லை. புண்ணியத்தை தேடிக்கொள்ள ஒரே ஒரு வழிதான் உள்ளது. அது அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை கடைபிடித்து எந்த அளவிற்கு ஆக்கப்பூர்மான செயல்களை செய்கிறீர்கள் என்பதை பொருத்தே நிர்ணயமாகும். எனவே இந்த மூடநம்பிக்கைகளை விட்டுவிட்டு ஹஜ் சமயம் சாதாரண மற்ற நாட்களில் வாசல் வழியாக வருவது போல் வாருங்கள். அல்லாஹ் வகுத்து தந்துள்ள வாழ்க்கை வழிகாட்டுதலை பேணி நடந்துக்கொள்ளுங்கள்.

190 وَقَاتِلُوْا فِىْ سَبِيْلِ اللّٰهِ الَّذِيْنَ يُقَاتِلُوْنَكُمْ وَلَا تَعْتَدُوْا ؕ اِنَّ اللّٰهَ لَا يُحِبُّ الْمُعْتَدِيْنَ ○

190. உங்களை எதிர்த்துப் போர் புரிபவர்களுடன் நீங்களும், அல்லாஹ்வின் பாதையில் போரிடுங்கள்; ஆனால் வரம்பு மீறாதீர்கள்; நிச்சயமாக அல்லாஹ் வரம்பு மீறுபவர்களை நேசிப்பதில்லை.

190. அதுபோல சில மாதங்களில் போரிடுவதும் விலக்கப்பட்டுள்ளது. (2:217) & (9:36) எனவே அந்த மாதங்கள் புனிதமானவை மற்ற மாதங்கள் புனிதமற்றவை. அதனால் நீங்கள் மற்ற மாதங்களில் எல்லாம் போருக்காக ஆயுதம் ஏந்திக்கொள்ளவேண்டும் என்பதல்ல. போரிடுவதற்கும் சட்ட விதிமுறைகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. தனிப்பட்ட விரோதத்தின் காரணமாகவோ பிறநாட்டை ஆக்கிரமிக்கவோ போரிடக்கூடாது. மாறாக அக்கிரமத்தையும் அதர்மத்தையும் ஒழிக்கவே போரை தவிர வேறு வழியில்லை என்னும் பட்சத்தில் போரிடவேண்டும். (22:39) அதுவும் உங்களுக்கெதிராக போர் புரிபவர்களிடமே நீங்கள் போரிடவேண்டும். மனித நேயத்தை கட்டிக்காக்கவே போரிட வேண்டும். இதுவே அல்லாஹ்வின் பாதையில் போரிடுவது என்பதாகும். அதிலும் வரம்புமீறுதல் ஒரு போதும் கூடாது. போருக்காக நிர்ணயமான இந்த கட்டளைகளிலும் வரம்பு மீறுதல் கூடாது.

19 وَاقْتُلُوهُمْ حَيْثُ ثَقِفْتُمُوهُمْ وَأَخْرِجُوهُم مِّنْ حَيْثُ أَخْرَجُوكُمْ ۚ وَالْفِتْنَةُ أَشَدُّ مِنَ الْقَتْلِ ۚ وَلَا تُقَاتِلُوهُمْ عِندَ الْمَسْجِدِ الْحَرَامِ حَتَّىٰ يُقَاتِلُوكُمْ فِيهِ ۖ فَإِن قَاتَلُوكُمْ فَاقْتُلُوهُمْ ۗ كَذَٰلِكَ جَزَاءُ الْكَافِرِينَ ○

*191. (உங்களை வெட்டிய) அவர்கள் எங்கே காணக்கிடைப்பினும், அவர்களைக் கொல்லுங்கள்; இன்னும், அவர்கள் உங்களை எங்கிருந்து வெளியேற்றினார்களோ, அங்கிருந்து அவர்களை வெளியேற்றுங்கள்; ஏனெனில் ஃபித்னா (குழப்பமும், கலகமும் உண்டாக்குதல்) கொலை செய்வதை விடக் கொடியதாகும். இருப்பினும், மஸ்ஜிதுல் ஹராமில் அவர்கள் (முதலில்) உங்களிடம் சண்டையிடாத வரையில், நீங்கள் அவர்களுடன் சண்டையிடாதீர்கள்; ஆனால் (அங்கும்) அவர்கள் உங்களுடன் சண்டையிட்டால் நீங்கள் அவர்களைக் கொல்லுங்கள் - இதுதான் நிராகரிப்போருக்கு உரிய கூலியாகும்.*

191. நாட்டில் கொலை, கொள்ளை, குழப்பங்கள், அட்டூழியங்கள் யாவும் போரினால் ஏற்படக்கூடிய பாதிப்பைவிட பன்மடங்கு அதிகமான தீங்குகளை விளைவிக்கக்கூடியவை ஆகும். ஆதனால் அப்பாவி மக்களின் குடியிருப்புகளை அபகரித்தும் ஆக்கிரமித்தும் அநியாயம் செய்வார்கள். அது போலவே உங்களையும் அவர்கள் உங்கள் இல்லங்களை விட்டு வெளியேற்றிவிட்டார்கள். எனவே இப்படிப்பட்ட சமூகவிரோத சக்திகளை விட்டுவைக்க முடியுமா? அவர்கள் ஆக்கிரமித்த இடங்களைவிட்டு அவர்களை வெளியேற்றவேண்டும். இதற்காக encouter முறையில் அவர்களை எங்கு கண்டாலும் வெட்டி சாய்த்துவிடுங்கள். மேலும் கா..பா என்ற இடம் உலக மக்களின் சமாதான கேந்திரமாக (International Peace Centre) அமைக்கப்பட்டுள்ளது (2:125) அதனால் அந்த இடத்தில் சண்டையிடாதீர்கள். ஆனால் பகைவர்கள் அந்த இடத்திலும் போரிட முற்பட்டால் அவர்களை விட்டுவிடாதீர்கள். அவர்களுக்கு எதிராக கடுமையான நடவடிக்கை எடுங்கள். இந்த Encouter ஒரு அரசுக்கு கிடைக்கும் தனி அதிகாரமாகும். தனி நபருக்கு கிடைக்கின்ற அதிகாரமல்ல. அப்போதுதான் அந்த சமூகவிரோத சக்திகளுக்கு ஒரு பாடமாக அமையும்.

192 فَإِنِ انتَهَوْا فَإِنَّ اللَّهَ غَفُورٌ رَّحِيمٌ ○

*192. எனினும், அவர்கள் (இவ்வாறு செய்வதில் நின்றும்) ஒதுங்கி விடுவார்களாயின் (நீங்கள் அவர்களைக் கொல்லாதீர்கள்); நிச்சயமாக அல்லாஹ் மிக மன்னிப்போனாகவும், கருணையுடையோனாகவும் இருக்கின்றான்.*

192. போர் நிறுத்த கட்டளை வரும்போது போரை நிறுத்திக்கொள்ளுங்கள். நோன்பின் நோக்கம் எதுவென்றால் அல்லாஹ்வின் கட்டளையின்படி உங்களை செயல்பட வைப்பதேயாகும். அதாவது எங்கு உணவருந்துவதை நிறுத்த கட்டளை வருகிறதோ அங்கு நிறுத்திக்கொள்கிறீர்கள். எந்த வினாடியில் சாப்பிட கட்டளை வருகிறதோ அப்போதுதான் சாப்பிடுகிறீர்கள். இப்படிப்பட்ட பயிற்சிகளைக்கொண்டு அல்லாஹ்வின் கட்டளைகள் என்னவோ அவற்றை மீறாமல் துல்லியமாக கடைபிடிப்பதே நோன்பின் நோக்கமாகும். இவ்வாறு அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை பேணி நடப்பீர்களானால் எல்லாவித ஆபத்துகளிலிருந்தும் பாதுகாப்பான வாழ்வுபெற வழிகள் பிறக்கும். இதுவே அல்லாஹ்வின் இரக்க குணத்தின் பிரதிபலிப்பாகும்.

193 وَقَاتِلُوهُمْ حَتَّىٰ لَا تَكُونَ فِتْنَةٌ وَيَكُونَ الدِّينُ لِلَّهِ ۖ فَإِنِ انتَهَوْا فَلَا عُدْوَانَ إِلَّا عَلَى الظَّالِمِينَ ○

*193. ஃபித்னா (குழப்பமும், கலகமும்) நீங்கி அல்லாஹ்வுக்கே மார்க்கம் என்பது உறுதியாகும் வரை, நீங்கள் அவர்களுடன் போரிடுங்கள்; ஆனால் அவர்கள் ஒதுங்கி விடுவார்களானால் - அக்கிரமக்காரர்கள் தவிர (வேறு எவருடனும்) பகை (கொண்டு போர் செய்தல்) கூடாது.*

193. இந்த சட்ட விதிமுறைக்குள் இருந்துக்கொண்டு அவர்களிடம் போரிடுங்கள். அல்லாஹ்வின் மார்க்கத்தில் இணைய நிர்ப்பந்தம் ஒன்றுமில்லை (2:256). அதுபோலவே அல்லாஹ்வின் மார்க்க விஷயத்தில் இந்த சமூகவிரோத சக்திகளின் குறிக்கீடுகளும் இனி இருக்காது என்ற சூழ்நிலை உருவாகி விட்டால் அவர்களுக்கு எதிராக போரிடுவதை நிறுத்திக்கொள்ளுங்கள். ஏனெனில் போரின் நோக்கமே உலகில் அநியாயத்தையும் அதர்மத்தையும் ஒழித்துக்கட்டுவதேயாகும். எதிரிகளை கொன்று குவிக்கும் நோக்கம் ஒருபோதுமில்லை.

194 الشَّهْرُ الْحَرَامُ بِالشَّهْرِ الْحَرَامِ وَالْحُرُمَاتُ قِصَاصٌ ۚ فَمَنِ اعْتَدَىٰ عَلَيْكُمْ فَاعْتَدُوا عَلَيْهِ بِمِثْلِ مَا اعْتَدَىٰ عَلَيْكُمْ ۚ وَاتَّقُوا اللَّهَ وَاعْلَمُوا أَنَّ اللَّهَ مَعَ الْمُتَّقِينَ ○

*194. (போர் செய்வது விலக்கப்பட்டுள்ள ரஜப், துல்கஃதா, துல்ஹஜ், முஹர்ரம் ஆகிய) புனித மாதத்திற்குப் புனித மாதமே ஈடாகும்; இதே போன்று,. எல்லாப் புனிதப் பொருட்களுக்கும் ஈடு உண்டு - ஆகவே, எவனாவது (அம்மாதத்தில்) உங்களுக்கு எதிராக வரம்பு கடந்து நடந்தால், உங்கள் மேல் அவன் எவ்வளவு வரம்பு மீறியுள்ளானோ, அதே அளவு நீங்கள் அவன் மேல் வரம்பு மீறுங்கள்; அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் பயபக்தியுடையோருடன் இருக்கின்றான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.*

194. போர் வருடம் முழுவதும் தொடரவேண்டும் என்பதல்ல. இடைவெளி இருப்பதைக் கொண்டு சுமூகமான சூழ்நிலைகள் உருவாக வாய்ப்புகள் பிறக்கும். இதற்காக வருடத்தில் சில மாதங்கள் போரிடுவதை விலக்கிக் கொள்ளவேண்டும் (9:36). ஆனால் இந்த போர் நிறுத்தம் ஒருதலை பட்சமாக தீர்மானித்துக்கொள்ள முடியாது. எந்த நாடுகளுக்கிடையே பகைமை வளர்ந்து போரிட நேர்கிறதோ அவர்களுக்கிடையே ஏற்படக்கூடிய ஒப்பந்தமாகும் (Bilateral Agreement). எனவே அது சம்பந்தப்பட்ட நாட்டினர் அதை பேணிக்காக்க வேண்டியது அவசியமாகிறது. அதில் யார் வரம்பு மீறினாலும் அந்த ஒப்பந்தம் அர்த்தமற்றதாய் போய்விடும். ஆக எதிர்தரப்பினர் போர் விலக்கப்பட்ட மாதங்களிலும் அத்துமீறி நடந்துக்கொண்டால் நீங்களும் அவர்களுக்கெதிராக கடுமையான நடவடிக்கை எடுங்கள். அதாவது எப்போதும் மிகவும் கவனத்துடன் நடந்துக் கொள்ளவேண்டும். போர் நிறுத்த ஒப்பந்தம் உள்ளது என்பதால் அஜாக்கிரதையாக இருந்துவிடக்கூடாது. ஆக யார் அல்லாஹ்வின் நெறிமுறை மற்றும் சட்டதிட்டங்களை பேணி நடக்கிறார்களோ அவர்களுக்கே அல்லாஹ்வின் எல்லா வகையான உதவியும் அருட்கொடைகளும் கிடைக்கும் என்பதை எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

195 وَأَنْفِقُوا فِي سَبِيلِ اللَّهِ وَلَا تُلْقُوا بِأَيْدِيكُمْ إِلَى التَّهْلُكَةِ ۛ وَأَحْسِنُوا ۛ إِنَّ اللَّهَ يُحِبُّ الْمُحْسِنِينَ ○

*195. அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்யுங்கள்; இன்னும் உங்கள் கைகளாலேயே உங்களை அழிவின் பக்கம் கொண்டு செல்லாதீர்கள்; இன்னும், நன்மை செய்யுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் முஹ்ஸின்களை — நன்மை செய்வோரை — நேசிக்கின்றான்.*

195. அதர்மத்தை எதிர்த்து தர்மத்தை காக்க ஏற்படுத்தப்பட்டுள்ள இந்த அமைப்பின் தேவைகளை நிறைவேற்ற எல்லாவகையான உதவிகளையும் செய்துவாருங்கள். நீங்கள் அவ்வாறு செய்யவில்லை என்றால் நீங்கள் உங்கள் கரங்களாலேயே உங்கள் அழிவைத் தேடிக்கொள்வதாக பொருள்படும். அவ்வாறு தம்மைத்தாமே அழித்துக்கொள்வதில் பயன் எதுவும் இல்லை. இன்னும் அழகியமுறையில் அல்லாஹ்வின் செயல்திட்டம் நிறைவேற துணை புரியுங்கள். இவ்வாறாக நடுநிலையில் நின்று நீதமான முறையில் செயல்படுவோர்க்கு எப்போதும் அல்லாஹ்வின் நேசம் கிடைக்கும். (You will be dignitised by the Government) அதாவது உங்கள் இலட்சியத்தில் வெற்றி பெறுவீர்கள்.

196 وَأَتِمُّوا الْحَجَّ وَالْعُمْرَةَ لِلَّهِ ۚ فَإِنْ أُحْصِرْتُمْ فَمَا اسْتَيْسَرَ مِنَ الْهَدْيِ ۖ وَلَا تَحْلِقُوا رُءُوسَكُمْ حَتَّىٰ يَبْلُغَ الْهَدْيُ مَحِلَّهُ ۚ فَمَنْ كَانَ مِنْكُمْ مَرِيضًا أَوْ بِهِ أَذًى مِنْ رَأْسِهِ فَفِدْيَةٌ مِنْ صِيَامٍ أَوْ صَدَقَةٍ أَوْ نُسُكٍ ۚ فَإِذَا أَمِنْتُمْ فَمَنْ تَمَتَّعَ بِالْعُمْرَةِ إِلَى الْحَجِّ فَمَا اسْتَيْسَرَ مِنَ الْهَدْيِ

196. நியாயத்தையும் தர்மத்தையும் நிலைநாட்ட எந்த அளவிற்கு பாடுபடவேண்டியுள்ளது என்பதை நீங்கள் கவனித்தீர்களா அல்லவா? அதேபோல மக்கள் பிரச்சனைகளை தீர்த்து வைப்பதற்காக ஒரு அமைப்பும் (2:143) அவ்வபோது கலந்தாலோசித்து ஆக்கப்பூர்வமான முடிவுகளை எடுப்பதும் அவசியம் என்பதை நாம் ஏற்கனவே 2 : 158 – ல் பார்த்தோம். இதை ஹஜ் மற்றும் உம்ரா என்கிறோம். சில சமயங்களில் சில தவிர்க்க முடியாத காரணங்களினால் அங்கு செல்ல முடியாமல் போய்விடலாம். அதற்கு பதிலாக உங்களுக்கு சாத்தியமான உதவிப் பொருட்களை பயணம் மேற்கொள்பவர்கள் மூலமாக கொடுத்தனுப்புங்கள். அங்கு வருபவர்களுக்கு அவை பலனுள்ளதாக

فَمَنْ لَّمْ يَجِدْ فَصِيَامُ ثَلٰثَةِ اَيَّامٍ فِى الْحَجِّ وَ سَبْعَةٍ اِذَا رَجَعْتُمْ ؕ تِلْكَ عَشَرَةٌ كَامِلَةٌ ؕ ذٰلِكَ لِمَنْ لَّمْ يَكُنْ اَهْلُهٗ حَاضِرِى الْمَسْجِدِ الْحَرَامِ ؕ وَاتَّقُوا اللّٰهَ وَاعْلَمُوْٓا اَنَّ اللّٰهَ شَدِيْدُ الْعِقَابِ ۝

196. ஹஜ்ஜையும், உம்ராவையும் அல்லாஹ்வுக்காகப் பூர்த்தி செய்யுங்கள்; (அப்படிப் பூர்த்தி செய்ய முடியாதவாறு) நீங்கள் தடுக்கப்படுவீர்களாயின் உங்களுக்கு சாத்தியமான ஹத்யு (ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற தியாகப் பொருளை) அனுப்பி விடுங்கள்; அந்த ஹத்யு (குர்பான் செய்யப்படும்) இடத்தை அடைவதற்கு முன் உங்கள் தலைமுடிகளைக் களையாதீர்கள்; ஆயினும், உங்களில் எவரேனும் நோயாளியாக இருப்பதினாலோ அல்லது தலையில் ஏதேனும் தொந்தரவு தரக்கூடிய பிணியின் காரணமாகவோ (தலைமுடியை இறக்கிக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால்) அதற்குப் பரிகாரமாக நோன்பு இருத்தல் வேண்டும், அல்லது தர்மம் கொடுத்தல் வேண்டும், அல்லது குர்பானீ கொடுத்தல் வேண்டும்; பின்னர் நெருக்கடி நீங்கி, நீங்கள் சமாதான நிலையைப் பெற்றால் ஹஜ் வரை உம்ரா செய்வதின் சவுகரியங்களை அடைந்தோர் தனக்கு எது இயலுமோ அந்த அளவு குர்பானீ கொடுத்தல் வேண்டும்; (அவ்வாறு குர்பானீ கொடுக்க) சாத்தியமில்லையாயின், ஹஜ் செய்யும் காலத்தில் மூன்று நாட்களும், பின்னர் (தம் ஊர்) திரும்பியதும் ஏழு நாட்களும் ஆகப் பூரணமாகப் பத்து நாட்கள் நோன்பு நோற்றல் வேண்டும். இ(ந்தச் சலுகையான)து, எவருடைய குடும்பம் மஸ்ஜிதுல் ஹராமின் பக்கத்தில் இல்லையோ அவருக்குத் தான் - ஆகவே அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் வேதனை கொடுப்பதில் கடுமையானவன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

இருக்கும். (22:36) அந்த நன்கொடைப் பொருட்கள் அந்த இடத்தை சென்றடையும் வரையில் உங்கள் தலைமுடிகளை களையாதீர்கள். இப்படி செய்வதால் உங்கள் செயல் அனைத்திலும் ஒருங்கிணைப்பு மற்றும் சமநிலை இருப்பதை பிரதிபலிக்கும். இருப்பினும் நீங்கள் நோய்வாய் பட்டிருந்தாலோ அல்லது தலையில் தொந்தரவு ஏதேனும் இருந்தாலோ அதற்கு பதிலாக நோன்பு இருத்தல் வேண்டும். அல்லது உதவித் தொகை அளிக்கவேண்டும். அல்லது ஏதாவது நன்மையான காரியங்களை செய்யவேண்டும். பின்னர் சுமூகமான சூழ்நிலை ஏற்பட்ட பின் ஹஜ் மற்றும் உமரா செய்ய வாய்ப்பு பெற்றவர்கள் அங்கு செல்லலாம். மேலும் அவ்வாறு செல்பவர்கள் தங்களுடன் உதவிப் பொருட்களை கூடுமானவரை எடுத்துச் செல்லவேண்டும். அவ்வாறு எடுத்துச்செல்ல சாத்தியம் பெறாதவர்கள் ஹஜ் சமயம் மூன்று நாட்களுக்கு நோன்பு நோற்கவேண்டும். அங்கிருந்து திரும்பி வந்ததும் மேலும் ஏழு நாட்கள் நோன்பு நோற்கவேண்டும. ஆக மொத்தம் பத்து நாட்கள் நோன்பிருக்க வேண்டும். இவை யாவும் யாருடைய குடும்பங்கள் காஃபாவின் பக்கத்தில் இல்லையோ அவர்களுக்குத்தான் இது கடமையாகும்.

நினைவில் கொள்ளுங்கள். இந்த கட்டளைகள் யாவும் நீங்கள் எந்த அளவிற்கு அல்லாஹ்வின் நெறிமுறைகளை பேணி நடக்கிறீர்கள் என்பதை பரீச்சயம் செய்யத்தான். சடங்கு சம்பிரதாயம் என்பதல்ல. இவையாவும் ஒட்டுமொத்த சமுதாய ஒருங்கிணைப்பை பிரதிபலிக்கும் சின்னங்களேயாகும் என்பதை மறவாதீர்கள். செயல்திட்டங்களை காற்றில் பறக்க விட்டுவிட்டு வெறும் சடங்கு சம்பிரதாயங்களுக்கு முக்கியத்துவம் அளித்தீர்களானால் அல்லாஹ்வின் வேதனை மிகக் கடுமையாக இருக்கும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

197 اَلْحَجُّ اَشْهُرٌ مَّعْلُوْمٰتٌ ۚ فَمَنْ فَرَضَ فِيْهِنَّ الْحَجَّ فَلَا رَفَثَ وَلَا فُسُوْقَ وَلَا جِدَالَ فِى الْحَجِّ ؕ وَمَا تَفْعَلُوْا مِنْ خَيْرٍ يَّعْلَمْهُ اللّٰهُ ؕ وَتَزَوَّدُوْا فَاِنَّ خَيْرَ الزَّادِ التَّقْوٰى ؗ وَاتَّقُوْنِ يٰٓاُولِى الْاَلْبَابِ ۝

197. ஹஜ்ஜுடைய மாதங்கள் இவை என குறிப்பிடப்பட்டு அறிவிப்புகள் செய்வதும் முக்கியமாகும். அதன் பின்னர் ஹஜ் பயணத்திற்கு தம்மை ஆயத்தம் செய்துகொண்டவர்கள் தகாத செயல்கள் எதுவும் செய்யக்கூடாது. அதாவது தாம்பத்திய உறவு கொள்வதோ, கெட்ட வார்த்தைகளை பேசுவதோ அல்லது வாதத்தில் மிகைக்கவேண்டும் என்ற எண்ணத்தில் தர்க்கம் செய்வதோ ஒருபோதும் கூடாது. இப்படியாக நீங்கள் உங்களை திருத்திக்கொள்ளும் இடமாகவும் மனப்பக்குவத்தை அடைவதற்கு பயிற்சி பெறுவதாகவும் இவையாவும் அமையும். இதனால் வாழ்வில் மற்ற நேரங்களிலும் தகாத

## ருகூஃ 25

*197. ஹஜ்ஜுக்குரிய காலம் குறிப்பிடப் பட்ட மாதங்களாகும்; எனவே, அவற்றில் எவரேனும் (இஹ்ராம் அணிந்து) ஹஜ்ஜை தம் மீது கடமையாக்கிக் கொண்டால், ஹஜ்ஜின் காலத்தில் சம்போகம், கெட்ட வார்த்தைகள் பேசுதல், சச்சரவு - ஆகியவை செய்தல் கூடாது; நீங்கள் செய்யும் ஒவ்வொரு நன்மையையும் அல்லாஹ் அறிந்தவனாகவே இருக்கிறான்; மேலும் ஹஜ்ஜுக்குத் தேவையான பொருட்களைச் சித்தப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள்; நிச்சயமாக இவ்வாறு சித்தப்படுத்தி வைப்பவற்றுள் மிகவும் கைரானது (நன்மையானது), தக்வா (என்னும் பயபக்தியே) ஆகும்; எனவே நல்லறிவுடையோரே! எனக்கே பயபக்தியுடன் நடந்து கொள்ளுங்கள்.*

செயல்களை செய்வதிலிருந்து உங்களை நீங்களே தடுத்துக்கொள்வீர்கள். ஏனெனில் நீங்கள் செய்யும் ஒவ்வொரு நன்மையான காரியங்களும் அல்லாஹ்விற்கு நன்கு தெரியும். தீமையான செயல்களும் அல்லாஹ்வுடைய பார்வையிலிருந்து தப்ப முடியாது. மேலும் ஹஜ் பயணம் மேற்கொள்ளும் சமயம் உங்களுக்குத் தேவையான அனைத்து பொருட்களையும் சித்தப்படுத்தி எடுத்துச்செல்லுங்கள். ஏனெனில் அங்குச் சென்றபின் உங்கள் தேவைகளுக்கு மற்றவர்களிடம் கையேந்திக் நிற்கக்கூடாது. இதுவே உங்களுக்கு நன்மையானதும் ஆகும். அல்லாஹ்வின் செயல்திட்டங்கள் எந்தஅளவிற்கு உலக மக்களுக்கு பலனுள்ளதாக உள்ளன என்பதை வெளிப்படுத்தவே (Exhibition of Almighty's Programs) ஹஜ் என்னும் பயணம் மேற்கொள்ளப்படுகிறது என்பதை மறவாதீர்கள் (22:27). அல்லாஹ்வின் செயல்திட்டங்களை நடைமுறைபடுத்த திறமையும் ஞானமும் உள்ளவர்களே அல்லாஹ்வின் இது முக்கியமான கடமை என்பதை உணர்ந்து ஹஜ் பயணம் மேற்கொள்வார்கள்.

198 لَيْسَ عَلَيْكُمْ جُنَاحٌ أَنْ تَبْتَغُوا
فَضْلًا مِّنْ رَّبِّكُمْ فَإِذَآ أَفَضْتُم
مِّنْ عَرَفٰتٍ فَاذْكُرُوا اللّٰهَ عِنْدَ
الْمَشْعَرِ الْحَرَامِ وَاذْكُرُوهُ كَمَا
هَدٰىكُمْ وَإِنْ كُنْتُمْ مِّنْ قَبْلِهٖ
لَمِنَ الضَّآلِّيْنَ ۝

*198. (ஹஜ்ஜின் போது) உங்கள் இறைவனுடைய அருளை நாடுதல் (அதாவது வியாபாரம் போன்றவற்றின் மூலமாக நேர்மையான பலன்களை அடைதல்) உங்கள் மீது குற்றமாகாது; பின்னர் அரஃபாத்திலிருந்து திரும்பும்போது "மஷ்அருல் ஹராம்" என்னும் தலத்தில் அல்லாஹ்வை திக்ரு (தியானம்) செய்யுங்கள்; உங்களுக்கு அவன் நேர்வழி காட்டியது போல் அவனை நீங்கள் திக்ரு செய்யுங்கள். நிச்சயமாக நீங்கள் இதற்கு முன் வழிதவறியவர்களில் இருந்தீர்கள்.*

198. மேலும் இதையும் தெரிந்துக்கொள்ளுங்கள். ஹஜ் பயணம் என்பது சில சடங்குகளை நிறைவேற்றுவதற்கான ஏதோ ஒரு யாத்திரை என்றோ அங்கு உலக விவகாரங்கள் பற்றிய பேச்சிற்கே இடமில்லை என்றோ எண்ணிக்கொள்ளாதீர்கள். இந்த கூட்டமைப்பில் அங்கு அனைவரும் கூடி உலக விவகாரங்களையும் பேசலாம். தம் நாட்டிலுள்ள நடைமுறை சிக்கல்களைப்பற்றியும் பிரச்சனைகளைப் பற்றியும் கலந்தாலோசித்து அவற்றின் தீர்வுகளையும் காணலாம். இவை ஒருவரையொருவர் அறிமுகப்படுத்திக்கொள்ளும் 'அரஃபாத்' என்னும் மைதானத்தில் நடைபெறும். அதன் பின்னர் அங்கிருந்து திரும்பி வந்து 'மஷ்ஹருல் ஹராம்' என்னும் இடத்தின் சமீபம் அனைவரும் வந்து கூடிக்கொள்ளுங்கள். அங்கு அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை முன்வைத்து அல்லாஹ்வின் கூட்டமைப்பின் பல்வேறு நலத்திட்டங்களைப் பற்றி ஆய்வுசெய்யுங்கள்.

இப்படியாக இதுநாள் வரையில் ஹஜ் பயணத்தைப் பற்றி நிலவி வந்த தவறான எண்ணங்கள் நீங்கி அதன் உண்மையான நோக்கங்கள் என்ன என்பதையும் அதன் உயர் இலட்சியங்களைப்பற்றியும் அறிந்துக்கொள்ள ஹஜ் பயணம் உங்களுக்கு வாய்ப்பளிக்கும்.

199 ثُمَّ أَفِيضُوا مِنْ حَيْثُ أَفَاضَ
النَّاسُ وَاسْتَغْفِرُوا اللَّهَ ۚ إِنَّ اللَّهَ
غَفُورٌ رَّحِيمٌ ○

*199. பிறகு, நீங்கள் மற்ற மனிதர்கள் திரும்புகின்ற (முஸ்தலிஃபா என்னும்) இடத்திலிருந்து நீங்களும் திரும்பிச் செல்லுங்கள்; (அங்கு அதாவது மினாவில்) அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்போனாகவும், மிக்க கருணையுடையோனாகவும் இருக்கின்றான்.*

200 فَإِذَا قَضَيْتُم مَّنَاسِكَكُمْ فَاذْكُرُوا
اللَّهَ كَذِكْرِكُمْ آبَاءَكُمْ أَوْ أَشَدَّ
ذِكْرًا ۗ فَمِنَ النَّاسِ مَن يَقُولُ رَبَّنَا
آتِنَا فِي الدُّنْيَا وَمَا لَهُ فِي الْآخِرَةِ
مِنْ خَلَاقٍ ○

*200. ஆகவே, உங்களுடைய ஹஜ்ஜு கிரியைகளை முடித்ததும், நீங்கள் (இதற்கு முன்னர்) உங்கள் தந்தையரை நினைவு கூர்ந்து சிறப்பித்ததைப்போல் - இன்னும் அழுத்தமாக, அதிகமாக அல்லாஹ்வை நினைவு கூர்ந்து திக்ரு செய்யுங்கள்; மனிதர்களில் சிலர், "எங்கள் இறைவனே! இவ்வுலகிலேயே (எல்லாவற்றையும்) எங்களுக்குத் தந்துவிடு" என்று கூறுகிறார்கள்; இத்தகையோருக்கு மறுமையில் யாதொரு நற்பாக்கியமும் இல்லை.*

201 وَمِنْهُم مَّن يَقُولُ رَبَّنَا آتِنَا فِي
الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً
وَقِنَا عَذَابَ النَّارِ ○

*201. இன்னும் அவர்களில் சிலர், "ரப்பனா! (எங்கள் இறைவனே!) எங்களுக்கு இவ்வுலகில் நற்பாக்கியங்களைத் தந்தருள்வாயாக; மறுமையிலும் நற்பாக்கியங்களைத் தந்தருள்வாயாக; இன்னும் எங்களை (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் காத்தருள்வாயாக!" எனக் கேட்போரும் அவர்களில் உண்டு.*

199. இந்த கடமைகள் யாவற்றையும் முடித்துக்கொண்டு மக்கள் தத்தம் ஊர்களுக்கு திரும்பிச் செல்லட்டும். இப்படி செய்வதால் நீங்கள் அனைவரும் பிரிந்துச் சென்றுவிட்டதாக எண்ணிக் கொள்ளாதீர்கள். அங்கு நிறைவேற்றப்பட்ட நலத்திட்டங்களின் பிரகாரம் தம் நாட்டில் அமைதிகாக்கும் அனைத்து பாதுகாப்பு திட்டங்களையும் நடைமுறைப் படுத்துவதில் தங்கள் முழு கவனத்தையும் செலுத்துங்கள். அல்லாஹ்வின் இந்த நலத்திட்டங்களில் எல்லாவகையான பாதுகாப்பும் நாட்டின் முழு வளர்ச்சி பெறுவதற்கும் வகை செய்யப்பட்டுள்ளன.

200. மீண்டும் கூறுகிறோம். ஹஜ்ஜுடைய கடமைகள் யாவும் முடித்துக் கொண்டு தத்தம் ஊர்களுக்கு திரும்பிச் சென்றதும் தம் கடமைகள் யாவும் முடிந்துவிட்டன. இனி நமக்கு எந்த கவலையும் இல்லை என்று எண்ணிவிடாதீர்கள். அங்கு நிறைவேற்றப்பட்ட எல்லா திட்டங்களைப் பற்றியும் தாம் ஆற்ற வேண்டிய கடமைகளின் பொறுப்புகளைப் பற்றியும் ஆய்வுசெய்யுங்கள். எவ்வாறு இது விஷயமாக உங்கள் முன்னோர்கள் ஆய்வுசெய்து தம் பணியாற்றி வந்தார்களோ அதை விட சிறந்த முறையில் தம் பொறுப்புகளை நிறைவேற்ற வாருங்கள்.

இதையும் தெரிந்துக்கொள்ளுங்கள். உலக விவகாரங்களை தீர்த்துவைப்பதில் முழு கவனத்தையும் செலுத்தும்படி கூறினால் அதற்காக தற்காலிக பலன்களை மட்டும் முன் வைத்து திட்டங்களை தீட்டவேணடும் என்று பொருள் கொள்ளக்கூடாது. ஏனெனில் தற்காலிக பலன்களை மட்டும் கவனத்தில் கொண்டு திட்டங்களை உருவாக்கினால் அதனால் வருங்காலத்தில் பல சிக்கல்கள் ஏற்பட்டுவிடலாம். அப்படிப்பட்ட எண்ணம் கொண்டவர்களாக இருக்காதீர்கள்.

201. மாறாக தற்காலிக பலன்களோடு வருங்கால நிரந்தர பலன்களையும் முன்வைத்து திட்டங்களை தீட்டி அதன்படி செயல்படுவோரும் உள்ளனர். மேலும் தம் வாழ்வில் அழிவினை ஏற்படுத்தும் செயல்களை தவிர்த்துக்கொள்ளும் எண்ணத்தோடு வாழ்பவர்களும் உள்ளனர். அவர்களுக்கே வாழ்வின் எல்லா காலக் கட்டங்களிலும் பாதுகாப்பான வாழ்வு கிடைக்க வழி பிறக்கும். எனவே அல்லாஹ்வின் செயல் திட்டங்கள் யாவும் நிகழ்கால வாழ்வின் (ஹயாதித்துன்யா)பலன்களையும் வருங்கால நிரந்தர பலன்களையும் (ஹயாதுல் ஆ:.கிர) முன் வைத்தே உருவாக்கப்பட்டுள்ளன. (17:18-21) & (4:134)

தனி நபர் விஷயத்தில் ஆ:.கிரத் – வருங்கால வாழ்வு என்பது அவர்களுடைய பிற்கால உலக வாழ்வும் மரணத்திற்குப்பின் தொடர்கின்ற வாழ்க்கை என்றும் பொருள்படும். சமுதாயத்தை பொறுத்தவரை ஆ:.கிரத் என்பது இந்த உலகில் தொடர்கின்ற வருங்கால வாழ்க்கை என்று பொருள்படும்

202 أُولَٰٓئِكَ لَهُمْ نَصِيبٌ مِّمَّا كَسَبُوا۟ ۚ وَٱللَّهُ سَرِيعُ ٱلْحِسَابِ ۝

*202. இவ்வாறு, (இம்மை, மறுமையிரண்டிலும் நற்பேறுகளைக் கேட்கின்ற) அவர்களுக்குத்தான் அவர்கள் சம்பாதித்த நற்பாக்கியங்கள் உண்டு; தவிர, அல்லாஹ் கணக்கெடுப்பதில் மிகத் தீவிரமானவன்.*

202. இப்படிப்பட்டவர்கள் செய்துவரும் ஆக்கபூர்வமான செயல்களால் நிகழ்கால வாழ்வும் வருங்கால வாழ்வும் சிறப்பாக அமையும். அல்லாஹ் வகுத்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்கின்ற நியதிப்படி அவர்களுடைய செயல்கள் எவுதும் வீண்போகாது. அவற்றின் தக்கபலன்கள் அவர்களுக்கு கிடைத்துக் கொண்டேயிருக்கும்.

203 وَٱذْكُرُوا۟ ٱللَّهَ فِىٓ أَيَّامٍ مَّعْدُودَٰتٍ ۚ فَمَن تَعَجَّلَ فِى يَوْمَيْنِ فَلَآ إِثْمَ عَلَيْهِ وَمَن تَأَخَّرَ فَلَآ إِثْمَ عَلَيْهِ ۚ لِمَنِ ٱتَّقَىٰ ۗ وَٱتَّقُوا۟ ٱللَّهَ وَٱعْلَمُوٓا۟ أَنَّكُمْ إِلَيْهِ تُحْشَرُونَ ۝

*203. குறிப்பிடப்பட்ட நாட்களில் அல்லாஹ்வை திக்ரு செய்யுங்கள்; எவரும் (மினாவிலிருந்து) இரண்டு நாட்களில் விரைந்து விட்டால் அவர் மீது குற்றமில்லை; யார் (ஒரு நாள் அதிகமாக) தங்குகிறாரோ அவர் மீதும் குற்றமில்லை; (இது இறைவனை) அஞ்சிக் கொள்வோருக்காக (கூறப்படுகிறது); அல்லாஹ்வை நீங்கள் அஞ்சிக் கொள்ளுங்கள்; நீங்கள் நிச்சயமாக அவனிடத்திலே ஒன்று சேர்க்கப்படுவீர்கள் என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்.*

203. அல்லாஹ் நிர்ணயித்துள்ள செயல்திட்டங்களை நிறைவேற்றுவதற்காக (ஹஜ் சமயம்) அங்குவந்து கூடியவர்கள் குறிப்பிடப்பட்ட நாட்கள் வரையில் தங்கியிருந்து அந்த நலத் திட்டங்களைப் பற்றி ஆய்ந்து அறிந்துக்கொள்ளுதல் அவசியம். அவசரத்தில் இருப்பவர்கள் கூட்டம் முடிந்து இரண்டு நாட்களில் திரும்பி செல்வதில் குற்றமேதுமில்லை. தங்கியிருக்க வாய்ப்பு பெற்றவர்கள் தங்கவும் செய்யலாம். அந்த ஹஜ் கூட்டத்தின் சமயம் நிறைவேறிய தீர்மானங்களைப் பற்றியும் அதன் நோக்கங்களைப் பற்றியும் நன்கறிந்துக்கொண்டு அவற்றின்படி செயல்படுவதேயாகும். ஆக உங்களின் ஒவ்வொரு செயலும் அல்லாஹ் நிர்ணயித்த விளைவுகளை நோக்கியே செல்லும் என்பதை தெரிந்துக்கொள்ளுங்கள்.

204 وَمِنَ ٱلنَّاسِ مَن يُعْجِبُكَ قَوْلُهُۥ فِى ٱلْحَيَوٰةِ ٱلدُّنْيَا وَيُشْهِدُ ٱللَّهَ عَلَىٰ مَا فِى قَلْبِهِۦ وَهُوَ أَلَدُّ ٱلْخِصَامِ ۝

*204. (நபியே!) மனிதர்களில் ஒருவ(கையின)ன் இருக்கின்றான்; உலக வாழ்க்கை பற்றிய அவன் பேச்சு உம்மை ஆச்சரியத்தில் ஆழ்த்தும்; தன் இருதயத்தில் உள்ளது பற்றி (சத்தியஞ் செய்து) அல்லாஹ்வையே சாட்சியாகக் கூறுவான்; (உண்மையில்) அ(த்தகைய)வன் தான் (உம்முடைய) கொடிய பகைவனுவான்.*

204. நினைவில் கொள்ளுங்கள்! மக்களுள் இரண்டு பிரிவினர்கள இருக்கிறார்கள். அதில் ஒன்று உலக வாழ்வின் மகத்துவத்தைப் பற்றியே பேசுபவர்கள். அவர்களின் பேச்சு உங்களை ஆச்சரியத்தில் ஆழ்த்திவிடும். அந்த அளவிற்கு அவர்களுடைய பேச்சுக்கள் இருக்கும். பேச்சிற்கு ஒரு முறை அல்லாஹ்வையே சாட்சியாக வைத்து பேசுவார்கள். ஆனால் அவர்கள் குரோத மனப்பான்மையுடன் இருப்பார்கள். அவர்கள்தாம் கடுமையான விதண்டாவாதி ஆவார்கள்.

205 وَإِذَا تَوَلَّىٰ سَعَىٰ فِى ٱلْأَرْضِ لِيُفْسِدَ فِيهَا وَيُهْلِكَ ٱلْحَرْثَ وَٱلنَّسْلَ ۗ وَٱللَّهُ لَا يُحِبُّ ٱلْفَسَادَ ۝

205. இப்படிப்பட்டவர்கள் கையில் ஆட்சியும் அதிகாரபொறுப்பும் கிடைத்துவிட்டால் நாட்டில் குழப்பங்களையும் ஏற்றத்தாழ்வுகளையும் ஏற்படுத்துவதிலேயே முழுமூச்சுடன் செயல்படுவார்கள். வாழ்வாதாரங்களின் பங்கீட்டு முறையை பாழ்படுத்துவார்கள். மனித வளத்தையும் அழித்துவிடுவார்கள். பொருளாதார சீரமைப்பிலோ மனித

*205. அவன் (உம்மை விட்டுத்) திரும்பியதும், பூமியில் கலகத்தை உண்டாக்கவே முயல்வான்; விளை நிலங்களையும், கால்நடைகளையும் அழிக்க முயல்வான்; கலகத்தை அல்லாஹ் விரும்புவதில்லை.*

மாண்புகளைப் பற்றியோ அவர்களுக்கு அக்கறை இருக்காது. எங்கு பார்த்தாலும் சுயநலம்தான் மிகைத்து நிற்கும். இப்படி ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்துபவர்களுக்கு அல்லாஹ்வின் சட்டம் அவர்களுக்கு கேடுகளையே விளைவிக்கும்.

206 وَإِذَا قِيلَ لَهُ اتَّقِ اللَّهَ أَخَذَتْهُ الْعِزَّةُ بِالْإِثْمِ فَحَسْبُهُ جَهَنَّمُ وَلَبِئْسَ الْمِهَادُ ○

*206. "அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்" என்று அவனிடம் சொல்லப்பட்டால், ஆணவம் அவனைப் பாவத்தின் பக்கமே இழுத்துச் செல்கிறது; அவனுக்கு நரகமே போதுமானது; நிச்சயமாக அ(ந் நரகமான)து தங்குமிடங்களில் மிக்கக் கேடானதாகும்.*

206. அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை ஏற்று அதன்படி செயல்படும்படி அறிவுறுத்தினால் அதிகார மமதை மற்றும் பொய்ப் புகழ்ச்சியின்பால் உள்ள ஈர்ப்பு அவர்களை அதை மறுக்கச் செய்கிறது. ஆனால் அவர்களுடைய தவறான செயல்கள் அவர்களை அழிவின் பக்கம் அழைத்துச் செல்வதை கவனிக்க தவறிவிடுகிறார்கள். இதனால் ஏற்படும் சீர்கேடுகளால் மனிதநேயமே அழிந்துவிடுமே. அதைத்தானே நரகம் என்று சொல்லப்படுகிறது. அப்படி ஒரு நிலை உயர்ந்த நிலையா?

207 وَمِنَ النَّاسِ مَنْ يَشْرِي نَفْسَهُ ابْتِغَاءَ مَرْضَاتِ اللَّهِ وَاللَّهُ رَءُوفٌ بِالْعِبَادِ ○

*207. இன்னும் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை நாடித் தன்னையே தியாகம் செய்பவனும் மனிதர்களில் இருக்கின்றான்;*

*அல்லாஹ் (இத்தகைய தன்) நல்லடியார்கள் மீது அளவற்ற அன்புடையவனாக இருக்கின்றான்.*

207. இரண்டாவது பிரிவினர் அல்லாஹ்வின் நாட்டங்கள் எதுவோ அவற்றின் பிரகாரமே செயல்படுவார்கள். அல்லாஹ்வின் செயல்திட்டங்களை நிறைவேற்றுவதில் தம்மை அர்ப்பணித்துக்கொள்வார்கள். உயிரே போவதாக இருந்தாலும் அதைப்பற்றி அவர்களுக்கு கவலை இருக்காது. இப்படிப்பட்டவர்களே அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை நாடி செயல்படுபவர்கள் ஆவார்கள். இவர்களுக்கே அனைத்து வசதிகளும் அருட்கொடைகளும் தாராளமாக கிடைக்கும்.

208 يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا ادْخُلُوا فِي السِّلْمِ كَافَّةً وَلَا تَتَّبِعُوا خُطُوَاتِ الشَّيْطَانِ إِنَّهُ لَكُمْ عَدُوٌّ مُبِينٌ ○

*208. நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் தீனுல் இஸ்லாத்தில் முழுமையாக நுழைந்து விடுங்கள்; தவிர ஷைத்தானுடைய அடிச் சுவடுகளை நீங்கள் பின்பற்றாதீர்கள்; நிச்சயமாக அவன் உங்களுக்கு பகிரங்கமான பகைவன் ஆவான்.*

208. சமூக நலத்தொண்டர்களே! நீங்களும் இதே பாணியை கையாளுங்கள். நீங்கள்தான் நாட்டில் முழுஅளவில் அமைதிகாக்கும் தூண்களாக நிற்பவர்கள். நீங்கள் அனைவரும் ஓரணியில் நின்று (ஜமாத்தாக) இந்த பணியில் முழுமையாக நுழைந்து விடுங்கள். என்றைக்கும் நிலைத்து நின்று தொடர்ந்து செயல்பட்டு வாருங்கள். மனோஇச்சை என்னும் ஷைத்தானை ஒருபோதும் பின்பற்றாதீர்கள். அவ்வாறு சுயநலமாக செயல்பட்டால் மனிதனின் உயர் இலட்சியமான மனித நேயத்தை கட்டிக்காக்க முடியாமல் போய்விடும். ஏனெனில் சுயநலம் என்னும் ஷைத்தான் மனிதநேயத்தின் பகிரங்கமான பகையாக நிற்கும்.

209 فَإِنْ زَلَلْتُمْ مِّنْ بَعْدِ مَا جَآءَتْكُمُ الْبَيِّنٰتُ فَاعْلَمُوْٓا اَنَّ اللّٰهَ عَزِيْزٌ حَكِيْمٌ ۝

*209.* தெளிவான அத்தாட்சிகள் உங்களிடம் வந்த பின்னரும் நீங்கள் சருகிவிடுவீர்களாளுல் — நிச்சயமாக அல்லாஹ் வலிமை மிக்கவன்; பேரறிவாளன் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

209. இப்படியாக தெளிவான அறிவுரைகள் வந்தபின்பும் நீங்கள் வழி தவறி சென்றுவிட்டால், உங்களை தட்டிக்கேட்க யாருமில்லை என்று எண்ணிவிடாதீர்கள். அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்கின்ற சட்டம் மிகவும் வலிமை மிக்கது. யாரையும் விட்டு வைக்காது. அதனடிப்படையில் ஏற்படும் பாதிப்பு உங்களுக்கே அன்றி அல்லாஹ்வின் அமைப்புமுறைக்கு (System) அல்ல. உலகில் வளர்ச்சியும் வீழ்ச்சியும் அவரவர் செயல்பாடுகள் அடிப்படையில் நிகழக்கூடியவை ஆகும். இப்படியாக அல்லாஹ்வின் செயல்திட்டங்கள் யாவும் பேராற்றல்கள் கொண்டவைகளாக விளங்குகின்றன.

210 هَلْ يَنْظُرُوْنَ اِلَّآ اَنْ يَّاْتِيَهُمُ اللّٰهُ فِيْ ظُلَلٍ مِّنَ الْغَمَامِ وَالْمَلٰٓئِكَةُ وَقُضِيَ الْاَمْرُ ۗ وَاِلَى اللّٰهِ تُرْجَعُ الْاُمُوْرُ ۝

*210.* அல்லாஹ்வும், (அவனுடைய) மலக்குகளும் மேக நிழல்களின் வழியாக (தண்டனையை)க் கொண்டு வந்து, (அவர்களுடைய) காரியத்தைத் தீர்த்து வைத்தல் வேண்டும் என்பதைத் தவிர (வேறு எதனையும் ஷைத்தானின் அடிச் சுவட்டைப் பின்பற்றுவோர்) எதிர் பார்க்கிறார்களா? (மறுமையில்) அவர்களுடைய சகல காரியங்களும் அல்லாஹ்விடமே (அவன் தீர்ப்புக்குக்) கொண்டு வரப்படும்.

210. ஆனால் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்க மறுப்பவர்கள் இன்னமும் அவர்களே ஏற்படுத்திக் கொண்ட மூட நம்பிக்கையிலேயே மூழ்கி கிடக்கின்றனர். அதாவது மேகக் கூட்டங்கள் பறந்தோடுவதுபோல அல்லாஹ்வும் வானவர்களும் பல்லக்கில் வந்து பார்த்து சமுதாயத்தின் நிலையைப்பற்றி முடிவு எடுப்பார்கள் என்ற நினைப்பில் இருந்து வருகிறார்கள். ஒரு சமுதாயத்தின் அழிவும் நாசமும் இப்படியாக வந்தடைவதில்லை. மாறாக ஒவ்வொரு சமுதாயமும் செய்துவரும் செயல்களுக்கேற்ப விளைவுகள் ஏற்படும்படி சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. அதன்படி அந்த விளைவுகள் வந்தடைந்தே தீரும். அதிலிருந்து யாரும் தப்ப முடியாது. இதன் அடிப்படையில்தான் சமுதாயத்தின் அழிவு ஏற்படுகின்றன. இந்த உண்மையை அவர்களுக்கு விளக்கிவிடுங்கள்.

211 سَلْ بَنِيْٓ اِسْرَآءِيْلَ كَمْ اٰتَيْنٰهُمْ مِّنْ اٰيَةٍ ۢ بَيِّنَةٍ ۗ وَمَنْ يُّبَدِّلْ نِعْمَةَ اللّٰهِ مِنْ بَعْدِ مَا جَآءَتْهُ فَاِنَّ اللّٰهَ شَدِيْدُ الْعِقَابِ ۝

**ருகூஉ 26**

*211.* (நபியே!) இஸ்ராயீலின் சந்ததிகளிடம் (யஹூதிகளிடம்) நீர் கேளும்: "நாம் எத்தனை தெளிவான அத்தாட்சிகளை அவர்களிடம் அனுப்பினோம்" என்று; அல்லாஹ்வின் அருள் கொடைகள் தம்மிடம் வந்த பின்னர், யார் அதை மாற்றுகிறார்களோ, (அத்தகையோருக்கு) தண்டனை கொடுப்பதில் நிச்சயமாக அல்லாஹ் கடுமையானவன்.

211. இதற்கு தக்க ஆதாரங்கள் வேண்டுமா? உங்களோடு வாழ்ந்து வரும் பனிஇஸ்ராயில் சமூகத்தாரையே கேட்டு தெரிந்துக் கொள்ளுங்கள். சமுதாயங்களின் வளர்ச்சி மற்றும் அழிவுகள் பற்றிய சட்டதிட்டங்கள் அவர்களுக்கு தெளிவாக கிடைத்திருந்தன. எதுவரையில் அல்லாஹ் நிர்ணயித்த வழிகாட்டுதலைகளின்படி செயல்பட்டு வந்தார்களோ அதுவரையில் அவர்கள் சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்தார்கள். எப்போது அந்த வழிகாட்டுதலை காலப்போக்கில் மாற்றியமைத்துக் கொண்டார்களோ அதன்பின் அவர்களுக்கு கிடைத்திருந்த அருட்கொடைகளும் குறைந்து கொஞ்சம் கொஞ்சமாக அழிவும் பீடித்துக்கொண்டது. இவையாவும் அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற விதிமுறைகளின் படி நிகழ்ந்து வந்தன. அதன்படி ஏற்படும் அழிவு,

மிகவும் கடுமையானவை என்பதும் வேதனை மிக்கது என்பதும் அவர்களுக்கு தெரியும்.

212 زُيِّنَ لِلَّذِينَ كَفَرُوا الْحَيَوٰةُ الدُّنْيَا وَيَسْخَرُونَ مِنَ الَّذِينَ ءَامَنُوا ۘ وَالَّذِينَ اتَّقَوْا فَوْقَهُمْ يَوْمَ الْقِيَٰمَةِ ۗ وَاللَّهُ يَرْزُقُ مَن يَشَاءُ بِغَيْرِ حِسَابٍ ○

*212. நிராகரிப்போருக்கு (காஃபிர்களுக்கு) இவ்வுலக வாழ்க்கை அழகாக்கப்பட்டுள்ளது; இதனுல் அவர்கள் ஈமான் (நம்பிக்கை) கொண்டோரை ஏளனம் செய்கிறுர்கள்; ஆனுல் பயபக்தியுடையோர் மறுமையில் அவர்களை விட உயர்ந்த நிலையில் இருப்பார்கள்; இன்னும் அல்லாஹ் தான் நாடுவோருக்குக் கணக்கின்றிக் கொடுப்பான்.*

212. இதற்கு காரணம் என்ன? மனித நேயம், மனித மாண்புகள், பொது நலம் என்ற உயர் இலட்சியங்களுடன் மனிதனை வாழச் சொல்வது அல்லாஹ்வின் அறிவுரை. அவற்றை விட்டுவிட்டால் மனிதன் சுயநலத்துடன் தனிப்பட்ட முறையில் சொகுசான வாழ்வின் பக்கம் சாய்ந்து விடுகின்றான். எனவே அவன்முன் இலட்சியமோ வருங்காலத்தைப் பற்றிய சிந்தனையோ இருப்பதில்லை. ஆக அவன் செய்து வரும் செயல்கள் எல்லாம் மிகச் சிறப்பானவை என்றே நினைத்துக் கொள்கின்றான். இப்படியாக அவனுடைய செயல்கள் அவனுக்கு அழகாக தெரிகின்றன. இதனால் மீண்டும் இலட்சிய வாழ்வின்பால் அழைப்பு விடுத்தால் அது அவனுக்கு கேலிகூத்தாக தெரிகிறது. இப்படியாகத்தான் அவர்கள் இந்த மார்க்கத்தை ஏளனம் செய்துவருகிறார்கள். அல்லாஹ்வின் செயல் திட்டத்தின்பால் அழைப்பவர்கள் தற்சமயம் மிகவும் பலஹீனமாக இருக்கலாம். ஆனால் காலப்போக்கில் அவர்களுடைய நன் நடத்தையினால் அவர்களுக்கு உயர்வும் கண்ணியமும் கிடைத்துவிடும். மேலும் அல்லாஹ்வின் வழிகாட்டுதலின்படி ஆட்சியமைப்பு நடைபெறும்போது அனைத்து தரப்பு மக்களும் சுயநலமின்றி அயராது உழைத்து சுவன பூமியாக மாறும்போது எல்லா விதமான வசதி வாய்ப்புகளும் பெருகிவிடும்.

213 كَانَ النَّاسُ أُمَّةً وَٰحِدَةً فَبَعَثَ اللَّهُ النَّبِيِّـۧنَ مُبَشِّرِينَ وَمُنذِرِينَ وَأَنزَلَ مَعَهُمُ الْكِتَٰبَ بِالْحَقِّ لِيَحْكُمَ بَيْنَ النَّاسِ فِيمَا اخْتَلَفُوا فِيهِ ۚ وَمَا اخْتَلَفَ فِيهِ إِلَّا الَّذِينَ أُوتُوهُ مِن بَعْدِ مَا جَاءَتْهُمُ الْبَيِّنَٰتُ بَغْيًا بَيْنَهُمْ ۖ فَهَدَى اللَّهُ الَّذِينَ ءَامَنُوا لِمَا اخْتَلَفُوا فِيهِ مِنَ الْحَقِّ بِإِذْنِهِ ۗ وَاللَّهُ يَهْدِي مَن يَشَاءُ إِلَىٰ صِرَٰطٍ مُّسْتَقِيمٍ ○

*213. (ஆரம்பத்தில்) மனிதர்கள் ஒரே கூட்டத்தினராகவே இருந்தனர்; அல்லாஹ் (நல்லோருக்கு) நன்மாராயங் கூறுவோராக வும், (தீயோருக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்வோராகவும் நபிமார்களை அனுப்பி வைத் தான்; அத்துடன் மனிதர்களிடையே ஏற் படும் கருத்து வேறுபாடுகளைத் தீர்த்து வைப்பதற்காக அவர்களுடன் உண்மை யுடைய வேதத்தையும் இறக்கி வைத்தான்;*

213. இந்த உயர்வும் தாராள பொருளாதார வசதிகளும் பனிஇஸ்ராயீல் சமூகத்தவர்களுக்கு மட்டும் கிடைத்த ஒன்றல்ல. மாறாக காலம் காலமாக எல்லா தரப்பு மக்களுக்கும் கிடைத்துக்கொண்டே வந்தன. ஆதிகாலத்தில் கூட்டு வாழ்க்கை முறை என்று இருந்ததில்லை. ஏனெனில் வாழ்வாதாரங்கள் மிகவும் தாராளமாகவும் தேவைகள் மிகக்குறைவாகவும் இருந்தன. எனவே அக்காலகத்தில் வாழ்ந்த மனிதர்கிளிடையே பகைமையோ போட்டி பொறாமையோ இருந்ததில்லை. காலம் செல்லச் செல்ல மக்கள் தொகை பெருகிடவே மனிதனுடைய தேவைகளும் அதிகமாகின. எனவே கூட்டு வாழ்க்கைமுறை ஆரம்பமானது. கூடவே பிரிவினையும் பகைமையும் வளர்ந்தன (2:36) (10:19). இந்த பிரிவினையையும் பகைமை உணர்வையும் போக்க இறைத்தூதர்கள் வந்தார்கள். அவர்கள் இறை நெறிமுறைகளை எடுத்துரைத்து அவற்றை பின்பற்றுவதால் ஏற்படும் நன்மைப் பற்றியும் அதை நிராகரித்து வாழ்வதால் ஏற்படக்கூடிய பயங்கர விளைவுகளைப் பற்றியும் எடுத்துரைத்து வந்தனர். இப்படியாக ஒவ்வொரு இறைத் தூதரும் வேற்றுமைகளை போக்கி சமுதாயத்தில் ஒற்றுமையை ஏற்படுத்தவே வந்தனர். சமூகத்தினரிடையே தெளிவான வாழ்க்கை நெறிமுறைகள்

எனினும் அவ்வேதம் கொடுக்கப் பெற்றவர்கள், தெளிவான ஆதாரங்கள் வந்த பின்னரும், தம்மிடையே உண்டான பொறாமை காரணமாக மாறுபட்டார்கள்; ஆயினும் அல்லாஹ் அவர்கள் மாறுபட்டுப் புறக்கணித்துவிட்ட உண்மையின் பக்கம் செல்லுமாறு ஈமான் கொண்டோருக்குத் தன் அருளினால் நேர் வழி காட்டினான்; இவ்வாறே, அல்லாஹ் தான் நாடியோரை நேர்வழியில் செலுத்துகின்றான்.

வந்திருந்த போதிலும் தூதருடைய மறைவிற்குப் பின் காலப் போக்கில் அந்த மக்களிடையே ஏற்பட்ட போட்டி பொறாமையின் காரணமாக பிளவும் பிரிவினையும் உருவானது. அதே அடிப்படையில் இப்போதும் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்க மறுக்கிறார்கள். (16 : 92) & (57 : 20) ஆனால் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்றுக் கொள்பவர்களுக்கு அல்லாஹ் நிர்ணயித்துள்ள விதிமுறைப்படி இந்த வேற்றுமையும் பகைமையும் நீங்கி சீரான சமுதாயமாக உருவாக வழி கிடைத்து விடுகிறது. இப்படியாக அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்க நாடுவோருக்கு நேர்வழி கிடைத்துவிடுகிறது.

214 أَمْ حَسِبْتُمْ أَن تَدْخُلُوا الْجَنَّةَ وَلَمَّا يَأْتِكُم مَّثَلُ الَّذِينَ خَلَوْا مِن قَبْلِكُم مَّسَّتْهُمُ الْبَأْسَاءُ وَالضَّرَّاءُ وَزُلْزِلُوا حَتَّىٰ يَقُولَ الرَّسُولُ وَالَّذِينَ آمَنُوا مَعَهُ مَتَىٰ نَصْرُ اللَّهِ أَلَا إِنَّ نَصْرَ اللَّهِ قَرِيبٌ

*214.* உங்களுக்கு முன்னே சென்று போனவர்களுக்கு ஏற்பட்ட சோதனைகள் உங்களுக்கு வராமலேயே சுவர்க்கத்தை அடைந்து விடலாம் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? அவர்களை (வறுமை, பிணி போன்ற) கஷ்டங்களும் துன்பங்களும் பீடித்தன; "அல்லாஹ்வின் உதவி எப்பொழுது வரும்" என்று தூதரும் அவரோடு ஈமான் கொண்டவர்களும் கூறும் அளவுக்கு அவர்கள் அலைக்கழிக்கப்பட்டார்கள்; "நிச்சயமாக அல்லாஹ்வின் உதவி சமீபத்திலேயே இருக்கிறது" (என்று நாம் ஆறுதல் கூறினோம்.)

214. இறை வழிகாட்டுதல்கள் மக்களிடையே ஒற்றுமையும் தோழமை உணர்வையும் ஏற்படுத்திட நாடுகின்றன. ஆனால் இந்த வழிமுறை சுயநலவாதிகளுக்கு எதிராக அமைகிறது. எனவே இந்த மார்க்கம் வளராதவாறு அவர்கள் எதிர்க்கின்றனர். அதனால் ஒரு நாட்டை சுவர்க்க பூமியாக மாற்றிட பல இன்னல்களையும் சிரமங்களையும் சந்திக்கவேண்டி வருகிறது. எனவே சமூக நலத் தொண்டர்களே! அந்த சுவனத்தை எந்த சிரமமுமின்றி எளிதாக ஈட்டிக் கொள்ளமுடியும் என்று எண்ணிக் கொண்டீர்களா? அவ்வாறு ஒருபோதும் முடியாது. உங்களுக்கு முன் இதற்காக பாடுபட்டவர்கள் எவ்வாறு தம் உயிரை பணயம் வைத்து பசி பட்டினி போன்ற சிரமங்களையும் தாங்கிக்கொண்டு கொஞ்சம் கொஞ்சமாக தம் இலக்கை அடைந்தார்களோ அதேபோல் நீங்களும் பாடுபட வேண்டிவரும். இந்த பொது நலத்திட்டத்தில் அயராது உழைத்தும் பல சிரமங்களை தாங்கி வந்தபோதிலும் ஒருகட்டத்தில் சமூக சீர்த்திருத்தவாதியான இறைத்தூதரும் அவருடைய தோழர்களும் எப்போது விமோசனம் பிறக்கும் என்று அல்லாஹ்விடம் முறையிடும் அளவிற்கு அந்த இன்னல்கள் உச்சநிலையை அடைந்தன. (3:142), (9:16), (29:2) & (33 :10) இந்த அளவிற்கு மனஉறுதியுடன் உழைத்த பின்தான் அந்த வெற்றி அவர்களுக்கு கிடைத்தது. மறுபுறத்திலிருந்து அல்லாஹ்வின் உதவியும் விரைந்தது.

وَمَنْ يَّرْتَدِدْ مِنْكُمْ عَنْ دِيْنِهٖ فَيَمُتْ وَهُوَ كَافِرٌ فَاُولٰٓئِكَ حَبِطَتْ اَعْمَالُهُمْ فِى الدُّنْيَا وَالْاٰخِرَةِ ۚ وَ اُولٰٓئِكَ اَصْحٰبُ النَّارِ ۚ هُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○

## ருகூஃ 27

*217. (நபியே!) புனிதமான (விலக்கப் பட்ட) மாதங்களில் போர் புரிவது பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள்; நீர் கூறும்: "அக்காலத்தில் போர் செய்வது பெருங் குற்ற மாகும்; ஆனால், அல்லாஹ்வின் பாதையை விட்டுத் தடுப்பதும், அவனை நிராகரிப்பதும், மஸ்ஜிதுல் ஹராமுக்குள் (வரவிடாது) தடுப் பதும், அங்குள்ளவர்களை அதிலிருந்து வெளி யேற்றுவதும் (- ஆகியவையெல்லாம்) அதைவிடப் பெருங் குற்றங்களாகும்; ஃபித்னா (குழப்பம்) செய்வது, கொலையைவிடக் கொடியது; அவர் களுக்கு இயன்றால் உங்கள் மார்க்கத்திலிருந்து உங்களைத் திருப்பிவிடும் வரை உங்களுடன் போர் செய்வதை நிறுத்த மாட்டார்கள்; உங்களில் எவரேனும் ஒருவர் தம்முடைய மார்க்கத்திலிருந்து திரும்பி, காஃபிராக (நிராகரிப்பவராக) இறந்துவிட்டால் அவர் களின் நற்கருமங்கள் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் (பலன் தராமல்) அழிந்துவிடும்; இன்னும் அவர்கள் நரகவாசிகளாக அந் நெருப்பில் என்றென்றும் தங்கிவிடுவார்கள்."*

அவற்றிற்கு எதிராக செயல்படுவது, தடுக்கப்பட்ட இடமான 'மஸ்ஜிதுல் ஹராம்' என்னும் அமைதிகாக்கும் இடத்தில் அத்துமீறி சண்டையிடுவது, மேலும் அந்த இடத்தில் ஏற்கனவே தங்கியிருப்பவர்களை வெளியேற்றுவது ஆகிய செயல்கள் பெருங்குற்றங்களாகும். இவ்வாறாக நாட்டில் குழப்பங்களை ஏற்படுத்துவது கொலைக் குற்றங்களைவிட மிகக்கொடூரமான செயல்களாகும். இவற்றால் பெரியஅளவில் பாதிப்புகள் ஏற்படுகின்றன.

இப்படியாக எதிர் தரப்பினர் பலவகையில் குழப்பங்களை ஏற்படுத்தி உங்கள் அனைவரையும் மார்க்கத்தை விட்டுவிடவே தங்களால் இயன்றவரையில் முயலுவார்கள். உங்களை எதிர்த்து போரிடுவதிலிருந்தும் ஓயமாட்டார்கள். இப்படிப் பட்டவர்களுக்கு எதிராக போரிடுவது மூ∴மின்களான உங்கள்மீது முக்கிய கடமையாகும். எவரேனும் எதிர்தரப்பினரின் தாக்குதலுக்கு பயந்து திரும்பிவிட்டால் அவர் நிராகரிப்போரில் ஒருவராக கருதப்படுவார். அப்படி வாழ்ந்து மரணிப்பவர்களின் நிகழ்கால வாழ்வும் வருங்கால வாழ்வும் பாழாகிவிடும். இப்படிப்பட்டவர்களின் உழைப்புகள் வீணாகிப் போகும். (5:53 & 54) இவர்களை காப்பாற்றுவோர் எவரும் இருக்கமாட்டார்கள்.

218 اِنَّ الَّذِيْنَ اٰمَنُوْا وَالَّذِيْنَ هَاجَرُوْا وَجٰهَدُوْا فِىْ سَبِيْلِ اللّٰهِ ۙ اُولٰٓئِكَ يَرْجُوْنَ رَحْمَتَ اللّٰهِ ؕ وَاللّٰهُ غَفُوْرٌ رَّحِيْمٌ ○

*218. நம்பிக்கை கொண்டோரும், (காஃபிர் களின் கொடுமைகளால் நாட்டை விட்டு) துறந்தவர்களும், அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் செய்தோரும் அல்லாஹ்வின் (கருணையை) - ரஹ்மத்தை - நிச்சயமாக எதிர்பார்க்கிறார்கள்; மேலும், அல்லாஹ் மிக வும் மன்னிப்போனாகவும், பேரன்புடையோ னாகவும் இருக்கின்றான்.*

218. இதற்கு மாறாக அல்லாஹ்வின் அமைப்பிற்கு ஆதரவாக செயல்படுவர்கள் எத்தனை இன்னல்கள் வந்தாலும், வீட்டையும் நாட்டையும் விட்டுவிட நேர்ந்தாலும் அல்லாஹ் காட்டிய பாதையில் முன்னேறிய வண்ணம் இருப்பார்கள். இதற்காக தன் உயிரையும் பணயம் வைத்து அயராது பாடுபடுவார்கள். இத்தகையவர்களே அல்லாஹ்வின் அருளைப் பெறுபவராவார்கள். மேலும் அல்லாஹ்வின் இரக்க குணநலம் இவர்களின் சிறு பிழைகளால் ஏற்படும் தீய விளைவுகளிலிருந்து பாதுகாப்பு அளிக்கும் (53:32) அவர்களுடைய வளர்ச்சிக்கும் துணை நிற்கும்.

215 يَسْـَٔلُونَكَ مَاذَا يُنفِقُونَ ۖ قُلْ مَآ أَنفَقْتُم مِّنْ خَيْرٍ فَلِلْوَٰلِدَيْنِ وَٱلْأَقْرَبِينَ وَٱلْيَتَٰمَىٰ وَٱلْمَسَٰكِينِ وَٱبْنِ ٱلسَّبِيلِ ۗ وَمَا تَفْعَلُوا۟ مِنْ خَيْرٍ فَإِنَّ ٱللَّهَ بِهِۦ عَلِيمٌ ۝

*215. அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள்: "எதை, (யாருக்குச்) செலவு செய்யவேண்டும்" என்று; நீர் கூறும்: "(நன்மையை நாடி) நல்ல பொருள் எதனை நீங்கள் செலவு செய்தாலும், அதை தாய், தந்தையருக்கும், நெருங்கிய உறவினர்களுக்கும், அநாதைகளுக்கும், மிஸ்கீன்(ஏழை)களுக்கும், வழிப் போக்கர்களுக்கும் (கொடுங்கள்); மேலும் நீங்கள் நன்மையான எதனைச் செய்தாலும் நிச்சயமாக அல்லாஹ் அதை அறிந்து (தக்க கூலி தருபவனாக) இருக்கிறான்."*

215. இதற்காக முதன் முதலில் உங்கள் செல்வங்களை அர்ப்பணிக்க தயாராக வேண்டும். இது சம்பந்தமாக எவ்வளவு பணம் தேவைப்படும் என்று உம்மிடம் கேட்கிறார்கள். நாம் எவ்வளவு செலவிட வேண்டி வரும் என்றும் கேட்கிறார்கள். சமுதாய வளர்ச்சி மற்றும் நல்லிணக்கம் என்ற அடிப்படையில் யார் பின்தங்கிய நிலையில் இருக்கிறார்கள் என்பதை ஆராய்ந்துப் பாருங்கள். தேவையுள்ளவர்கள் யார் என்பதை கவனியுங்கள். அந்த வரிசையில் தம் வீட்டிலுள்ள தாய் தந்தையர், தம் வீட்டை சுற்றி வாழ்பவர்கள், உற்றார் உறவினர்கள், சமுதாயத்தில் ஆதரவற்ற நிலையில் வாழ்பவர்கள், சம்பாதிக்க இயலாதவர்கள், இறைச் செய்திகளை எடுத்துச்செல்ல பயணம் மேற்கொள்பவர்கள் என யார் யார் தேவையுள்ளவர்கள், அவர்களுக்கு எவ்வளவு தேவைப்படும் என்பதை பட்டியலிட்டு தம் செல்வத்திலிருந்து தம்தேவைக்கு போக மீதமுள்ளதை (2:219) செலவிட முன்வரவேண்டும்.

216 كُتِبَ عَلَيْكُمُ ٱلْقِتَالُ وَهُوَ كُرْهٌ لَّكُمْ ۖ وَعَسَىٰٓ أَن تَكْرَهُوا۟ شَيْـًٔا وَهُوَ خَيْرٌ لَّكُمْ ۖ وَعَسَىٰٓ أَن تُحِبُّوا۟ شَيْـًٔا وَهُوَ شَرٌّ لَّكُمْ ۗ وَٱللَّهُ يَعْلَمُ وَأَنتُمْ لَا تَعْلَمُونَ ۝

*216. போர் செய்தல் - அது உங்களுக்கு வெறுப்பாக இருப்பினும் - (உங்கள் நலன் கருதி) உங்கள் மீது விதிக்கப்பட்டுள்ளது; நீங்கள் ஒரு பொருளை வெறுக்கலாம்; ஆனால் அது உங்களுக்கு நன்மை பயப்பதாக இருக்கும்; ஒரு பொருளை நீங்கள் விரும்பலாம், ஆனால் அது உங்களுக்குத் தீமை பயப்பதாக இருக்கும். (இவற்றையெல்லாம்) அல்லாஹ் அறிவான், நீங்கள் அறியமாட்டீர்கள்.*

216. அதைத் தொடர்ந்து நாட்டின் பாதுகாப்பு என்ற கேள்வி எழுகிறது. இதற்காக தம் உயிர்களை பணயம் வைத்து எதிர் தரப்பினரை சமாளிக்க வேண்டியுள்ளது. இது நாள்வரையில் சொத்து செல்வங்களை குவிப்பதிலேயே முழுகவனமும் செலுத்தி வந்த நீங்கள், மனிதநேயத்தை காப்பாற்ற தம் உயிர்களை தியாகம் செய்ய மனம் ஏற்காது. ஏனெனில் இதில் உலக ஆதாயம் எதுவும் இல்லையே. அநியாயமாக உயிர் பலிகள்தானே ஏற்படுகின்றன என்ற எண்ணங்கள் தோன்றலாம். இது விஷயமாக தனிப்பட்ட முறையில் ஏற்படுகின்ற இலாப நஷ்டத்தை கணக்கில் வைத்து யோசிக்காதீர்கள். ஏனெனில் தனிநபர் சிந்தனை ஒரு விஷயத்தைப் பற்றி வெறுக்கக் கூடியதாக இருக்கலாம். ஆனால் ஒட்டுமொத்த சமுதாயத்தை முன்வைத்து பார்க்கும்போது அது சரியானவையே என்பது தெரியவரும். அதே போல சில காரியங்கள் தனிப்பட்ட முறையில் நன்மை பயப்பதாக இருக்கலாம். ஆனால் ஒட்டுமொத்த சமுதாயத்தின் நிகழ் காலம் மற்றும் வருங்கால நலனை முன்வைத்து பார்க்கும்போது அந்த செயல்கள் பாதிப்புகளை ஏற்படுத்தக் கூடியவைகளாக இருக்கும். எனவே அனைத்து விஷயங்களைப் பற்றியும் தெளிவான ஞானமிக்க அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களே மிகச் சரியானவை ஆகும். எனவே தற்சமயம் உங்களிடமுள்ள சிந்தனை இந்த உண்மைகளை அறியாது.

217 يَسْـَٔلُونَكَ عَنِ ٱلشَّهْرِ ٱلْحَرَامِ قِتَالٍ فِيهِ ۖ قُلْ قِتَالٌ فِيهِ كَبِيرٌ ۖ وَصَدٌّ عَن سَبِيلِ ٱللَّهِ وَكُفْرٌۢ بِهِۦ وَٱلْمَسْجِدِ ٱلْحَرَامِ وَإِخْرَاجُ أَهْلِهِۦ مِنْهُ أَكْبَرُ عِندَ ٱللَّهِ ۚ وَٱلْفِتْنَةُ أَكْبَرُ مِنَ ٱلْقَتْلِ ۗ وَلَا يَزَالُونَ يُقَٰتِلُونَكُمْ حَتَّىٰ يَرُدُّوكُمْ عَن دِينِكُمْ إِنِ ٱسْتَطَٰعُوا۟ ۚ

217. ஆனால் போரிடுவதோ அல்லது போர் நிறுத்தமோ அல்லாஹ்வின் வரையரைகளை கட்டிகாப்பது மிகவும் இன்றிமையாததாகும். குறிப்பாக போர் நிறுத்த மாதங்களில் போரிடுவது மிகப்பெரிய குற்றமாகும். அதே சமயம் அல்லாஹ்வின் செயல்திட்டங்களில் குறுக்கிடுவது, மேலும் அவற்றை ஏற்க மறுத்து

219 يَسْـَٔلُونَكَ عَنِ الْخَمْرِ وَالْمَيْسِرِ ۖ
قُلْ فِيهِمَا إِثْمٌ كَبِيرٌ وَمَنَافِعُ
لِلنَّاسِ وَإِثْمُهُمَا أَكْبَرُ مِن
نَّفْعِهِمَا ۗ وَيَسْـَٔلُونَكَ مَاذَا يُنفِقُونَ ۖ
قُلِ الْعَفْوَ ۗ كَذَٰلِكَ يُبَيِّنُ اللَّهُ لَكُمُ
الْآيَاتِ لَعَلَّكُمْ تَتَفَكَّرُونَ ۙ

*219. (நபியே!) மதுபானத்தையும், சூதாட்டத்தையும் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர்; நீர் கூறும்: "அவ்விரண்டிலும் பெரும் பாவம் இருக்கிறது; மனிதர்களுக்கு (அவற்றில் சில) பலன்களுமுண்டு; ஆனால் அவ்விரண்டிலும் உள்ள பாவம் அவ்விரண்டிலும் உள்ள பலனைவிடப் பெரிது;" (நபியே! "தர்மத்திற்காக எவ்வளவில்) எதைச் செலவு செய்ய வேண்டும்" என்று அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர்: "(உங்கள் தேவைக்கு வேண்டியது போக) மீதமானவற்றைச் செலவு செய்யுங்கள்" என்று கூறுவீராக; நீங்கள் சிந்தித்து உணரும் பொருட்டு அல்லாஹ் (தன்) வசனங்களை(யும், அத்தாட்சிகளையும்) இவ்வாறு விவரிக்கின்றான்.*

219. அல்லாஹ்வின் ஆட்சியமைப்பு வளர்ச்சியில் தடைகற்களாக நிற்பவை எவை என்பதை இந்த இடத்தில் நீங்கள் நன்றாக புரிந்துக் கொள்ளவேண்டும். இது விஷயமாக எவையெல்லாம் மனிதனுடைய சிந்தனை, அறிவு மற்றும் செயல்திறனை மங்கச் செய்கின்றனவோ அவையெல்லாம் இந்த ஆட்சியின் பார்வையில் குறிக்கீடுகளாக கருதப்படும். குறிப்பாக போதைப் பொருட்கள் மற்றும் உழைப்பின்றி செல்வங்களை எளிதாக பெருக்கிக் கொள்ளக்கூடிய செயல்களான சூதாட்டமும் அதற்கு ஒப்பான பதுக்கல் (Hoarding and Speculation) மூலம் கொள்ளை இலாபம் அடைய திட்டமிடுதல் ஆகியவை அடங்கும். இதிலெலாம் தனிப்பட்ட முறையில் இலாபமும் சுகமும் கிடைத்திடலாம். இருப்பினும் இவையெல்லாம் பொதுவாக மனிதனை உழைப்பதிலிருந்து தடுத்து சோம்பேறிகளாக ஆக்கிவிடுகின்றன. அதனால் மனித வளர்ச்சியின் வேகத்தில் பின்னடைவு ஏற்படும்.

எனவே இது போன்ற காரியங்கள் செய்வதை விட்டுவிட்டு சமூக வளர்ச்சிக்காக தம்மை அர்பணித்துக்கொள்ள முன்வாருங்கள். ஆக உங்களை சுற்றி இருப்பவர்களில் யார் யார் பின்தங்கி இருக்கிறார்கள் என்பதை ஆய்ந்து அறிந்து அவர்களுடைய வளர்ச்சிக்காக பாடுபடுங்கள். இதற்காக, தான் உழைத்து சம்பாதித்த செல்வங்களிலிருந்து தம் தேவைக்கு போக மிகுதியானவற்றை செலவிடுங்கள். இவற்றை நீங்கள் நன்றாக புறிந்துக்கொண்டு செயல்படவேண்டும் என்பதற்காக ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் தெளிவாக்கப்படுகின்றன.

220 فِي الدُّنْيَا وَالْآخِرَةِ ۗ وَيَسْـَٔلُونَكَ
عَنِ الْيَتَامَىٰ ۖ قُلْ إِصْلَاحٌ لَّهُمْ
خَيْرٌ ۖ وَإِن تُخَالِطُوهُمْ فَإِخْوَانُكُمْ ۚ
وَاللَّهُ يَعْلَمُ الْمُفْسِدَ مِنَ الْمُصْلِحِ ۚ
وَلَوْ شَاءَ اللَّهُ لَأَعْنَتَكُمْ ۚ إِنَّ اللَّهَ
عَزِيزٌ حَكِيمٌ

*220. (மேல்கூறிய இரண்டும்) இவ்வுலகிலும், மறுமையிலும் (என்ன பலன்களைத் தரும் என்பதைப் பற்றி நீங்கள் தெளிவு பெறுவதற்காக தன் வசனங்களை இவ்வாறு விளக்குகிறான்.) "அநாதைகளைப் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர்;" நீர் கூறுவீராக: "அவர்களுடைய காரியங்களைச் சீராக்கி வைத்தல் மிகவும் நல்லது; நீங்கள் அவர்களுடன் கலந்து வசிக்க நேரிட்டால் அவர்கள் உங்கள் சகோதரர்களேயாவார்கள்; இன்னும் அல்லாஹ் குழப்பம் உண்டாக்குபவனைச்*

220. இப்படியாக உங்கள் நன் நடத்தையைக் கொண்டு ஆக்கப்பூர்வமாக செயல்பட்டு வந்தால் உங்கள் நிகழ்கால வாழ்வும் வருங்கால வாழக்வும் சிறப்பாக இருக்கும். மேலும் தேவையுள்ளவர்களின் தேவைகளை நிறைவேற்ற துணை நிற்பதே இந்த ஆட்சியமைப்பின் முக்கிய குறிக்கோளாகும். இதனடிப்படையில் சமுதாயத்தில் ஆதரவற்ற நிலையில் இருந்து தவிப்பவர்கள் முதல் வரிசையில் வருகிறார்கள். தாய் தந்தையர்களை இழந்து நிற்கும் பிள்ளைகள் இதில் அடங்குவர். அவர்களுக்கு உதவி புரிவது மிகமிக நன்மையான காரியமாகும். நீங்கள் அவர்களோடு சேர்ந்து வாழ்ந்து வந்தால் அவர்களை உடன்பிறந்த சகோதர சகோதரிகளாக கருதி பாசப் பிணைப்புடன் நடந்துக் கொள்ளுங்கள். உண்மையிலேயே அவர்களுடைய குறைகளை நீக்கும் எண்ணங் கொண்டவர்களாக இருக்கிறீர்களா அல்லது அவர்களை வெறுத்து ஒதுக்கி சிக்கல்களை உண்டாக்க எண்ணுகிறீர்களா என்ற விஷயம் அல்லாஹ்விற்கு நன்றாகத் தெரியும். உங்கள் அனைவரையும் சிரமங்களுக்குள் ஆக்கவேண்டும் என்பது அல்லாஹ்வின் நாட்டமாக இருந்திருந்தால் இப்படிப்பட்ட நேர்வழிகள் உங்களுக்கு கிடைக்காமல் போயிருக்கும்.

சரி செய்பவனின்றும் பிரித்தறிகிறான்; அல்லாஹ் நாடியிருந்தால் உங்களைக் கஷ்டத்திற்குள்ளாக்கியிருப்பான்; நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன்."

அல்லாஹ்வின் நாட்டம் அதுவல்ல. உங்கள் காரியங்களை எளிதாக்குவதே அல்லாஹ்வின் நாட்டமாகும். இதனால் உங்கள் விருப்பம்போல் நடந்துக் கொள்ளலாம் என்று எண்ணிவிடாதீர்கள். உங்களின் ஒவ்வொரு செயலும் அல்லாஹ்வின் கண்காணிப்பில் உள்ளது என்பதை மறவாதீர்.

221 وَلَا تَنكِحُوا الْمُشْرِكَاتِ حَتَّىٰ يُؤْمِنَّ ۚ وَلَأَمَةٌ مُّؤْمِنَةٌ خَيْرٌ مِّن مُّشْرِكَةٍ وَلَوْ أَعْجَبَتْكُمْ ۗ وَلَا تُنكِحُوا الْمُشْرِكِينَ حَتَّىٰ يُؤْمِنُوا ۚ وَلَعَبْدٌ مُّؤْمِنٌ خَيْرٌ مِّن مُّشْرِكٍ وَلَوْ أَعْجَبَكُمْ ۗ أُولَٰئِكَ يَدْعُونَ إِلَى النَّارِ ۖ وَاللَّهُ يَدْعُو إِلَى الْجَنَّةِ وَالْمَغْفِرَةِ بِإِذْنِهِ ۖ وَيُبَيِّنُ آيَاتِهِ لِلنَّاسِ لَعَلَّهُمْ يَتَذَكَّرُونَ

221. (அல்லாஹ்வுக்கு) இணைவைக்கும் பெண்களை-அவர்கள் நம்பிக்கை கொள்ளும் வரை-நீங்கள் திருமணம் செய்து கொள்ளாதீர்கள்; இணை வைக்கும் ஒரு பெண், உங்களைக் கவரக்கூடியவளாக இருந்தபோதிலும், அவளைவிட முஃமினான ஓர் அடிமைப் பெண் நிச்சயமாக மேலானவள் ஆவாள்; அவ்வாறே இணைவைக்கும் ஆண்களுக்கு-அவர்கள் நம்பிக்கை கொள்ளும் வரை (முஃமினான பெண்களுடன்) நீங்கள் திருமணம் செய்து வைக்காதீர்கள்; இணை வைக்கும் ஆண் உங்களுக்குக் கவர்ச்சியூட்டுபவனாக இருந்த போதிலும், ஒரு முஃமினான அடிமை அவனைவிட மேலானவன்; (நிராகரிப்போராகிய) இவர்கள், உங்களை நரக நெருப்பின் பக்கம் அழைக்கிறார்கள்; ஆனால் அல்லாஹ்வோ தன் கிருபையால் சுவர்க்கத்தின் பக்கமும், மன்னிப்பின் பக்கமும் அழைக்கிறான்; மனிதர்கள் படிப்பினை பெறுவதற்காக தன் வசனங்களை அவன் தெளிவாக விளக்குகிறான்.

221. உங்கள் நாடும் மற்றும் உலகமே சுவர்க்க பூமியாக விளங்கவேண்டும் என்பதே அல்லாஹ்வின் வழிகாட்டுதலின் ஒட்டுமொத்த குறிக்கோளாகும் (39:69). நாட்டை சுவர்க்க பூமியாக ஆக்கவேண்டும் என்றால் முதலில் உங்கள் வீட்டை சுவர்க்கமாக ஆக்கவேண்டும். எனவே கணவன் மனைவி ஆகிய இருவரும் ஒருமித்த கருத்து உடையவர்களாக இருத்தல் அவசியம். ஆக இருவரும் வெவ்வேறு கொள்கைகளை கொண்டவர்களாக இருந்தால் வீட்டை சரிசெய்ய முடியாது. அதாவது கணவன் மனைவி ஆகிய இருவருமே ஓரிறைக்கொள்கையை (Unique Ideology) கடைபிடிப்பவர்களாக இருப்பது மிகமிக அவசியம்.

ஆக அல்லாஹ்விற்கு இணையாக வேறு கொள்கைகளை கடைபிடிக்கும் முஷ்ரிக் பெண் எவ்வளவுதான் கவரக்கூடியவளாக இருந்தாலும் அவளை மணமுடிக்கக் கூடாது. ஒரு வேளை இறைக் கொள்கைகளை ஏற்க முன்வந்தால் அந்த பெண்ணுடன் மணமுடித்துக் கொள்ளலாம். எனினும் ஆதரவற்ற மூஃமினான பெண்ணே அழகான முஷ்ரிக் பெண்ணைவிட மேலானவள் ஆவாள். அதேபோல் முஷ்ரிக் ஆணுடன் மூஃமினான பெண் மணமுடிக்கக்கூடாது. ஒருவேளை இறைக் கொள்கைகளை ஏற்றுக்கொள்ள முன்வந்தால் அவனுடன் மணமுடிக்கலாம். எனினும் மூஃமினான ஆதரவற்ற ஆண் இணைவைக்கும் அழகான செல்வந்தனைவிட சிறந்தவனாவான். அவனுடன் மணமுடிக்கலாம். ஆக இரு வெவ்வேறு கொள்கை உடையவர்களிடையே மணமுடித்தால், அந்த குடும்பம் நிம்மதியை இழந்து நரகமாக மாறிவிடும். ஆனால் அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களோ உங்கள் வீட்டை பாதுகாப்பான சுவனமாக ஆக்கிவிடவே நாடுகின்றன. இப்படியாக பொதுமக்கள் நல்லறிவுரைகளை பெறுவதற்காக அல்லாஹ்வின் வழிகாட்டுதல்கள் தெளிவாக்கப்படுகின்றன.

222 وَيَسْأَلُونَكَ عَنِ الْمَحِيضِ ۖ قُلْ هُوَ أَذًى فَاعْتَزِلُوا النِّسَاءَ فِي الْمَحِيضِ ۖ وَلَا تَقْرَبُوهُنَّ حَتَّىٰ يَطْهُرْنَ ۖ فَإِذَا تَطَهَّرْنَ فَأْتُوهُنَّ مِنْ حَيْثُ أَمَرَكُمُ اللَّهُ ۚ إِنَّ اللَّهَ يُحِبُّ التَّوَّابِينَ وَيُحِبُّ الْمُتَطَهِّرِينَ

222. திருமணத்திற்குப் பின் கணவன் மனைவியிடையே உள்ள உடலுறவு சம்பந்தமான கேள்வி எழுகிறது. மாதவிடாய் காலத்தில் கூடிக் கொள்ளலாமா என்றும் கேட்கப்படுகிறது. அது ஒரு உபாதை

### ருகூஃ 28

*222. மாதவிடாய் பற்றியும் உம்மிடம் வினவுகிறார்கள்; நீர் கூறும்: "அது (ஓர் உபாதையான) தீட்டு ஆகும்; ஆகவே மாதவிடாயின் போது பெண்களை விட்டும் விலகியிருங்கள்; அவர்கள் தூய்மையாகும் வரை அவர்களை அணுகாதீர்கள்; அவர்கள் தூய்மையடைந்த பின் அல்லாஹ் எப்படிக் கட்டளையிட்டிருக்கின்றானோ அதன்படி அவர்களிடம் செல்லுங்கள்; பாவங்களைவிட்டு மீள்பவர்களை நிச்சயமாக அல்லாஹ் நேசிக்கிறான்; இன்னும் தூய்மையாக இருப்போரையும் நேசிக்கின்றான்."*

தரும் தீட்டு என்பதை அவர்களுக்கு விளக்கிவிடு. அக்காலக் கட்டத்தில் உடலுறவு கொள்வதால் உடல் நலம் கெட வாய்ப்புண்டு. எனவே அதுசமயம் கூடுவதை தவிர்த்துக் கொள்ளவேண்டும். மாதவிடாய் நின்று சுத்தமான பின் மகப்பேறு வேண்டும் என்று நாடுபவர்கள் கூடிக்கொள்ளலாம். அல்லாஹ்வின் இந்த கட்டளையை மக்களுக்கு தெளிவாக்கி விடுங்கள். ஒரு வேளை இதற்கு முன் அறியாமையில் இதை கடைபிடிக்காமல் இருந்திருந்தால் அதை விட்டுவிட்டு அல்லாஹ்வின் இந்த வழிமுறைக்குள் வந்துவிடுங்கள். இப்படி தம்மை திருத்திக் கொண்டு சுத்தமான முறையில் வாழ முன் வருபவர்களுக்கே அல்லாஹ்வின் நேசம் கிடைக்கும்.

223 نِسَآؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَأْتُوا حَرْثَكُمْ اَنّٰى شِئْتُمْ وَقَدِّمُوا لِاَنْفُسِكُمْ وَاتَّقُوا اللّٰهَ وَاعْلَمُوْٓا اَنَّكُمْ مُّلٰقُوْهُ وَبَشِّرِ الْمُؤْمِنِيْنَ ○

*223. உங்கள் மனைவியர் உங்கள் விளை நிலங்கள் ஆவார்கள்; எனவே உங்கள் விருப்பப்படி உங்கள் விளை நிலங்களுக்குச் செல்லுங்கள்; உங்கள் ஆத்மாக்களுக்காக முற்கூட்டியே (நற்கருமங்களின் பலனை) அனுப்புங்கள்; அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்; (மறுமையில்) அவனைச் சந்திக்க வேண்டும் என்பதை உறுதியாக அறிந்து கொள்ளுங்கள். நம்பிக்கை கொண்டவர்களுக்கு நற்செய்தி கூறுவீராக!*

223. மேலும் கணவன் மனைவி இடையே ஏற்படும் உடலுறவு என்பது விவசாயத்திற்கு ஒப்பானதாகும். அதாவது விவசாயி விளைச்சலை பெறுவதற்கு எவ்வாறு நிலத்தில் பயிரிடுகின்றானோ அதேபோல் மகப்பேறு தேவை என்னும் பட்சத்தில் கணவன் மனைவி கூடிக்கொள்ளலாம். விவாசாயி பயிரிடுவதற்குமுன் நிலத்தைப் பதப்படுத்தி நேரம் காலம் ஆகியவற்றை அனுசரணையில் கொண்டு எவ்வாறு விதை விதைக்கின்றானோ அதுபோல் கணவன் மனைவியின் உடல் ஆரோக்கியம், நேரம், காலம், சூழ்நிலை, குடும்பவருவாய், மற்றும் குழந்தைகளின் பராமரிப்பு போன்ற விஷயங்களை கருத்தில் கொள்ளவேண்டும். ஆக திட்டமிட்ட குடும்பமே தெவிட்டாத இன்பத்தை பெறமுடியும்.

ஆக கணவன் மனைவி எத்தனை குழந்தைகளை பெற்றெடுக்கின்றனர் என்பதல்ல கேள்வி. மாறாக அவர்கள், தாம் பெற்றெடுத்த குழந்தைகளை ஆற்றல்மிக்க சாலிஹீன்களாக எவ்வாறு வளர்த்து ஆளாக்கி வருகிறார்கள் என்பதே கேள்வி. எனவே திருமணத்தின் நோக்கம் சதா சிற்றின்பத்தை நாடி சல்லாபம் கொண்டு தன் ஆண்மையின் பொக்கிஷமான விந்துவை வீணடிப்பது என்பது கிடையாது. மாறாக தாம் பெற்றெடுத்த குழந்தைகள் மூலம் சிறந்த சமுதாயத்தை உருவாக்குவதே அதன் நோக்கமாகும். எனவே அல்லாஹ் நிர்ணயித்துள்ள வரையறைகளை மீறி செயல்படுவதால் ஏற்படும் விபரீத விளைவுகளை அஞ்சி நடந்துக்கொள்ளுங்கள். அப்படி மீறி நடந்துக்கொண்டால் எதிர் விளைவுகளை சந்தித்தே ஆகவேண்டும் என்பதையும் நினைவில்கொள்ளுங்கள். இறை வழிகாட்டுதலை ஏற்று செயல்பட முன் வருபவர்களுக்கு நல்லதொரு எதிர்காலம் நிச்சயமாக உண்டு என்பதை எடுத்துரையுங்கள்.

224 وَلَا تَجْعَلُوا اللّٰهَ عُرْضَةً لِّاَيْمَانِكُمْ اَنْ تَبَرُّوْا وَتَتَّقُوْا وَتُصْلِحُوْا بَيْنَ النَّاسِ ۚ وَاللّٰهُ سَمِيْعٌ عَلِيْمٌ ○

*224.* இன்னும், நீங்கள் அல்லாஹ்வைக் கொண்டு சத்தியம் செய்வதனல், நீங்கள் நற்கருமங்கள் செய்தல், இறைபக்தியுடன் நடத்தல், மனிதர்களிடையே சமாதானம் செய்து வைத்தல் போன்றவற்றில் அவனை ஒரு தடையாகச் செய்துவிடாதீர்கள்; அல்லாஹ் யாவற்றையும் செவியுறுவோனுகவும், நன்கறிபவனுகவும் இருக்கின்ருன்.

224. ஒரு சிலர் பேச்சுக்கு ஒரு முறை சத்தியம் செய்வார்கள். அதனால் மக்கள் மத்தியில் நல்லிணக்கத்தை ஏற்படுத்துதல் மற்றும் சமூக சீர்திருத்த பணிகள் போன்ற நன்மையான காரியங்களின்பால் அழைப்பு விடுத்தால் நாம் ஏற்கனவே சத்தியம் செய்துக் கொண்டோம். எனவே உங்கள் அழைப்பை ஏற்று அவற்றில் பங்கெடுத்துக் கொள்ளமுடியாது என்று சொல்லி விடுகிறார்கள். இப்படி அர்த்தமற்ற சத்தியங்கள் இந்த மாபெரும் பணிகளுக்கு குறுக்கீடாக இருக்கக்கூடாது. ஆக நீங்கள் செய்து வரும் எல்லாமே அல்லாஹ்வின் பார்வையிலிருந்து தப்பமுடியாது என்பதை மறவாதீர்.

225 لَا يُؤَاخِذُكُمُ اللّٰهُ بِاللَّغْوِ فِيْٓ اَيْمَانِكُمْ وَلٰكِنْ يُّؤَاخِذُكُمْ بِمَا كَسَبَتْ قُلُوْبُكُمْ ۗ وَاللّٰهُ غَفُوْرٌ حَلِيْمٌ ○

*225.* (யோசனையின்றி) நீங்கள் செய்யும் வீணை சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக் குற்றம் பிடிக்க மாட்டான்; ஆனல் உங்களுடைய இதயங்கள் (வேண்டுமென்றே) சம்பாதித்துக் கொண்டதைப் பற்றி உங்களைக் குற்றம் பிடிப்பான்; இன்னும் அல்லாஹ் மன்னிப்போனுகவும்; மிக்க பொறுமையுடையோனுமாகவும் இருக்கின்ருன்.

225. எனவே முன் யோசனையின்றி நீங்கள் செய்துவரும் வீணான சத்தியங்கள் எதுவும் அல்லாஹ்வின் சட்டம் ஒரு குற்றமாக கருதாது. ஆனால் நீங்கள் உறுதியோடு செய்யும் சத்தியங்கள் அல்லது வாக்குறுதிகளே அல்லாஹ்விடம் செல்லும். அதாவது அவற்றை முறிப்பதால் குற்றவாளி ஆவீர்கள். அதற்கு தகுந்த தண்டனையும் உண்டு. (5:89). ஆக சிறு பிழைகளுக்கெல்லாம் கடினமான தண்டனை என்பது அல்லாஹ்வின் சட்டத்தில் கிடையாது எனவே உங்கள் உள்ளங்களில் குடிகொண்டிருந்த தவறான எண்ணங்களையும் செயல்களையும் விட்டுவிட்டு அமைதியும் பாதுகாப்பும் பெறவே அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் நாடுகின்றன.

226 لِلَّذِيْنَ يُؤْلُوْنَ مِنْ نِّسَآئِهِمْ تَرَبُّصُ اَرْبَعَةِ اَشْهُرٍ ۚ فَاِنْ فَآءُوْ فَاِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ ○

*226.* தங்கள் மனைவியருடன் கூடுவதில்லையென்று சத்தியம் செய்து கொண்டு (விலகி) இருப்பவர்களுக்கு நான்கு மாதத் தவணையுள்ளது; எனவே, (அதற்குள்) அவர்கள் மீண்டு(ம் சேர்ந்துக்) கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்போனுகவும், மிக்க கருணையுடையோனுகவும் இருக்கின்ருன்.

226. இந்த பொதுவான கொள்கைக்குப்பின் இப்போது உங்களிடையே நிலவிவரும் பிரச்சனையின் பக்கம் வாருங்கள். மனைவியிடம் சேர்ந்து வாழ மாட்டேன் என்று சத்தியம் செய்தவர்கள் அதிக பட்சமாக நான்கு மாதங்கள் வரையில் பிரிந்து இருக்கலாம். அதற்கும் மேல் அனுமதி கிடையாது. இந்த கால கட்டத்திற்குள் இணைந்து வாழ முன்வந்தால் சுமூகமாக இணைந்துக் கொள்ளலாம். இப்படியாக அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் சிறுசிறு தவறுகளை நீக்கி நிம்மதியாக வாழ வழிசெய்கின்றன. (5:89), (33:4) & (58:3)

227 وَاِنْ عَزَمُوا الطَّلَاقَ فَاِنَّ اللّٰهَ سَمِيْعٌ عَلِيْمٌ ○

*227.* ஆனல், அவர்கள் (தலாக்) விவாக விலக்கு செய்து கொள்ள உறுதி கொண்டார்களானல் - நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் செவியுறுவோனுகவும், நன்கறிபவனுகவும் இருக்கின்ருன்.

227. ஆனால் இதையும் மீறி திருமண பந்தத்திலிருந்து விடுதலை பெற விவாகரத்து செய்துக்கொள்ள தீர்மானித்துக் கொண்டால் அவ்வாறும் செய்துக் கொள்ளலாம். அதாவது இணைந்து வாழ விருப்பமில்லாத தம்பதியர்களை வலுக் கட்டாயமாக நிர்பந்தம் செய்வுதால் பிரச்சனைகள்தான் பெருகும். ஆக தம்பதியர்கள்

மனோநிலை மற்றும் சூழ்நிலை யாவற்றையும் நன்கு அறிந்தவனான அல்லாஹ்வின் புறத்திலிருந்து இப்படிப்பட்ட வழிமுறைகள் ஏற்படுத்தப்படுகின்றன.

228 وَالْمُطَلَّقٰتُ يَتَرَبَّصْنَ بِاَنْفُسِهِنَّ ثَلٰثَةَ قُرُوْٓءٍ ؕ وَلَا يَحِلُّ لَهُنَّ اَنْ يَّكْتُمْنَ مَا خَلَقَ اللّٰهُ فِىْٓ اَرْحَامِهِنَّ اِنْ كُنَّ يُؤْمِنَّ بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِ ؕ وَبُعُوْلَتُهُنَّ اَحَقُّ بِرَدِّهِنَّ فِىْ ذٰلِكَ اِنْ اَرَادُوْٓا اِصْلَاحًا ؕ وَلَهُنَّ مِثْلُ الَّذِىْ عَلَيْهِنَّ بِالْمَعْرُوْفِ ۪ وَلِلرِّجَالِ عَلَيْهِنَّ دَرَجَةٌ ؕ وَاللّٰهُ عَزِيْزٌ حَكِيْمٌ ۝

*228. தலாக் கூறப்பட்ட பெண்கள், தங்களுக்கு மூன்று மாதவிடாய்கள் ஆகும் வரை பொறுத்து இருக்க வேண்டும்; அல்லாஹ்வையும், இறுதி நாளையும் அவர்கள் நம்புவார்களாயின், தம் கர்ப்பக் கோளறைகளில், அல்லாஹ் படைத்திருப்பதை மறைத்தல் கூடாது. ஆனால் பெண்களின் கணவர்கள் (அவர்களைத் திரும்ப அழைத்துக் கொள்வதன் மூலம்) இணக்கத்தை நாடினல், (அத்தவணைக்குள்) அவர்களை (மனைவியராக)த் திருப்பிக்கொள்ள அவர்களுக்கு அதிக உரிமையுண்டு; கணவர்களுக்குப் பெண்களிடம் இருக்கும் உரிமைகள் போன்று, முறைப்படி அவர்கள்மீது பெண்களுக்கும் உரிமையுண்டு; ஆயினும் ஆண்களுக்கு அவர்கள்மீது ஒருபடி உயர்வுண்டு; மேலும் அல்லாஹ் வல்லமையும்; ஞானமும் மிக்கோனுக இருக்கின்ருன்.*

228. தலாக் ஒரு சமூக பிரச்சனை என்பதால் ஜமாஅத் மூலமாகவோ அல்லது இஸ்லாமிய அமைப்பின் நீதிமன்றம் மூலமாகவோதான் பெறமுடியும். இது மத்தியஸ்தர்களின் விசாரணைக்குப் பின் 4:35 தலாக் (விவாகரத்து) ஆகிவிட்டதாக அறிவிப்பு செய்யப்படும். அதன்பின் மூன்று மாதவிடாய் காலங்கள் வரையில் கணவன் மனைவி பிரிந்திருக்கவேண்டும். அதற்குப் பிறகுதான் தலாக் தீர்ப்பு (Divroce Certificate) அளிக்கப்படும். மாதவிடாய் ஏதாவது காரணத்தால் வராத பெண்களுக்கு இந்த காலத் தவணை மூன்று மாதங்கள் என்ற கணக்கில் வரும். (65:4) கணவன் மனைவி ஒருவரையொருவர் தீண்டவே இல்லை என்ற நிலையில் தலாக் செய்யும் சூழ்நிலை ஏற்பட்டால் இந்த இத்தா என்ற மாதத் தவணவையும் கிடையாது (33:49). இந்த கால தவணைக்குள் பெண் கருத்தரித்திருந்தால் தெரிந்து விடும். அவ்வாறு கர்ப்பமாகியிருந்தால் அதை மறைக்கலாகாது. அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஏற்றுக் கொண்டவர்கள் இவ்வாறு மறைக்கவும் மாட்டார்கள். இப்படி கர்ப்பமாகியிருந்தால் தலாக் தீர்ப்பு பிரசவமாகும் வரையில் தள்ளிப்போடப்படும் (65:4). இந்த தலாக் அறிவிப்பும் காலத் தவணைகளும் (Divorce in abeyance) எதற்கு என்றால் ஒருவேளை அவசரப்பட்டு தம்பதியர்கள் தலாக் செய்துக்கொள்ள முடிவு எடுத்திருக்கலாம். இந்த பரிவினைகளால் ஏற்படும் சிக்கல்களைப் பற்றி ஒருவரையொருவர் அறிந்து மீண்டும் சேர்ந்து வாழ முன் வரலாம். இப்படி சேர்ந்து வாழ முடிவெடுத்தால் அதற்கும் அல்லாஹ்வின் சட்டத்தில் இடமுண்டு.

இன்னொரு விஷயத்தையும் நன்றாக தெரிந்துக்கொள்ளுங்கள். தலாக் செய்திட ஆண்களுக்கு மட்டும் உரிமை உண்டு என்பது கிடையாது. அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் யாவும் ஆண் பெண் ஆகிய இருவருக்கும் சமமாக பொருந்தும். (33:35) ஆக விவாகரத்து விஷயத்திலும் கணவன் போலவே மனைவியும் தன் கணவருக்கு எதிராக விவாகரத்து கோரலாம். என்ன ஒரு வித்தியாசம் என்றால் இந்த தலாக் அறிவிப்பு தவணை காலத்தில் (Divorce in abeyance) பெண் மறுமணம் செய்துக் கொள்ளலாகாது. மேலும் தலாக் செய்த அப்பெண்ணை அந்த தவணைக்குள் கணவன் மீட்டிக்கொள்ளவும் செய்யலாம். ஆக இந்த ஒரு விஷயத்தில் ஆண்களுக்கு ஒருபடி உரிமை அதிகமாக உள்ளது. இப்படியாக மனித வாழ்வின்

அனைத்து விஷயங்களையும் நன்கறியும் வல்லமைப் பெற்ற அல்லாஹ்வின் புறத்திலிருந்து இந்த வழிமுறைகள் இறக்கி அருளப்படுகின்றன.

229 الطَّلَاقُ مَرَّتٰنِ فَإِمْسَاكٌ بِمَعْرُوفٍ
أَوْ تَسْرِيحٌ بِإِحْسَانٍ ۗ وَلَا يَحِلُّ
لَكُمْ أَنْ تَأْخُذُوا مِمَّا آتَيْتُمُوهُنَّ
شَيْئًا إِلَّا أَنْ يَخَافَا أَلَّا يُقِيمَا
حُدُودَ اللهِ ۖ فَإِنْ خِفْتُمْ أَلَّا
يُقِيمَا حُدُودَ اللهِ ۙ فَلَا جُنَاحَ
عَلَيْهِمَا فِيمَا افْتَدَتْ بِهِ ۗ تِلْكَ
حُدُودُ اللهِ فَلَا تَعْتَدُوهَا ۚ وَمَنْ
يَتَعَدَّ حُدُودَ اللهِ فَأُولٰٓئِكَ هُمُ
الظّٰلِمُونَ ○

229. இதையும் தெரிந்துக் கொள்ளுங்கள். விவாகரத்து செய்துக் கொள்வதும் மீண்டும் இணைந்துக் கொள்வதும் குழந்தைகள் விளையாடும் பொம்மை விளையாட்டு அல்ல. இவையாவும் நீதிமன்ற விவகாரங்களாகும். எனவே மேலே சொன்ன முறைப்படி விவாகரத்து செய்துக்கொள்ளவும் மீண்டும் நிக்காஹ் செய்து இணைந்துக்கொள்ளவும் தம்பதியர் வாழ்நாள் காலத்தில் இரண்டு முறைதான் வாய்ப்புகள் அளிக்கப்படும். மூன்றாவது முறையும் தலாக் விவகாரம் வந்தால் 2:230–ல் உள்ளபடி செய்ய வேண்டும். ஆக கணவன் மனைவி ஆகிய இருவரும் மிகவும் கண்ணியமான முறையில் பிரிந்துக் கொள்ளலாம். மனைவிக்கு ஏற்கனவே சொத்துக்களை கணவன் கொடுத்திருந்தால் அவை பொற்குவியலாக இருந்தாலும் திரும்ப பெற்றுக் கொள்ளக்கூடாது (4:20) தலாக் பிரச்சனை தீர்விற்கு இந்த சொத்து செல்வங்களே குறிக்கீடாக இருக்கின்றன என்று நீதிமன்றம் கருதினால் அந்த மனைவியிடமிருந்து அதை திருப்பப் பெற்று கணவனிடம் ஒப்படைக்க தீர்ப்பு வழங்கலாம். அதுசமயம் அந்த பெண்ணும் அந்த சொத்திலிருந்து நிர்ணயத்த தொகையை அந்த மாஜி கணவனுக்கு கொடுத்திடலாம்.

நினைவில் கொள்ளுங்கள். இவை எல்லாம் அல்லாஹ்வின் புறத்திலிருந்து நிர்ணயமான வரையறைகளாகும். இவற்றை பேணி நடப்பது ஒவ்வொருடைய கடமையாகும். யார் இந்த வரையரைகளை மீறி நடக்கிறார்களோ அல்லாஹ்வின் பார்வையில் குற்றவாளிகள் ஆவார்கள்.

ருகூஃ 29

*229. (இத்தகைய) தலாக் இரண்டு முறைகள் தாம் கூறலாம் - பின் (தவணைக்குள்) முறைப்படி கணவன், மனைவியாகச் சேர்ந்து வாழலாம்; அல்லது நேர்மையான முறையில் பிரிந்து போக விட்டுவிடலாம்; அவ்விருவரும் அல்லாஹ்வின் வரம்புகளை நிலை நிறுத்த முடியாது என்று அஞ்சும் போது தவிர. நீங்கள் மனைவியருக்கு கொடுத்தவற்றிலிருந்து யாதொன்றையும் திருப்பி எடுத்துக் கொள்ளுதல் கூடாது - இன்னும் நீங்கள் அல்லாஹ்வின் வரம்புகளை அவர்களால் நிலை நிறுத்த முடியாது என்று அஞ்சினுல், அவள் (கணவனுக்கு) ஏதேனும் ஈடாகக் கொடுத்து(ப் பிரிந்து) விடுவதில் குற்றமில்லை; இவை அல்லாஹ் ஏற்படுத்தியுள்ள வரையறைகளாகும்; ஆகையால் அவற்றை மீருதீர்கள்; எவர் அல்லாஹ்வின் வரையறைகளை மீறுகிருர்களோ, அவர்கள் அக்கிரமக்காரர்கள் ஆவார்கள்.*

230 فَإِنْ طَلَّقَهَا فَلَا تَحِلُّ لَهُ مِنْ
بَعْدُ حَتّٰى تَنْكِحَ زَوْجًا غَيْرَهُ ۗ
فَإِنْ طَلَّقَهَا فَلَا جُنَاحَ عَلَيْهِمَا
أَنْ يَتَرَاجَعَا إِنْ ظَنَّا أَنْ يُقِيمَا
حُدُودَ اللهِ ۗ وَتِلْكَ حُدُودُ اللهِ
يُبَيِّنُهَا لِقَوْمٍ يَعْلَمُونَ ○

230. மேலே சொன்ன விதிமுறைகளின்படி கணவன் மனைவி இடையே ஏற்கனவே இரண்டுமுறை விவாகரத்து நீதிமன்றம் மூலமாக பெற்று மூன்றாம் முறை நிக்காஹ்வும் செய்துக்கொண்டு மூன்றாவது முறையும் விவாகரத்து பிரச்சனை நீதிமன்றத்திற்கு வந்தால் அந்த மனைவியை கணவனோ அல்லது கணவனை மனைவியோ மீட்டிக் கொள்ளமுடியாது. ஏனெனில் இவர்கள் ஏற்கனவே இருமுறை தம் வாய்ப்புகளை பயன்படுத்திக்கொண்டனர். மூன்றாவது முறையும் பிரச்சனை வந்து விட்டதனால் இனி ஒன்று சேர முடியாது. இதை அவர்களுக்கு எடுத்துரைத்து யோசித்து முடிவெடுக்க அறிவுரை செய்யவேண்டும். இருப்பினும் இவ்வாராக மூன்றுமுறை விவாகரத்து செய்துக் கொண்டவள் இன்னொரு ஆணுடன் திருமணம் செய்து

*230. மீட்ட முடியாதபடி - (அதாவது இரண்டு தடவை தலாக் சொன்ன பின்னர் மூன்றும்) தலாக் சொல்லிவிட்டால் கணவன் அப் பெண்ணை மறுமணம் செய்து கொள்ள முடியாது; ஆனால் அவள் வேறு ஒருவனை மணந்து - அவனும் அவளை தலாக் சொன்னால், அதன் பின் (முதற்) கணவன் - மனைவி சேர்ந்து வாழ நாடினால் - அதன் மூலம் அல்லாஹ்வுடைய வரம்புகளை நிலைநிறுத்த முடியும் என்று எண்ணினால், அவர்கள் இருவரும் (மறுமணம் செய்து கொண்டு மண வாழ்வில்) மீள்வது குற்றமல்ல. இவை அல்லாஹ்வின் வரையறைகளாகும்; இவற்றை அல்லாஹ் புரிந்து கொள்ளக்கூடிய மக்களுக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறான்.*

அந்த கணவனையும் முறைப்படி விவாகரத்து செய்திருந்தால் அல்லது அந்த கணவன் இறந்துவிட்டிருந்தால் அந்த பெண்ணை மீண்டும் தன் முதல் கணவன் திருமணம் செய்துகொள்ள சட்டத்தில் இடமுண்டு. கண்டிப்பாக செய்துக் கொண்டே ஆக வேண்டும் என்பதும் கிடையாது. ஆகவே அல்லாஹ்வின் நெறிமுறைகளை இனி அத்தம்பதியர் பேணி நடப்பார்கள் என்று நீதிமன்றம் தீர்மானித்தால் மீண்டும் மறுமணம் செய்து வைப்பதில் யாதொரு குற்றமுமில்லை. இதில் யாருக்கும் எந்த நிர்ப்பந்தமும் இல்லை. இவைகளே அல்லாஹ் நிர்ணயித்த வரம்புகளாகும். இஸ்லாமிய சட்டதிட்டங்களை நன்கு புரிந்துக்கொண்டு தீர்ப்பு செய்ய அறிவுடைய மக்களுக்கு எடுத்துரைக்கப்படுகின்றன.

231 وَإِذَا طَلَّقْتُمُ النِّسَاءَ فَبَلَغْنَ أَجَلَهُنَّ فَأَمْسِكُوهُنَّ بِمَعْرُوفٍ أَوْ سَرِّحُوهُنَّ بِمَعْرُوفٍ ۚ وَلَا تُمْسِكُوهُنَّ ضِرَارًا لِّتَعْتَدُوا ۚ وَمَن يَفْعَلْ ذَٰلِكَ فَقَدْ ظَلَمَ نَفْسَهُ ۚ وَلَا تَتَّخِذُوا آيَاتِ اللَّهِ هُزُوًا ۚ وَاذْكُرُوا نِعْمَتَ اللَّهِ عَلَيْكُمْ وَمَا أَنزَلَ عَلَيْكُم مِّنَ الْكِتَابِ وَالْحِكْمَةِ يَعِظُكُم بِهِ ۚ وَاتَّقُوا اللَّهَ وَاعْلَمُوا أَنَّ اللَّهَ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ

*231. (மீளக் கூடிய) தலாக் கூறித் தவணை- இத்தத் - முடிவதற்குள் முறைப்படி அவர்களை (உங்களுடன்) நிறுத்திக் கொள்ளுங்கள்; அல்லது (இத்தாவின்) தவணை முடிந்ததும் முறைப்படி அவர்களை விடுவித்து விடுங்கள்; ஆனால் அவர்களை உங்களுடன் வைத்துக் கொண்டு அவர்களைத் துன்புறுத்தாதீர்கள்; அவர்களிடம் வரம்பு மீறி நடவாதீர்கள்; இவ்வாறு ஒருவர் நடந்து கொள்வாரானால், அவர் தமக்குத் தாமே தீங்கிழைத்துக் கொள்கிறார்; எனவே, அல்லாஹ்வின் வசனங்களைக் கேலிக் கூத்தாக ஆக்கிவிடாதீர்கள்; அவன் உங்களுக்கு அளித்த அருள் கொடைகளையும், உங்கள் மீது இறக்கிய வேதத்தையும், ஞானத்தையும் சிந்தித்துப் பாருங்கள். இவற்றைக் கொண்டு அவன் உங்களுக்கு நற்போதனை செய்கின்றான்; அல்லாஹ்வை அஞ்சுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் நன்கறிபவனாக இருக்கின்றான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.*

231. தலாக் அறிவிப்பு தவணை காலத்தில் பெண்ணின் பராமரிப்பு செலவு அந்த விவாகரத்து செய்யும் ஆணுடைய பொறுப்பாகும் (65:6). இந்த காலத் தவணை முடிவடைவதற்குள் மீண்டும் அந்த பெண்ணை மறுமணம் செய்து தன்னுடன் இணைத்துக்கொள்ளலாம். அல்லது முறைப்படி நல்ல விதமாக பிரிந்தும் போயிவிடலாம். இதற்காக இரண்டு சாட்சியாளர்களை முன்வைத்துக் தீர்ப்பளிப்பது அவசியம் (65:2)

நினைவில் கொள்ளுங்கள். அந்த பெண்ணை தம்முடன் இணைத்துக் கொள்வதற்காக அவளை துன்புறுத்தாதீர்கள். அவளிடம் வரம்பு மீறாதீர்கள். இவ்வாறு செய்பவர்கள் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொள்கிறார் என்பதே உண்மை. அல்லாஹ்வின் மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற சட்டம் அவனுடைய ஒவ்வொரு செயலுக்கும் ஏற்றார்போல் விளைவுகளை ஏற்படுத்தும். மேலும் அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை விளையாட்டாக எடுத்துக் கொள்ளக்கூடாது. இப்படி நீங்கள் அவற்றை கேலிக் கூத்தாக ஆக்கிவிட்டால் மிகப்பெரிய அளவில் சமுதாயத்தில் பாதிப்புகளும் அவலநிலையும் ஏற்படுத்திவிடும். இவ்வாறாக அனைத்து விஷயங்களையும் கருத்தில்கொண்டு வழிகாட்டுதல்கள் இறக்கியருளப்படுவது அல்லாஹ்வின் இரக்க குணநலத்தை பரைசாற்றகின்றன. அதுமட்டுமின்றி அந்த சட்டதிட்டங்களின் நோக்கங்கள் யாவை? அவற்றை பின்பற்றுவதால் ஏற்படும் நன்மைகள் என்ன? அவற்றை ஏற்க மறுத்து மாறு செய்தால் ஏற்படும் விளைவுகள் என்ன என்பதை அறிவிப்பதும் அல்லாஹ்வின் பேராற்றலை பிரதிபலிப்பதாக உள்ளன. இதனால் நீங்கள் சிறந்த சமுதாயத்தை உருவாக்கலாம்.

232 وَ اِذَا طَلَّقۡتُمُ النِّسَآءَ فَبَلَغۡنَ اَجَلَهُنَّ فَلَا تَعۡضُلُوۡهُنَّ اَنۡ يَّنۡكِحۡنَ اَزۡوَاجَهُنَّ اِذَا تَرَاضَوۡا بَيۡنَهُمۡ بِالۡمَعۡرُوۡفِ ؕ ذٰلِكَ يُوۡعَظُ بِهٖ مَنۡ كَانَ مِنۡكُمۡ يُؤۡمِنُ بِاللّٰهِ وَالۡيَوۡمِ الۡاٰخِرِ ؕ ذٰلِكُمۡ اَزۡكٰى لَـكُمۡ وَاَطۡهَرُ ؕ وَاللّٰهُ يَعۡلَمُ وَاَنۡتُمۡ لَا تَعۡلَمُوۡنَ ○

ருகூஃ 30

*232. இன்னும், பெண்களை நீங்கள் தலாக் செய்து, அவர்களும் தங்களுடைய இத்தா தவணையைப் பூர்த்தி செய்து விட்டால், அவர்கள் தாங்கள் விரும்பி ஏற்கும் கணவர்களை முறைப்படித் திருமணம் செய்து கொள்வதைத் தடுக்காதீர்கள்; உங்களில் யார் அல்லாஹ்வின் மீதும், இறுதி நாள் மீதும் நம்பிக்கை கொண்டுள்ளார்களோ, அவர்களுக்கு இதைக் கொண்டு உபதேசிக்கப் படுகிறது; இ(தன்படி நடப்ப)து உங்களுக்கு நற்பண்பும், தூய்மையும் ஆகும்; (இதன் நலன்களை) அல்லாஹ் அறிவான்; நீங்கள் அறிய மாட்டீர்கள்*

232. தாலக் அறிவிப்பு காலத் தவணை (Divorce in abeyance) முடிவுபெற்ற பிறகு தலாக் தீர்ப்பு (Divorce Cetificate) வழங்கப்படும். அதன்பின் அந்த ஆண் பெண் ஆகிய இருவரும் தான் விரும்பியவரோடு திருமணம் செய்துக்கொண்டு வாழ அவர்களுக்கு முழு உரிமை உண்டு. ஒருவேளை அவ்விருவரும் இணைந்துவாழ விரும்பினால் மீண்டும் மறுமணம் செய்துக்கொள்ளலாம். அவ்வாறு அவர்கள் மீண்டும் இணைந்துவாழ முன்வருவதை யாரும் தடுக்கக்கூடாது. ஏனெனில் அத்தம்பதியர் தலாக்கில் ஒரு வாய்ப்பைதான் பயன்படுத்தியுள்ளனர். யார் அல்லாஹ்வின் வழிகாட்டுதல்கள்மீதும், (ஆ..கிரத்) இறுதி விளைவுகளின் மீதும் நம்பிக்கை கொள்கிறார்களோ அவர்களுக்குத்தான் இந்த உபதேசங்கள் அளிக்கப்படுகின்றன. இவ்வாறாக அழகியமுறையில் நடந்துக்கொள்வது அவர்களை உயர்ந்த பண்பாடும் நன் நடத்தையும் கொண்ட சமுதாயமாக உருவாக்கும். ஆக நீங்கள் செய்வதனைத்தும் அல்லாஹ்வின் கண்காணிப்பிலிருந்து தப்பமுடியாது என்பதை மறவாதீர்.

233 وَالۡوَالِدٰتُ يُرۡضِعۡنَ اَوۡلَادَهُنَّ حَوۡلَيۡنِ كَامِلَيۡنِ لِمَنۡ اَرَادَ اَنۡ يُّتِمَّ الرَّضَاعَةَ ؕ وَعَلَى الۡمَوۡلُوۡدِ لَهٗ رِزۡقُهُنَّ وَكِسۡوَتُهُنَّ بِالۡمَعۡرُوۡفِ ؕ لَا تُكَلَّفُ نَفۡسٌ اِلَّا وُسۡعَهَا ۚ لَا تُضَآرَّ وَالِدَةٌ ۢ بِوَلَدِهَا وَلَا مَوۡلُوۡدٌ لَّهٗ بِوَلَدِهٖ ۚ وَعَلَى الۡوَارِثِ مِثۡلُ ذٰلِكَ ۚ فَاِنۡ اَرَادَا فِصَالًا عَنۡ تَرَاضٍ مِّنۡهُمَا وَتَشَاوُرٍ فَلَا جُنَاحَ عَلَيۡهِمَا ؕ وَاِنۡ اَرَدۡتُّمۡ اَنۡ تَسۡتَرۡضِعُوۡٓا اَوۡلَادَكُمۡ فَلَا جُنَاحَ عَلَيۡكُمۡ اِذَا سَلَّمۡتُمۡ مَّآ اٰتَيۡتُمۡ بِالۡمَعۡرُوۡفِ ؕ وَاتَّقُوا اللّٰهَ وَاعۡلَمُوۡٓا اَنَّ اللّٰهَ بِمَا تَعۡمَلُوۡنَ بَصِيۡرٌ ○

*233. (தலாக் சொல்லப்பட்ட மனைவியர், தம்) குழந்தைகளுக்குப் பூர்த்தியாகப் பாலூட்ட வேண்டுமென்று (தந்தை) விரும்பினால், தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு நிரப்பமான இரண்டு ஆண்டுகள் பாலூட்டுதல் வேண்டும்; பாலூட்டும் தாய்மார்களுக்கு (ஷரீஅத்தின்) முறைப்படி உணவும், உடையும் கொடுத்து வருவது குழந்தையுடைய தகப்பன் மீது கடமையாகும்; எந்த ஓர்*

233. தலாக் அறிவித்த காலக் கட்டத்தில் பாலுட்டும் கைக்குழந்தை இருந்து அதற்கு தாய் பாலூட்ட விரும்பினால் இரண்டு ஆண்டுகள் வரை பாலூட்ட அந்த மாஜி கணவன் அனுமதி அளிக்கவேண்டும். பாலூட்டும் வரை ஜீவனாம்சம் வழங்குவது அந்த குழந்தையின் தந்தையின் மீது கடமையாகும். இருப்பினும் யாரும் தம் சக்திக்கு மேல் பலவந்தம் செய்யப்பட மாட்டார்கள். அவனுடைய வசதிக்கு ஏற்றார்போல் உதவி செய்ய வேண்டும். இந்த குழந்தையை காரணம் காட்டி தாய் தந்தை ஆகிய இருவரில் யாரையும் துன்புறுத்தக் கூடாது. எனவே தலாக் தீர்ப்பளிக்கும் இஸ்லாமிய நீதிமன்றம் அனைத்து விஷயங்களையும் கருத்தில் கொண்டு தீர்ப்பு வழங்க வேண்டும். இந்த இடைப்பட்ட காலக் கட்டத்தில் குழந்தையின் தந்தை இறந்து விட்டால் இந்த பராமரிப்பு பொறுப்பு அவனுடைய வாரிசுதாரர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மேலும் அந்த குழந்தையின் தாய் தந்தை ஆகிய இருவரும் பரஸ்பரம் இணங்கி ஜமாஅத் மூலமாக கலந்தாலோசித்து பாலூட்டுதலை நிறுத்திக்கொள்ள விரும்பினால் அவர்கள் இருவர் மீதும் குற்றமாகாது. ஒரு செவிலித்தாயை நியமித்து பாலூட்ட ஏற்பாடு செய்யலாம். இருப்பினும் அக்குழந்தையின் தாய்க்கு சேரவேண்டியதை முறைப்படி கொடுத்துவிட வேண்டும். ஆக உங்கள் அச்சம் அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை பேணி நடப்பதிலேயே இருத்தல் அவசியம். ஏனெனில் உங்களுடைய எந்த செயலும் அல்லாஹ்வின்

*ஆத்மாவும் அதன் சக்திக்கு மேல் (எதுவும் செய்ய) நிர்ப்பந்திக்கப்பட மாட்டாது; தாயை அவளுடைய குழந்தையின் காரணமாகவோ, (அல்லது) தந்தையை அவன் குழந்தையின் காரணமாகவோ துன்புறுத்தப் படமாட்டாது; (குழந்தையின் தந்தை இறந்து விட்டால்) அதைப் பரிபாலிப்பது வாரிசுகள் கடமையாகும்; இன்னும், (தாய் தந்தையர்) இருவரும் பரஸ்பரம் இணங்கி, ஆலோசித்துப் பாலூட்டலை நிறுத்த விரும்பினால், அது அவர்கள் இருவர் மீதும் குற்றமாகாது; தவிர ஒரு செவிலித்தாயைக் கொண்டு உங்கள் குழந்தைகளுக்குப் பாலூட்ட விரும்பினால் அதில் உங்களுக்கு ஒரு குற்றமுமில்லை; ஆனால், (அக்குழந்தையின் தாய்க்கு உங்களிடமிருந்து) சேரவேண்டியதை முறைப்படி செலுத்திவிட வேண்டும்; அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்து கொள்ளுங்கள் - நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்வதைப் பார்ப்பவனாக இருக்கிறான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.*

234 وَالَّذِيْنَ يُتَوَفَّوْنَ مِنْكُمْ وَيَذَرُوْنَ
اَزْوَاجًا يَّتَرَبَّصْنَ بِاَنْفُسِهِنَّ اَرْبَعَةَ
اَشْهُرٍ وَّعَشْرًا ۚ فَاِذَا بَلَغْنَ اَجَلَهُنَّ
فَلَا جُنَاحَ عَلَيْكُمْ فِيْمَا فَعَلْنَ
فِيْٓ اَنْفُسِهِنَّ بِالْمَعْرُوْفِ ۗ وَاللّٰهُ بِمَا تَعْمَلُوْنَ خَبِيْرٌ ○

*234. உங்களில் எவரேனும் மனைவியரை விட்டு மரணித்தால் அம்மனைவியர் நான்கு மாதம் பத்து நாள் பொறுத்திருக்க வேண்டும்; (இந்த இத்தத்) தவணை பூர்த்தியானதும், அவர்கள் (தங்கள் நாட்டத்துக்கு ஒப்ப) தங்கள் காரியத்தில் ஒழுங்கான முறையில் எதுவும் செய்து கொள்வதில் உங்கள் மீது குற்றமில்லை; அல்லாஹ் நீங்கள் செய்வதை நன்கறிந்தவனாகவே இருக்கின்றான்.*

235 وَلَا جُنَاحَ عَلَيْكُمْ فِيْمَا عَرَّضْتُمْ
بِهٖ مِنْ خِطْبَةِ النِّسَآءِ اَوْ اَكْنَنْتُمْ فِيْٓ
اَنْفُسِكُمْ ۗ عَلِمَ اللّٰهُ اَنَّكُمْ سَتَذْكُرُوْنَهُنَّ
وَلٰكِنْ لَّا تُوَاعِدُوْهُنَّ سِرًّا اِلَّآ اَنْ
تَقُوْلُوْا قَوْلًا مَّعْرُوْفًا ۗ وَلَا تَعْزِمُوْا
عُقْدَةَ النِّكَاحِ حَتّٰى يَبْلُغَ الْكِتٰبُ
اَجَلَهٗ ۗ وَاعْلَمُوْٓا اَنَّ اللّٰهَ يَعْلَمُ مَا
فِيْٓ اَنْفُسِكُمْ فَاحْذَرُوْهُ ۚ وَاعْلَمُوْٓا
اَنَّ اللّٰهَ غَفُوْرٌ حَلِيْمٌ ○

*235. (இவ்வாறு இத்தா இருக்கும்) பெண்ணுடன் திருமணம் செய்யக் கருதி (அது பற்றிக்) குறிப்பாக அறிவிப்பதிலோ, அல்லது மனதில் மறைவாக வைத்திருப்பதிலோ உங்கள் மீது குற்றமில்லை; நீங்கள் அவர்களைப் பற்றி எண்ணுகிறீர்கள் என்பதை அல்லாஹ் அறிவான்; ஆனால் இரகசியமாக அவர்களிடம் (திருமணம் பற்றி) வாக்குறுதி*

கண்காணிப்பிலிருந்து தப்பமுடியாது. அதாவது அனைத்து செயல்களும் பதிவு ஆகி வரும்.

234. இவைகள்தாம் தலாக் மற்றும் அதை ஒட்டிய சட்டதிட்டங்கள் ஆகும். இதைத் தவிர வேறு சில விஷயங்களையும் கவனிக்க வேண்டும். உங்களில் எவரேனும் மரணித்து விட்டால் அவரது மனைவி நான்கு மாதம் பத்து நாட்கள் வரையில் தனித்திருந்து வாழ வேண்டும். அதாவது மறுமணம் செய்யக்கூடாது இந்த இத்தா காலத்திற்கு பின் முறைப்படி அந்த விதவைப்பெண் என்ன முடிவெடுக்கிறாரோ அதன்படி வாழ வழி செய்யவேண்டும். அவள் எடுக்கும் முடிவுபடி நீங்கள் நடந்துக்கொள்வதில் உங்கள் மீது குற்றமில்லை. நீங்கள் செய்யும் அனைத்துச் செயல்களும் அல்லாஹ்விற்கு நன்றாகத் தெரியும் என்பதை மறவாதீர்கள்.

235. இந்த நான்கு மாதம் பத்து நாட்கள் என்ற இத்தா காலக்கட்டத்தில் அந்த விதவை பெண்ணை திருமணம் செய்துக் கொள்வது பற்றி மறைமுகமாக பேச்செடுப்பதில் குற்றமில்லை. அப்படி ஒரு எண்ணம் மனதில் மறைமுகமாக வைத்திருப்பதிலும் தவறுமில்லை. உங்களுடைய எண்ணம் என்ன என்பது அல்லாஹ்விற்கு நன்றாகத் தெரியும். ஆனால் நிக்காஹ் செய்வது பற்றி அவளிடம் மறைமுகமாக பேசாதீர்கள். கணவனை இழந்த அந்த பெண்மணி அந்த துக்கத்திலிருந்து மீண்டு இருக்கமாட்டாள். எனவே மறுமணத்தைப் பற்றி எண்ணங்கொள்ளவும் மாட்டாள். எனவே எதையும் முறைப்படி பெரியவர்கள் மூலமாக தம் எண்ணத்தை வெளிப்படுத்துங்கள். இருப்பினும் இந்த காலத் தவணைக்குள் திருமணம் செய்துக்கொள்ள ஒப்பந்தம் செய்துக் கொள்ளாதீர்கள். உங்கள் மனதில் எழும் எண்ணங்களும் அல்லாஹ்விற்கு நன்றாகத் தெரியும் என்பதை மறவாதீர்கள். எனவே அல்லாஹ்விற்கு அஞ்சி செயல்படுங்கள். உங்களுடைய தவறான செயல்களால் ஏற்படும் விபரீத

செய்து கொள்ளாதீர்கள்: ஆனால் இது பற்றி வழக்கத்திற்கு ஒத்த (மார்க்கத்திற்கு உகந்த) சொல்லை நீங்கள் சொல்லலாம்; இன்னும் (இத்தாவின்) கெடு முடியும் வரை திருமண பந்தத்தைப் பற்றித் தீர்மானித்து விடாதீர்கள்; அல்லாஹ் உங்கள் உள்ளங்களிலுள்ளதை நிச்சயமாக அறிகின்றான் என்பதை நீங்கள் அறிந்து அவனுக்கு அஞ்சி நடந்துகொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் மன்னிப்பவனாகவும், பொறுமையாளனாகவும் இருக்கின்றான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

விளைவுகளிலிருந்து பாதுகாப்பாக இருக்கவே இப்படி வழிமுறைகள் வகுக்கப்படுகின்றன.

குறிப்பு: *போர், கலவரம், புரட்சி போன்ற சில சூழ்நிலைகளில் மூ:மினான பெண்கள் ஊரை விட்டு வெளியேற்றப்பட்டு (22:40) அகதிகளாக வந்தவர்களும். (60 : 10) மேலும் போரில் உயிர் துறந்தவர்களின் மனைவிமார்களும், ஆதரவற்ற நிலையில் தவிக்கும் பெண்களின் பாதுகாப்பு கருதி ஒன்றுக்குமேல் திருமணம் செய்துக்கொள்ள தற்காலிக அவசரசட்டம் பிறப்பிக்கப்பட்டது (பார்க்க – 4:3). இது அவர்களின் பாதுகாப்புக்காகவே அன்றி சல்லாபம் கொண்டு இன்பம் அனுபவிப்பதற்காக அல்ல (4 : 24). சமூகமான சூழ்நிலை உருவாகும் போது ஒன்றுக்குமேல் மணமுடித்த பெண்களுக்கு மறு வாழ்வு கொடுக்க புதிதாக இஸ்லாத்தில் இணைந்த இளைஞர்களுக்கு திருமணம் செய்து தரப்படும். அது சமயம் தம் இரண்டாவது மூன்றாவது நான்காவது மனைவிகளை அவர்களுடைய விருப்பம் பெற்று திருமண பந்தத்திலிருந்து விடுதலை அளித்து மறுவாழ்விற்கு உடனே ஏற்பாடு செய்யப்படும். ஏனெனில் தீண்டாத அப்பெண்களுக்கு இத்தா கிடையாது. (33:49) இப்படி ஒரு நிலையில் சட்டங்கள் இவ்வாறிருக்கும்.*

236 لَا جُنَاحَ عَلَيْكُمْ إِنْ طَلَّقْتُمُ النِّسَاءَ مَا لَمْ تَمَسُّوهُنَّ أَوْ تَفْرِضُوا لَهُنَّ فَرِيضَةً ۚ وَمَتِّعُوهُنَّ عَلَى الْمُوسِعِ قَدَرُهُ وَعَلَى الْمُقْتِرِ قَدَرُهُ مَتَاعًا بِالْمَعْرُوفِ ۖ حَقًّا عَلَى الْمُحْسِنِينَ ○

ருகூஉ 31

236. பெண்களை நீங்கள் தீண்டுவதற்கு முன், அல்லது அவர்களுடைய மஹரை நிச்சயம் செய்வதற்கு முன், தலாக் சொன்னால் உங்கள் மீது குற்றமில்லை; ஆயினும் அவர்களுக்குப் பலனுள்ள பொருள்களைக் கொடு(த்து உதவு)ங்கள் - அதாவது செல்வம் படைத்தவன் அவனுக்குத் தக்க அளவும், ஏழை அவனுக்குத் தக்க அளவும் கொடுத்து, நியாயமான முறையில் உதவி செய்தல் வேண்டும்; இது நல்லோர் மீது கடமையாகும்.

236. மனைவிகளை மணமுடித்துக்கொண்டு தீண்டவுமில்லை, திருமணத்தின் சமயம் மணக்கொடையான மஹரை நிச்சயிக்கப்படவுமில்லை என்ற நிலையில் தலாக் செய்வதில் சட்டப்படி குற்றமில்லை. இந்த மணக்கொடையை தரவேண்டிய அவசியமும் இல்லை. இருப்பினும் வசதி படைத்தவர்கள் அப்பெண்கள் குடும்ப வாழ்க்கை தொடர்வதற்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுக்க வேண்டும். வசதி இல்லாதவர்கள் தன் சக்திக்கு உட்பட்டு உதவிகளை செய்து தர வேண்டும். இதனால் அந்த பெண்களுக்கு ஏற்பட்டுள்ள இழப்பிற்கு ஈடுகட்ட உதவி புரியும். இப்படிப்பட்ட நன்மையான காரியங்களை செய்வது நல்லோர்கள் மீது கடமையாகும்.

237 وَإِنْ طَلَّقْتُمُوهُنَّ مِنْ قَبْلِ أَنْ تَمَسُّوهُنَّ وَقَدْ فَرَضْتُمْ لَهُنَّ فَرِيضَةً فَنِصْفُ مَا فَرَضْتُمْ إِلَّا أَنْ يَعْفُونَ أَوْ يَعْفُوَ الَّذِي بِيَدِهِ عُقْدَةُ النِّكَاحِ ۚ وَأَنْ تَعْفُوا أَقْرَبُ لِلتَّقْوَىٰ ۚ وَلَا تَنْسَوُا الْفَضْلَ بَيْنَكُمْ ۚ إِنَّ اللَّهَ بِمَا تَعْمَلُونَ بَصِيرٌ ○

237. ஒரு வேளை மணக்கொடை நிச்சயமாகி தம் மனைவியை தீண்டாமல் இருக்கும் நிலையில் தலாக் செய்திட நேர்ந்தால் அந்த மஹர் தொகையிலிருந்து பாதியை அளித்திடவேண்டும். அந்த மஹர் தொகையை பாதி தருவதற்கு பதிலாக முழுவதுமாக கொடுத்துவிடுவது நல்லது. இவ்வாறாக அழகியமுறையில் ஒருவருக்கொருவர் உபகாரம் செய்துக்கொள்வதைக் கொண்டு அல்லாஹ்வின் நெருக்கத்தை

237. ஆயினும், அப்பெண்களைத் தீண்டுவதற்கு முன் - ஆனால் மஹர் நிச்சயித்த பின் நீங்கள் தலாக் சொல்வீர்களாயின், நீங்கள் குறிப்பிட்டிருந்த மஹர் தொகையில் பாதி (அவர்களுக்கு) உண்டு-
அப்பெண்களோ அல்லது எவர் கையில் (அத்)திருமணம் பற்றிய பிடி இருக்கிறதோ அவர்களோ (முழுமையும்) மன்னித்து விட்டாலன்றி; - ஆனால், (இவ்விஷயத்தில்) விட்டுக் கொடுப்பது தக்வாவுக்கு (பயபக்திக்கு) மிக்க நெருக்கமானதாகும்; இன்னும், உங்களுக்கிடையே (ஒருவருக்கொருவர்) உபகாரம் செய்து கொள்வதையும் மறவாதீர்கள் - நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்வதை பார்(த்துக் கூலி கொடு)ப்பவனாக இருக்கின்றான்.

பெறமுடியும். அதாவது உயர் பண்புடையவர்கள் ஆகலாம். ஆக கணவனோ மனைவியோ பிரிந்துவிட எண்ணினால் அழகியமுறையில் பிரிந்துச் செல்லட்டும். சேர்ந்துவாழ நினைத்தால் அழகிய முறையில் சேர்ந்து வாழட்டும். நிச்சயமாக உங்கள் செயல்கள் யாவை என்பதை அல்லாஹ்வின் சட்டம் கண்காணித்துக் கொண்டே இருக்கின்றது என்பதை மறவாதீர்.

238 حٰفِظُوْا عَلَى الصَّلَوٰتِ وَالصَّلٰوةِ الْوُسْطٰى وَقُوْمُوْا لِلّٰهِ قٰنِتِيْنَ ۝

238. தொழுகைகளை (குறிப்பாக) நடுத்தொழுகையை பேணிக் கொள்ளுங்கள்; (தொழுகையின்போது) அல்லாஹ்வின் முன் னிலையில் உள்ளச்சப்பாட்டுடன் நில்லுங்கள்.

238. இப்படியாக இல்லற வாழ்வு பற்றியும் அதையொட்டி ஏற்படுகின்ற பிரச்சனை மற்றும் விவாகரத்து சம்பந்தமாக பல்வேறு சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பற்றியும் பார்த்தீர்கள். குடும்பவியல் பிரச்சனை மற்றும் விவாகரத்து விஷயமாக இருந்தாலும், வாழ்வின் மற்ற எந்த சமூக பிரச்சனையாக இருந்தாலும் நீங்கள் அந்தந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு நன்றாக பரிசீலனை செய்து நடுநிலமை வகித்து (4:135) அல்லாஹ்வின் சட்ட திட்டங்களுங்கு உட்பட்டு நீதி வழங்கவேண்டும். இதே போல் அல்லாஹ்வின் ஆட்சியமைப்பின் எல்லா துறைகளிலும் சட்ட ஒழுங்கை பேணி நடக்கவேண்டும்.

239 فَإِنْ خِفْتُمْ فَرِجَالًا اَوْ رُكْبَانًا ۚ فَاِذَآ اَمِنْتُمْ فَاذْكُرُوا اللّٰهَ كَمَا عَلَّمَكُمْ مَّا لَمْ تَكُوْنُوْا تَعْلَمُوْنَ ۝

239. ஆயினும், (பகைவர்களையோ அல்லது வேறெதையுமோ கொண்டு) நீங்கள் பயப்படும் நிலையில் இருந்தால், நடந்து கொண்டோ அல்லது சவாரி செய்து கொண்டோவாகிலும் தொழுது கொள்ளுங்கள்; பின்னர் நீங்கள் அச்சம் தீர்ந்ததும், நீங்கள் அறியாமல் இருந்ததை அவன் உங்களுக்கு அறிவித்ததைப் போன்று, (நிறைவுடன் தொழுது) அல்லாஹ்வை நினைவு கூருங்கள்.

239. இவையாவும் கூட்டமைப்பின் மூலம் செயல்படுத்தும் வழிமுறையாகும். எனவே அச்சமுள்ள நிலையிலும், நடக்கும்போதும், பயணத்திலும், சுமூகமான சூழ்நிலையிலும் ஆக எல்லா நிலையிலும் (3:191) (4:104) அல்லாஹ்வின் அறிவுரைகளை நினைவுகூர்ந்து அதன்படி செயல்படுங்கள். இதுநாள் வரையில் இந்த விஷயமெல்லாம் உங்களுக்கு தெரியாமல் இருந்தது.

240 وَالَّذِيْنَ يُتَوَفَّوْنَ مِنْكُمْ وَيَذَرُوْنَ اَزْوَاجًا ۚۖ وَّصِيَّةً لِّاَزْوَاجِهِمْ مَّتَاعًا اِلَى الْحَوْلِ غَيْرَ اِخْرَاجٍ ۚ فَاِنْ خَرَجْنَ فَلَا جُنَاحَ عَلَيْكُمْ فِيْ مَا فَعَلْنَ فِيْٓ اَنْفُسِهِنَّ مِنْ مَّعْرُوْفٍ ۗ وَاللّٰهُ عَزِيْزٌ حَكِيْمٌ ۝

240. இந்த பொதுப்படியான விஷயத்திற்குப்பின் மீண்டும் குடும்பவியல் பற்றி மேல்கொண்டு விளக்கங்களை தெரிந்துக் கொள்ளுங்கள். ஒருவர் தம் வாழ்வின் இறுதி கட்டத்தில் இருக்கும் நிலையில் தம் மனைவியை தன் மரணத்திற்குபின் குறைந்தது ஒரு வருடம் வரையில் தன் வீட்டிலேயே தங்கவைத்து அனைத்து தேவைகளையும் நிறைவேற்றித் தரும்படி மரண சாஸனம் செய்திடவேண்டும். அவள் தானகவே வீட்டைவிட்டு வெளியேறி முறைப்படி தம் வருங்கால தேவைகளை தானே நிறைவேற்றிக்கொள்ள முடிவெடுத்தால் அப்போது அவளை அழகியமுறையில் அனுப்பிவைப்பதில் குற்றமில்ல.

*240.* உங்களில் எவரேனும் மனைவியரை விட்டு இறக்கும் நிலையில் இருப்பார்களானால், தங்கள் மனைவியருக்கு ஓராண்டு வரை (உணவு, உடை போன்ற தேவைகளைக் கொடுத்து) ஆதரித்து, (வீட்டை விட்டு அவர்கள்) வெளியேற்றப்படாதபடி (வாரிசுகளுக்கு) அவர்கள் மரண சாசனம் கூறுதல் வேண்டும்; ஆனால், அப்பெண்கள் தாங்களே வெளியே சென்று முறைப்படி தங்கள் காரியங்களைச் செய்து கொண்டார்களானால், (அதில்) உங்கள் மீது குற்றமில்லை - மேலும் அல்லாஹ் வல்லமையுடையவனும், அறிவாற்றல் உடையோனும் ஆவான்.

அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் மிகவும் உறுதிமிக்கவை என்பதையும் அதே சமயத்தில் ஒவ்வொரு சட்டத்தின் நோக்கமும் உயர்ந்தவை என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்.

241 وَلِلْمُطَلَّقٰتِ مَتَاعٌۢ بِالْمَعْرُوْفِ‌ؕ حَقًّا عَلَى الْمُتَّقِيْنَ ○

*241.* மேலும், தலாக் கொடுக்கப்பட்ட பெண்களுக்கு நியாயமான முறையில் சம்ரட்சணை பெறுவதற்குப் பாத்தியமுண்டு - (இது) முத்தகீன்(பயபக்தியுடையவர்)கள் மீது கடமையாகும்.

241. இதேபோல் தலாக் அறிவிப்பிற்குபின் இத்தா காலத்தில் பெண்களுக்குத் தேவையான வசதிகளை ஏற்படுத்தித்தாருங்கள் (65: 6 & 7). அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை பேணி நடப்பவர்கள் மீது இது கடமையாகும்.

242 كَذٰلِكَ يُبَيِّنُ اللّٰهُ لَـكُمْ اٰيٰتِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ ○

*242.* நீங்கள் தெளிவாக உணர்ந்து (அதன்படி நடந்து வருமாறு) அல்லாஹ் உங்களுக்குத் தன்னுடைய வசனங்களை இவ்வாறு விளக்குகின்றான்.

242. இவ்வாறாக நீங்கள் அனைத்து விஷயங்களையும் நன்கறிந்து சிறந்த முறையில் செயலாற்றுவதற்காக அல்லாஹ்வின் சட்டதிட்டங்கள் தெளிவாக விளக்கப்படுகின்றன.

243 اَلَمْ تَرَ اِلَى الَّذِيْنَ خَرَجُوْا مِنْ دِيَارِهِمْ وَهُمْ اُلُوْفٌ حَذَرَ الْمَوْتِ ۖ فَقَالَ لَهُمُ اللّٰهُ مُوْتُوْا ثُمَّ اَحْيَاهُمْ ؕ اِنَّ اللّٰهَ لَذُوْ فَضْلٍ عَلَى النَّاسِ وَلٰكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَشْكُرُوْنَ ○

## ருகூஉ 32

*243.* (நபியே!) மரண பயத்தால் தம் வீடுகளைவிட்டும், ஆயிரக்கணக்கில் வெளியேறியவர்களை நீர் கவனிக்கவில்லையா? அல்லாஹ் அவர்களிடம் "இறந்து விடுங்கள்" என்று கூறினான்; மீண்டும் அவர்களை உயிர்ப்பித்தான்; நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள் மீது பெரும் கருணையுடையவன்; ஆனால், மனிதர்களில் பெரும்பாலோர் நன்றி செலுத்துவதில்லை.

243. அல்லாஹ்வின் ஆட்சியமைப்புக்கு எதிராக செயல்படுபவர்களை கட்டுபடுத்தி வைப்பது பற்றி 2 : 216-218 –ல் விளக்கம் அளிக்கப்பட்டது. ஆனால் இந்த தீயசக்திகளை ஒடுக்கி வைக்க வேண்டுமென்றால் தம் குடும்ப வாழ்வை பிரச்சனையில்லாமல் சிறந்தமுறையில் அமைத்துக்கொள்வது அவசியமாகிறது. இதற்கான வழிமுறைகள் 2:221-242 –ல் அறிவிக்கப்பட்டுள்ளன. இஸ்லாமிய ஆட்சியமைப்பின் பாதுகாப்பு மற்றும் உறுதியான செயல்பாடுகள் விஷயத்திற்கு மீண்டும் வாருங்கள். இது சம்பந்தமாக பனிஇஸ்ராயில் சமூகத்தினர் நடந்துக்கொண்டது பற்றி எண்ணிப்பாருங்கள். அவர்கள் எண்ணிக்கையில் ஆயிரக்கணக்கில் இருந்தனர். இருந்தும் எதிரியைக் கண்டு தம் உயிருக்கு பயந்து வீட்டைவிட்டு விரண்டோடி விட்டனர். அவர்களிடமிருந்த கோழைத்தனத்திற்கு காரணம் மரண பயம்தான். ஆனால் வாழ்வின் அடிப்படை கோட்பாடு என்ன? மரணத்தைக் கண்டு அஞ்சாதவன்தான் உயிர் வாழ்வதற்கு தகுதியானவன். (2 : 94) யார் உயிருக்கு பயந்து ஓடுகின்றானோ மரணம் அவனை துரத்தும். அவர்கள் இந்த பேருண்மையை அறிந்துக் கொண்டபின், புத்துயிர் பெற்று எதிரிகளை வீரத்தோடு எதிர்கொண்டனர். அதில் அவர்கள் வெற்றியும் கண்டனர்.

உலகில் சிறந்தமுறையில் வாழ்வதற்கு இதுவே அல்லாஹ்வின் புறத்திலிருந்து நிர்ணயிக்கப்பட்ட சட்டமாகும். இதைக் கொண்டுதான்

உலகில் மற்றவர்களைவிட உயர் அந்தஸ்துகளைப் பெற்று சிறந்தமுறையில் வாழமுடியும். ஆனால் இந்த உண்மையை பெரும்பாலோர் கண்டறிவதில்லை.

244 وَقَاتِلُوا فِي سَبِيلِ اللَّهِ وَاعْلَمُوا أَنَّ اللَّهَ سَمِيعٌ عَلِيمٌ ○

244. (முஃமின்களே!) நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் போரிடுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் (யாவற்றையும்) செவிமடுப்பவனாகவும், நன்கறிபவனாகவும் இருக்கின்றான் என்பதையும் அறிந்து கொள்ளுங்கள்.

244. அநியாயம், அக்கிரமத்தை ஒழித்து தர்மத்தை நிலைநாட்ட அல்லாஹ்வின் பாதையில் வீரத்தோடு போரிடும்படி அவர்கள் அறிவுறுத்தப்பட்டனர். எவருடைய உயிர் தியாகமும் வீண்போகாது என்றும் உறுதியளிக்கப்பட்டது. (2:154) ஆக எல்லா விஷயங்களும் அல்லாஹ்விற்கு நன்கு தெரியும் என்ற உண்மையை மறந்து விடக்கூடாது.

245 مَنْ ذَا الَّذِي يُقْرِضُ اللَّهَ قَرْضًا حَسَنًا فَيُضَاعِفَهُ لَهُ أَضْعَافًا كَثِيرَةً ۚ وَاللَّهُ يَقْبِضُ وَيَبْصُطُ وَإِلَيْهِ تُرْجَعُونَ ○

245. (கஷ்டத்திலிருப்போருக்காக) அல்லாஹ்வுக்கு அழகிய கடன் எவர் கொடுக்கின்றாரோ, அதை அவருக்கு அவன் இருமடங்காக்கிப் பன்மடங்காகச் செய்வான் - அல்லாஹ் தான் (உங்கள் செல்வத்தைச்) சுருக்குகிறான்; (அவனே அதைப்) பெருக்கியும் தருகிறான்; அன்றியும் நீங்கள் அவனிடமே மீட்டப்படுவீர்கள்.

245. சிறப்பான ஆட்சி மற்றும் உயர் பண்புகளைக்கொண்ட சிறந்த சமுதாயம் உருவாக பாடுபடும் இறைவனின் ஆட்சியமைப்பு ஏற்பட தம் செல்வங்களை அர்ப்பணிப்பதும் ஒரு முக்கியமான கடமையாகும். இதற்கு அழகியமுறையில் கடனுதவி செய்து வாருங்கள். கடன் என்று ஏன் சொல்லப்படுகிறது என்றால் அந்த செல்வங்கள் எல்லாம் தம் கையை விட்டு பிறரிடம் சென்று விடுகின்றதே என்ற எண்ணங்கள் உங்கள் மனதில் தோன்றலாம். ஆனால் உண்மையில் அவ்வாறு சென்றுவிடுவதில்லை. அவையாவும் பொதுசொத்தாக வளர்ந்து (National Wealth) பன்மடங்காகி உங்களிடமே வந்தடையும். ஆக செல்வப்பெருக்கம் மற்றும் செல்வங்கள் குன்றிவிடுதல் ஆகியவை எல்லாம் அல்லாஹ் நிர்ணயித்த சட்டதிட்டங்கள் படி நிகழக்கூடியவை ஆகும். அதை விட்டுவிட்டு வேறு வழிகளில் நீங்கள் எவ்வளவுதான் முயன்றாலும் உங்கள் முயற்சியில் தோல்வி அடைவீர்கள். இறுதியில் அல்லாஹ்வின் இந்த வழிமுறைக்கே வந்தடைவீர்கள்.

246 أَلَمْ تَرَ إِلَى الْمَلَإِ مِنْ بَنِي إِسْرَائِيلَ مِنْ بَعْدِ مُوسَىٰ إِذْ قَالُوا لِنَبِيٍّ لَهُمُ ابْعَثْ لَنَا مَلِكًا نُقَاتِلْ فِي سَبِيلِ اللَّهِ ۖ قَالَ هَلْ عَسَيْتُمْ إِنْ كُتِبَ عَلَيْكُمُ الْقِتَالُ أَلَّا تُقَاتِلُوا ۖ قَالُوا وَمَا لَنَا أَلَّا نُقَاتِلَ فِي سَبِيلِ اللَّهِ وَقَدْ أُخْرِجْنَا مِنْ دِيَارِنَا وَأَبْنَائِنَا ۖ فَلَمَّا كُتِبَ عَلَيْهِمُ الْقِتَالُ تَوَلَّوْا إِلَّا قَلِيلًا مِنْهُمْ ۗ وَاللَّهُ عَلِيمٌ بِالظَّالِمِينَ ○

246. வரலாற்றின் இன்னொரு சம்பவத்தையும் நீங்கள் தெரிந்துக் கொள்ளவேண்டும். இந்த சம்பவம் மூசா நபியின் மறைவிற்குப் பின் நிகழ்ந்தது. அக்காலத்தில் வாழ்ந்த சமுதாயத் தலைவர்கள் தம் இறைத்தூதரிடம் அல்லாஹ்வின் பாதையில் தம் பகைவர்களை எதிர்த்து போரிட தயாராக இருப்பதாக கூறினர். அதற்காக ஒரு படைத்தளபதி அமைத்துத் தரும்படியும் கோரினர். "இந்த அளவிற்கு போரில் ஆர்வம் காட்டுவதன் நோக்கம் என்ன? ஏனெனில் உண்மையிலேயே போர் தொடுக்க நேரிடும்போது நீங்கள் அதற்கு தயாராக இருப்பீர்களா? " என்று அந்த இறைத்தூதர் கேட்டார். "தம்மையும் தம் மக்களையும் வீடுகளை விட்டு வெளியேற்றியவர்களை சும்மா விட்டு விடமுடியுமா ? அவர்களை முறியடிக்காமல் விடலாமா?" என்று மார்தட்டிக் கொண்டனர். ஆனால் நடந்தது

*246. (நபியே!) மூஸாவுக்குப்பின் இஸ்ரவேல் மக்களின் தலைவர்களை நீர் கவனித்தீரா? அவர்கள் தம் நபியிடம்: "நாங்கள் அல்லாஹ்வின் பாதையில் போரிடுவதற்காக ஓர் அரசனை ஏற்படுத்துங்கள்" என்று கூறிய பொழுது அவர், "போர் செய்தல் உங்கள் மீது கடமையாக்கப் பட்டால், நீங்கள் போரிடாமல் இருந்துவிடுவீர்களா?" என்று கேட்டார்; அதற்கவர்கள்: "எங்கள் மக்களையும், எங்கள் வீடுகளையும்விட்டு நாங்கள் வெளியேற்றப் பட்டபின், அல்லாஹ்வின் பாதையில் நாங்கள் போரிடாமல் இருக்க எங்களுக்கு என்ன வந்தது?" எனக் கூறினார்கள்; எனினும் போரிடுமாறு அவர்களுக்குக் கட்டளையிடப்பட்ட பொழுதோ அவர்களில் ஒரு சிலரைத் தவிர மற்றெல்லோரும் புறமுதுகு காட்டித் திரும்பிவிட்டனர் - (இவ்வாறு) அக்கிரமம் செய்வோரை அல்லாஹ் நன்கறிவான்.*

என்னவோ அந்த இறைத்தூதர் சந்தேகித்தபடிதான். அதாவது போருக்காக கட்டளை விடுத்தபோது அவர்களில் ஒரு சிலரைத் தவிர பெரும்பாலோர் புறமுதுகு காட்டி ஓடிவிட்டனர். இறை வழிகாட்டுதலை தட்டி கழிப்பதிலேயே பழக்கப்பட்டவர்கள் இந்த கட்டளையை மட்டும் எவ்வாறு ஏற்று நடப்பார்கள்? ஆக அவர்கள் மனதிலுள்ள எண்ணங்கள் எல்லாம் அல்லாஹ்விற்கு நன்றாகத் தெரியும். இப்போது உங்கள் மனோநிலை என்ன என்பதும் அல்லாஹ்விற்கு நன்றாகத் தெரியும்.

247 وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اللّٰهَ قَدْ
بَعَثَ لَكُمْ طَالُوْتَ مَلِكًا ؕ قَالُوْٓا
اَنّٰى يَكُوْنُ لَهُ الْمُلْكُ عَلَيْنَا وَنَحْنُ
اَحَقُّ بِالْمُلْكِ مِنْهُ وَلَمْ يُؤْتَ سَعَةً
مِّنَ الْمَالِ ؕ قَالَ اِنَّ اللّٰهَ اصْطَفٰىهُ
عَلَيْكُمْ وَزَادَهٗ بَسْطَةً فِى الْعِلْمِ وَالْجِسْمِ ؕ
وَاللّٰهُ يُؤْتِىْ مُلْكَهٗ مَنْ يَّشَآءُ ؕ وَاللّٰهُ
وَاسِعٌ عَلِيْمٌ ○

247. தாலூத்தை படைத்தளபதியாக அல்லாஹ் நிர்ணயித்துள்ளதாக அந்த இறைத்தூதர் முன்மொழிந்த போது உடனே அவர்கள் அதற்கு ஆட்சேபனை தெரிவித்தனர். "தாலூத்தைவிட நாங்களே செல்வத்திலும் அதிகார பலத்திலும் சிறந்தவர்களாக இருக்கும்போது அவருடைய தலைமையை நாங்கள் எப்படி ஏற்றுக்கொள்வது?" என்று முறையிட்டனர். அதற்கவர், "படைத் தலைவனாக ஆவதற்கு செல்வம்தான் அடிப்படை தகுதி என்பதல்ல. மாறாக நல்ல உடல் வலிமையும் அறிவாற்றலும் திறமையும் மிகவும் இன்றியமையாதது. இவையெல்லாம் அல்லாஹ்வின் விதிமுறையின்படி தாலூத்துக்கு கிடைத்துள்ளன. மேலும் இந்த பேராற்றல்களை பெற்ற படைத்தலைவன் தன் சொந்த நலனுக்காக பயன்படுத்துவதில்லை. பொது மக்களின் நலன்களை கருதியே செயல்படுவான். இதற்கெல்லாம் நீங்கள் தகுதியானவர்கள் அல்ல. ஆக ஒருவன் அரசனாவதும் படைத் தளபதியாவதும் தகுதிகளின் அடிபடையில்தான் என்பது அல்லாஹ் நிர்ணயித்துள்ள சட்டமாகும். இவையெல்லாம் தெளிவான ஞானத்தின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படுகின்ற விஷயங்களாகும். நீங்கள் ஆசைப்படுவது போல் கண்மூடித்தனமாக யாருக்கும் தானமாக அளிக்கப்படுகின்ற ஒன்றல்ல" என்றார்.

*247. அவர்களுடைய நபி அவர்களிடம், "நிச்சயமாக அல்லாஹ் தாலூத்தை உங்களுக்கு அரசனாக அனுப்பியிருக்கிறான்" என்று கூறினார்; (அதற்கு) அவர்கள், "எங்கள் மீது அவர் எப்படி அதிகாரம் செலுத்த முடியும்? அதிகாரம் செலுத்த அவரை விட நாங்கள் தாம் தகுதியுடையவர்கள்; மேலும், அவருக்குத் திரண்ட செல்வமும் கொடுக்கப்படவில்லையே!" என்று கூறினார்கள்; அதற்கவர், "நிச்சயமாக அல்லாஹ் உங்களைவிட (மேலாக) அவரையே தேர்ந்தெடுத்திருக்கின்றான்; இன்னும், அறிவாற்றலிலும், உடல் வலிமையிலும் அவருக்கு அதிகமாக வழங்கியுள்ளான் - அல்லாஹ் தான் நாடியோருக்குத் தன் (அரச) அதிகாரத்தை வழங்குகிறான்; இன்னும் அல்லாஹ் விசாலமான (கொடையுடைய)வன்; (யாவற்றையும்) நன்கறிபவன்" என்று கூறினார்.*

248 وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اٰيَةَ مُلْكِهٖٓ اَنْ
يَّاْتِيَكُمُ التَّابُوْتُ فِيْهِ سَكِيْنَةٌ مِّنْ
رَّبِّكُمْ وَبَقِيَّةٌ مِّمَّا تَرَكَ اٰلُ مُوْسٰى وَ
اٰلُ هٰرُوْنَ تَحْمِلُهُ الْمَلٰٓئِكَةُ ؕ اِنَّ فِىْ ذٰلِكَ
لَاٰيَةً لَّكُمْ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ ○

248. அந்த இறைத்தூதர் இன்னொரு விஷயத்தையும் அவர்களிடம் கூறியிருந்தார். அதவாது தாலூத் தமக்கு அளிக்கப்பட்டிருக்கும் ஆட்சி அதிகாரம் மற்றும் அறிவாற்றலைக் கொண்டு ஒரு மாபெரும் சாதனையை ஏற்படுத்துவார். அவர் கொண்டுவரும் செயல்திட்டங்கள்

248. இன்னும், அவர்களுடைய நபி அவர்களிடம், “நிச்சயமாக அவருடைய அரசதிகாரத்திற்கு அடையாளமாக உங்களிடம் ஒரு தாபூத் (பேழை) வரும்; அதில் உங்களுக்கு, உங்கள் இறைவனிடம் இருந்து ஆறுதல் (கொடுக்கக் கூடியவை) இருக்கும்; இன்னும், மூஸாவின் சந்ததியினரும்; ஹாரூனின் சந்ததியினரும் விட்டுச் சென்றவற்றின் மீதம் உள்ளவையும் இருக்கும்; அதை மலக்குகள் (வானவர்கள்) சுமந்து வருவார்கள்; நீங்கள் முஃமின்களாக இருப்பின் நிச்சயமாக இதில் உங்களுக்கு அத்தாட்சி இருக்கின்றது” என்று கூறினர்.

உங்களிடமிருக்கும் கோழைத்தனத்தைப் போக்கி சிறந்த செயல்வீரர்களாக உருவாக்கி வாழ்வின் உண்மை நோக்கத்தை எடுத்துரைப்பதாக அமையும். அதனால் உங்கள் வாழ்வில் வெற்றியும் நிம்மதியும் கண்டிப்பாக கிடைக்கும். மூசாவும் அவரது சகோதரர் ஹாரூனின் சந்ததியரும் விட்டுச்சென்ற அதே பணியை இவரும் தொடர்ந்து நிறைவேற்றி வருவார். இந்த செயல் திட்டங்களின் அடிப்படையில் செயல்படும்போது பிரபஞ்ச இயற்கை சக்திகள் யாவும் காலங்காலமாக துணை நின்றதுபோல் உங்களுக்கும் துணை புரியும்.

நீங்கள் உண்மையிலே அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்றுக் கொள்பவர்களாக இருந்தால் தாலூத் படைத்த சாதனைகளில் பல படிப்பினைகளும் சான்றுகளும் உள்ளன என்பதை அறிவீர்கள்.

249 فَلَمَّا فَصَلَ طَالُوتُ بِالْجُنُودِ قَالَ إِنَّ اللَّهَ مُبْتَلِيكُمْ بِنَهَرٍ فَمَنْ شَرِبَ مِنْهُ فَلَيْسَ مِنِّي وَمَنْ لَمْ يَطْعَمْهُ فَإِنَّهُ مِنِّي إِلَّا مَنِ اغْتَرَفَ غُرْفَةً بِيَدِهِ فَشَرِبُوا مِنْهُ إِلَّا قَلِيلًا مِنْهُمْ فَلَمَّا جَاوَزَهُ هُوَ وَالَّذِينَ آمَنُوا مَعَهُ قَالُوا لَا طَاقَةَ لَنَا الْيَوْمَ بِجَالُوتَ وَجُنُودِهِ قَالَ الَّذِينَ يَظُنُّونَ أَنَّهُمْ مُلَاقُو اللَّهِ كَمْ مِنْ فِئَةٍ قَلِيلَةٍ غَلَبَتْ فِئَةً كَثِيرَةً بِإِذْنِ اللَّهِ وَاللَّهُ مَعَ الصَّابِرِينَ ○

ருகூஃ 33

249. பின்னர், தாலூத் படைகளுடன் புறப்பட்ட போது அவர்: “நிச்சயமாக அல்லாஹ் உங்களை (வழியில்) ஓர் ஆற்றைக் கொண்டு சோதிப்பான்; யார் அதிலிருந்து (நீர்) அருந்துகின்றாரோ அவர் என்னைச் சேர்ந்தவரல்லர்; தவிர, ஒரு சிறங்கைத் தண்ணீர் தவிர யார் அதில் நின்றும் (அதிகமாக) நீர் அருந்தவில்லையோ நிச்சயமாக அவர் என்னைச் சார்ந்தவர்” என்று கூறினர்; அவர்களில் ஒரு சிலரைத் தவிர (பெரும்பாலோர்) அதிலிருந்து (அதிகமாக நீர்) அருந்தினார்கள்; பின்னர் தாலூத்தும், அவருடன் ஈமான் கொண்டோரும் ஆற்றைக் கடந்ததும், (ஒரு சிறங்கைக்கும் அதிகமாக நீர் அருந்தியோர்) “ஜாலூத்துடனும், அவன் படைகளுடனும் இன்று போர் செய்வதற்கு எங்களுக்கு வலுவில்லை” என்று கூறிவிட்டனர்; ஆனால், நாம் நிச்சயமாக அல்லாஹ்வைச் சந்திப்போம் என்று உறுதி கொண்டிருந்தோர், “எத்தனையோ சிறு கூட்டத்தார்கள், பெருங் கூட்டத்தாரை அல்லாஹ்வின் (அருள் மிக்க) அனுமதி கொண்டு வென்றிருக்கின்றார்கள்; மேலும் அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கின்றான்” என்று கூறினார்கள்.

249. ஆக தாலூத் படைத்தளபதியாக பொருப்பேற்று போருக்காக தம் வீரர்களுடன் புறப்பட்டுச் சென்றார். அந்த படை வீரர்களிடையே எந்த அளவிற்கு ஒழுக்கமும் பயிற்சியும் வளர்ந்துள்ளன என்பதை கண்டறிய, “ நாம் செல்லும் பாதையின் குறுக்கே ஒரு நதி வரும். அது சமயம் யாரும் அதில் நீர் அருந்தக்கூடாது. யார் தாகத்தை தணித்துக்கொள்ள ஒரு குவளை மட்டும் நீரருந்தி பயணத்தை தொடர்கிறார்களோ அவர்கள் மட்டுமே நம்முடன் இருப்பார்கள்.” என்று கட்டளை பிறப்பித்தார்.

ஆனால் இந்த பரிசோதனையில் தாலூத் தோல்வியை சந்தித்தார். அதாவது அந்த படை வீரர்களில் ஒரு சிலரைத் தவிர அநேகர் நீர் அருந்தி அலுத்துவிட்டனர். ஆகவே ஜாலூத்துடன் போரிட எங்களுக்கு வலுவில்லை என்று கூறி அங்கேயே தங்கிவிட்டனர். யார் அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை ஏற்று மேலும் பொறுப்பேற்றுக்கொண்ட பணியை முடித்தே ஆகவேண்டும் என்று உறுதியாக இருந்தார்களோ அவர்கள் ஒரு கையளவு நீரை மட்டும் தேவைக்கு அருந்திவிட்டு தாலூத்துடன் சென்று போரிட ஆயத்தமானார்கள். “ஆக எண்ணிக்கையில் ஒரு சிறு கூட்டமாக இருந்த போதிலும் ஒரு பெரும் படையை முறியடித்து விடலாம். எனவே போரில் வெற்றி தோல்வி என்பது படைப்பலத்தை மட்டும் வைத்து பாக்கக் கூடாது. அதை விட போரின் உயர் நோக்கம், மனஉறுதிப்பாடு, செயல்வேகம் மற்றும் சரியான திட்டங்களும்தான் போரின் வெற்றிக்கு அல்லாஹ் நிர்ணயித்துள்ள வழிமுறைகளாகும். யார் அதனடிப்படையில் நிலைத்து நின்று முயலுகிறார்களோ அவர்கள் பக்கமே அல்லாஹ்வின் உதவிகளும் இருக்கும்” என்று படைவீரர்களிடம் வீர முழக்கமிட்டார்.

250 وَلَمَّا بَرَزُوْا لِجَالُوْتَ وَجُنُوْدِهٖ قَالُوْا رَبَّنَآ اَفْرِغْ عَلَيْنَا صَبْرًا وَّثَبِّتْ اَقْدَامَنَا وَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكٰفِرِيْنَ ۗ

*250. மேலும், ஜாலூத்தையும், அவன் படைகளையும் (களத்தில் சந்திக்க) அவர்கள் முன்னேறிச் சென்ற போது, "எங்கள் இறைவா! எங்களுக்குப் பொறுமையைத் தந்தருள்வாயாக! எங்கள் பாதங்களை உறுதியாக்குவாயாக! காஃபிரான இம்மக்கள் மீது (நாங்கள் வெற்றி யடைய) உதவி செய்வாயாக!" எனக் கூறி(ப் பிரார்த்தனை செய்த)னர்.*

250. மேலும் ஜாலுத்தையும் அவன் படைகளையும் களத்தில் சந்தித்த வேளையில், "எங்கள் இறைவா ! எங்களுக்கு இதில் வெற்றி பெற மன உறுதிப்பாட்டை தந்தருள்வாயாக. எங்களிடமுள்ள தைரியம் நிலைகுலையாமல் இருக்க எங்கள் பாதங்களை உறுதியாக்குவாயாக. உலக அமைதியை சீர்குலைத்துக் கொண்டிருக்கும் இந்த எதிரிகளை தோல்வியுறச் செய்து எங்களை வெற்றி பெறச் செய்வாயாக." என்று மனதில் எழுந்த இலட்சியங்களை தம் இறைவனிடம் சமர்ப்பித்தவண்ணம் தாலூத்தும் அவரது படைவீரர்களும் களத்தில் இறங்கினார்கள்.

251 فَهَزَمُوْهُمْ بِاِذْنِ اللّٰهِ ۙ وَقَتَلَ دَاوٗدُ جَالُوْتَ وَاٰتٰىهُ اللّٰهُ الْمُلْكَ وَالْحِكْمَةَ وَعَلَّمَهٗ مِمَّا يَشَآءُ ۗ وَلَوْلَا دَفْعُ اللّٰهِ النَّاسَ بَعْضَهُمْ بِبَعْضٍ ۙ لَّفَسَدَتِ الْاَرْضُ وَلٰكِنَّ اللّٰهَ ذُوْ فَضْلٍ عَلَى الْعٰلَمِيْنَ

*251. இவ்வாறு அவர்கள் அல்லாஹ்வின் (அருள் மிக்க) அனுமதி கொண்டு ஜாலூத்தின் படையை முறியடித்தார்கள்; தாவூது ஜாலூத்தைக் கொன்றார்; அல்லாஹ் (தாவூதுக்கு) அரசுரிமையையும், ஞானத்தையும் கொடுத்தான்; தான் விரும்பியவற்றையெல்லாம் அவருக்குக் கற்பித்தான்; (இவ்விதமாக) அல்லாஹ் மக்களில் (நன்மை செய்யும்) ஒரு கூட்டத்தினரைக் கொண்டு, (தீமை செய்யும்) மற்றொரு கூட்டத்தினரைத் தடுக்காவிட்டால், (உலகம் சீர்கெட்டிருக்கும்.) ஆயினும், நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தார் மீது பெருங்கருணையுடையோனாக இருக்கின்றான்.*

251. ஆக அல்லாஹ்வின் வழிகாட்டுதலின் அடிப்படையில் அநியாயத்தையும் அதர்மத்தையும் ஒழித்துக்கட்ட ஒரு மாபெரும் இலட்சியத்திற்காக தாலூத் போரிட்டார். அதில் ஜாலூத் படையினரை வெற்றியும் கொண்டார். மேலும் அந்த படையிலிருந்த தாவூத் என்பவர் கொடுங்கோலனான ஜாலூத்தை கொன்றார். இப்படியாக பெரும் நாட்டை ஆளக்கூடிய தகுதியும் ஞானமும் தாலூத்திற்கு கிடைத்தது. மேலும் அவருக்கு இறை வழிகாட்டுதல்களும் கிடைத்து சிறந்ததொரு ஆட்சியை ஏற்படுத்தினார்.

இவ்வாறாக மக்களுக்கு நன்மை செய்யும் ஒரு கூட்டத்தினரைக் கொண்டு அநியாய அட்டூழியங்கள் செய்துக் கொண்டிருக்கும் கூட்டத்தினரை அழித்திட வேண்டும் என்பதே காலம் காலமாக இருந்துவரும் அல்லாஹ்வின் நிரந்தர செயல்திட்டமாகும். (22:39) இதை உங்களுக்கு விளக்கிடத்தான் வரலாற்றின் இந்த தொகுப்பு உங்கள் கவனதிற்கு கொண்டுவரப்படுகிறது. அல்லாஹ்வின் புறத்திலிருந்து இப்படிப்பட்ட ஏற்பாடுகள் இல்லை என்றால் உலகில் எங்கு நோக்கினாலும் அநியாயங்களும் அட்டூழியங்களும் உண்டாகி உலகமே சீரழிந்துப் போயிருக்கும். அவ்வாறு மனிதஇனம் அழிந்துபோவதை அல்லாஹ் விரும்புவதில்லை. மனிதன் அனைத்து வளங்களையும் பெற்று சிறப்பாக வாழவேண்டும் என்பதே அல்லாஹ்வின் நாட்டம். ஆக அகிலத்தார் அனைவரையும் பாதுகாக்க செய்திருக்கும் இந்த ஏற்பாடு அல்லாஹ்வின் நிகரற்ற வல்லமையை பிரதிபலிப்பதாக உள்ளது.

252 تِلْكَ آيَاتُ اللَّهِ نَتْلُوهَا عَلَيْكَ بِالْحَقِّ وَإِنَّكَ لَمِنَ الْمُرْسَلِينَ ۝

*252. (நபியே!) இவை அல்லாஹ்வின் வசனங்களாகும்; இவற்றை நாம் உண்மையைக் கொண்டு உமக்கு ஓதிக் காண்பிக்கின்றோம்; நிச்சயமாக நீர் (நம்மால் அனுப்பப்பட்ட) தூதர்களில் ஒருவர் தாம்.*

252. இவைகள்தாம் அல்லாஹ்வின் புறத்திலிருந்து இறக்கியருளப்படுகின்ற உண்மை சம்பவங்களின் தொகுப்புகளாகும். இவையெல்லாம் புதிதான ஒன்றல்ல. காலம் காலமாக நடந்து வந்த உண்மை சம்பவங்களே. அந்தந்த காலத்தில் வந்த இறைத்தூதர்கள் அனைவருக்கும் எடுத்துரைக்கப்பட்டன. இறைச் செய்திகளை எடுத்துரைப்பவரே! அந்த பட்டியலில் நீரும் ஒருவராக இருக்கின்றீர்.

253 تِلْكَ الرُّسُلُ فَضَّلْنَا بَعْضَهُمْ عَلَىٰ بَعْضٍ ۘ مِنْهُمْ مَنْ كَلَّمَ اللَّهُ ۖ وَرَفَعَ بَعْضَهُمْ دَرَجَاتٍ ۚ وَآتَيْنَا عِيسَى ابْنَ مَرْيَمَ الْبَيِّنَاتِ وَأَيَّدْنَاهُ بِرُوحِ الْقُدُسِ ۗ وَلَوْ شَاءَ اللَّهُ مَا اقْتَتَلَ الَّذِينَ مِنْ بَعْدِهِمْ مِنْ بَعْدِ مَا جَاءَتْهُمُ الْبَيِّنَاتُ وَلَٰكِنِ اخْتَلَفُوا فَمِنْهُمْ مَنْ آمَنَ وَمِنْهُمْ مَنْ كَفَرَ ۚ وَلَوْ شَاءَ اللَّهُ مَا اقْتَتَلُوا وَلَٰكِنَّ اللَّهَ يَفْعَلُ مَا يُرِيدُ ۝

253. இப்படியாக வந்த இறைத்தூதர்கள் அனைவரும் இறைக்கொள்கை கோட்பாடுகள் என்ற விஷயத்தில் ஒரே அடிப்படையைக் கொண்டவர்கள்தாம். (2:285) ஆனால் அவர்களுடைய போதனைகள் எந்த அளவிற்கு மக்கள் வரை சென்றடைந்தன? அதில் எத்தனை பேர் வெற்றிக்கண்டனர் என்பதைப் பார்க்கும்போது அதில் சிலர் சிலரை மிகைத்திருந்தார்கள் என்பது தெளிவாகிறது. அந்த வகையில் ஒரு சில இறைத்தூதர்களிடம் அல்லாஹ் திரைக்கு அப்பாலிருந்த நிலையில் பேசினான் (42:51). ஒரு சில இறைத்தூதர்களுக்கு ஆட்சிஅதிகாரம் கிடைத்திருந்தன. அந்த இறைத்தூதர்கள் வரிசையில் மர்யமின் குமாரரான ஈஸாவும் அடங்குவர். அவருக்கு தெள்ளத்தெளிவான வாழ்க்கை நெறிமுறைகளும் அவற்றை செயல்படுத்த மனஉறுதியும் அளிக்கப்பட்டன. அந்த போதனைகளைக் கொண்டு அம்மக்களிடம் நல்லறிவாற்றலும் பண்பும் வளர்ந்தன.

மற்ற உயிரினங்களுக்கு நிர்ணயிக்கப்பட்டது போல மனிதர்களும் தம் இயல்பின் அடிப்படையிலயே வாழவேண்டும் என்பது அல்லாஹ்வின் செயல்திட்டமாக இருந்திருந்தால் அவைகள் வாழ்வதுபோல் மனிதர்களையும் அவ்வாறு வாழ வைத்திருக்க முடியும். இது விஷமாக இறைத்தூதர்கள் தெளிவான ஆதாரங்களை சமர்ப்பித்தும் அவர்களுடைய மறைவிற்குப்பின் அவர்கள் தங்களுக்கிடையே சண்டைசச்சரவு எதுவும் செய்துக் கொண்டிருக்க மாட்டார்கள். ஆனால் அல்லாஹ்வின் செயல்திட்டம் அவ்வாறில்லை. மனிதனுக்கு முழுஅளவில் சுதந்திரம்

## பகுதி 3

*253. அத்தூதர்கள் - அவர்களில் சிலரைச் சிலரைவிட நாம் மேன்மையாக்கி இருக்கின்றோம்; அவர்களில் சிலருடன் அல்லாஹ் பேசியிருக்கின்றான்; அவர்களில் சிலரைப் பதவிகளில் உயர்த்தியும் இருக்கின்றான்; தவிர மர்யமுடைய மகன் ஈஸாவுக்கு நாம் தெளிவான அத்தாட்சிகளைக் கொடுத்தோம்; இன்னும், ரூஹுல் குதுஸி (எனும் பரிசுத்த ஆத்மாவைக்) கொண்டு அவருக்கு உதவி செய்தோம்; அல்லாஹ் நாடியிருந்தால், தங்களிடம் தெளிவான அத்தாட்சிகள் வந்த பின்னரும், அத்தூதுவர்களுக்குப்பின் வந்த மக்கள் (தங்களுக்குள்) சண்டை செய்து கொண்டிருக்க மாட்டார்கள்; ஆனால் அவர்கள் வேறுபாடுகள் கொண்டனர்; அவர்களில் ஈமான் கொண்டோரும் உள்ளனர்; அவர்களில் நிராகரித்தோரும் (காஃபிரானோரும்) உள்ளனர்; அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் (இவ்வாறு) சண்டை செய்து கொண்டிருக்க மாட்டார்கள்; ஆனால் அல்லாஹ் தான் நாடியவற்றைச் செய்கின்றான்.*

அளிக்கப்பட்டு அவன் எந்த வழிமுறையை வேண்டுமானாலும் தனக்காக தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் (18:29) என்பதே அல்லாஹ்வின் செயல்திட்டமாகும். இதனால் அவர்களுக்கிடையே இத்தனை விவாதங்களும் சண்டைசச்சரவுகளும் ஏற்படுகின்றன. ஒரு சிலர் அல்லாஹ்வின் வழிகாட்டுதலை ஏற்று நடந்து சிறப்பாக வாழ்ந்தனர். ஒரு சிலர் அவற்றை நிராகரித்து அவற்றிற்கு மாறுசெய்தனர். மற்ற உயிரினங்களுக்கு செய்யப்பட்ட ஏற்பாடுகள் போல் மனிதனும் ஒரு குறிப்பிட்ட இயல்பின் அடிப்படையில்தான் வாழவேண்டும் என்ற நிலை மனிதனுக்கு இல்லை.

இப்போது உங்கள் மனதில் ஒரு கேள்வி எழுகிறது. அல்லாஹ் மனிதனுக்கு இப்படி முழு சுதந்திரத்தை கொடுத்து மனிதர்களுக்குள் சண்டைசச்சரவு ஏன் ஏற்படவேண்டும் என்பதே அந்த கேள்வி. அனால் இவை உங்களுடைய விருப்பம் போன்று ஏற்படக்கூடிய ஒன்றல்ல. இவையெல்லாம் அகிலங்களனைத்தையும் படைத்து பரிபாலித்து அவற்றில் ஒவ்வொன்றும் எவ்வாறு செயல்படவேண்டும் என்பது முழு ஞானத்தையும் வல்லமையும் பெற்ற அல்லாஹ்வின் செயல்திட்டங்களாகும். அதில் மனிதனுக்கு சுதந்நதிரம் அளிக்கப்பட்டதும் ஒன்றாகும்.

254 يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْٓا اَنْفِقُوْا مِمَّا رَزَقْنٰكُمْ مِّنْ قَبْلِ اَنْ يَّاْتِيَ يَوْمٌ لَّا بَيْعٌ فِيْهِ وَلَا خُلَّةٌ وَّلَا شَفَاعَةٌ ۗ وَالْكٰفِرُوْنَ هُمُ الظّٰلِمُوْنَ ○

## ருகூஃ 34

*254. நம்பிக்கை கொண்டோரே! பேரங்களும், நட்புறவுகளும், பரிந்துரைகளும் இல்லாத அந்த (இறுதித் தீர்ப்பு) நாள் வருவதற்கு முன்னர், நாம் உங்களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழிகளில்) செலவு செய்யுங்கள்; இன்னும், காஃபிர்களாக இருக்கின்றார்களே அவர்கள் தாம் அநியாயக்காரர்கள்.*

254. இறை வழிகாட்டுதல்களை ஏற்றுக்கொண்டவர்களே ! காலஞ்சென்ற நபிமார்களின் வாழ்க்கை வரலாறு, அவர்களுடைய போதனைகள் மற்றும் சாதனைகள் யாவற்றையும் உங்களுக்கு ஏன் விளக்கப்படுகின்றன என்று தெரியுமா? முனித வாழ்வின் நிரந்தர சந்தோஷங்கள் என்பது அல்லாஹ்வின் அமைப்பு முறையை ஏற்படுத்தி அதன்படி செயல்பட்டதால் மட்டுமே கிடைத்தன. அதன்படி செயல்பட்டால்தான் இப்போதும் கிடைக்கும். இதை விளக்கிடவே அந்த இறைத்தூதர்களின் வரலாறு உங்கள்முன் கொண்டு வரப்படுகிறது.

உங்களுக்கு கிடைத்துள்ள செல்வங்களை சமுதாய வளர்ச்சிக்காக அர்ப்பணிக்க முன்வாருங்கள். இவ்வாறு செய்வதற்கு இப்போது உங்களுக்கு வாய்ப்புள்ளது. ஆனால் இந்த வாய்ப்பு உங்களை விட்டு பறிபோன பிறகு உங்களால் ஒருபோதும் செய்ய இயலாது. மேலும் அவ்வாறு செய்யவில்லை என்றால் உங்களுக்கு வரவிருக்கின்ற சந்தோஷங்கள் வராமலே போயிவிடும். நீங்கள் நினைப்பதுபோல் கொடுக்கல் வாங்கல் என்ற இந்த பேரத்தை எப்போது வேண்டுமானாலும் செய்துக்கொள்ளலாம் என்பது ஒருபோதும் நடக்காது. யாருடைய நட்புறவுகளாலோ அல்லது

பரிந்துரையின் பேரிலோ இந்த வாய்ப்பை மீண்டும் பெறஇயலாது. இந்த பேருண்மையை ஏற்க மறுப்பவர்கள் தம் அழிவை தாமே தேடிக்கொள்கின்றனர் என்பதை தெரிந்துக்கொள்ளட்டும்.

اَللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ اَلْحَيُّ الْقَيُّوْمُ ۚ 255
لَا تَاْخُذُهٗ سِنَةٌ وَّلَا نَوْمٌ ۚ لَهٗ
مَا فِي السَّمٰوٰتِ وَمَا فِي الْاَرْضِ ۗ
مَنْ ذَا الَّذِيْ يَشْفَعُ عِنْدَهٗٓ اِلَّا
بِاِذْنِهٖ ۚ يَعْلَمُ مَا بَيْنَ اَيْدِيْهِمْ وَ
مَا خَلْفَهُمْ ۚ وَلَا يُحِيْطُوْنَ بِشَيْءٍ
مِّنْ عِلْمِهٖٓ اِلَّا بِمَا شَآءَ ۚ وَسِعَ
كُرْسِيُّهُ السَّمٰوٰتِ وَالْاَرْضَ ۚ وَ
لَا يَـُٔوْدُهٗ حِفْظُهُمَا ۚ وَهُوَ الْعَلِيُّ
الْعَظِيْمُ ○

*255. அல்லாஹ் - அவனைத் தவிர (வணக்கத் திற்குரிய) நாயன் வேறு இல்லை; அவன் என் றென்றும் ஜீவித்திருப்பவன்; என்றென்றும் நிலைத்திருப்பவன்; அவனை அரி துயிலோ, உறக் கமோ பீடிக்கா; வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன; அவன் அனுமதியின்றி அவனிடம் யார் பரிந் துரை செய்ய முடியும்?*

*(படைப்பினங்களுக்கு) முன்னருள்ளவற்றை யும், அவற்றுக்குப் பின்னருள்ளவற்றையும் அவன் நன்கறிவான்; அவன் ஞானத்திலிருந்து எதனையும், அவன் நாட்டமின்றி, எவரும் அறிந்து கொள்ள முடியாது; அவனுடைய அரியாசனம் (குர்ஸிய்யு) வானங்களிலும், பூமியிலும் பரந்து நிற்கின்றது; அவ்விரண்டையும் காப் பது அவனுக்குச் சிரமத்தை உண்டாக்குவதில்லை - அவன் மிக உயர்ந்தவன்; மகிமை மிக்கவன்.*

255. நினைவில் கொள்ளுங்கள். இறைவனின் பிரம்மாண்டமான இந்த பரிபாலன அமைப்புமுறை (Allah's System) – அல்லாஹ்வைத் தவிர வேறு யாருடைய அதிகாரத்திற்கும் உட்பட்டு செயல்படக்கூடிய ஒன்றல்ல. அனைவரும் உயிர்வாழ ஏற்பாடு செய்தவனும் அவனே. ஆனால் தான் உயிர் பெற்றிருக்க யாருடைய உதவியும் அவனுக்குத் தேவையில்லை. அனைத்து உயிரினங்களும் ஒரு குறிப்பிட்ட காலம்வரைதான் உயிர்வாழ்கின்றன. ஆனால் அல்லாஹ்வோ என்றென்றும் நிலைத்திருந்து செயல்படுபவன் ஆவான். அகிலங்கள் அனைத்தையும் பாதுகாப்பதில் இம்மியளவும் சோர்வடைவதுமில்லை. எதுவும் அவனுக்கு தெரியாமல் நடைபெறவும் முடியாது. வானுலகிலும் மண்ணுலகிலும் உள்ளவையாவும் அவன் ஏற்படுத்தியுள்ள செயல்திட்டங்களை நிறைவேற்றவே செயல்படுகின்றன. இதில் மாற்றத்தை கொண்டு வர யாராலும் முடியாது. அப்படி செய்ய யாருடைய பரிந்துரையும் செல்லாது. அவனுடைய சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு செயல்படுவதை தவிர வேறு எதுவும் பரிந்துரையாக நிற்காது. உங்கள் கண்முன் இருக்கும் அகிலங்களானாலும் சரி உங்கள் பார்வைக்கு அப்பால் உள்ளவை ஆனாலும் சரி அங்கு நடப்பவை யாவும் அவனுக்கு தெரியும். ஆக எந்த ஒரு நிகழ்வும் அவனுடைய ஞானத்திற்கு அப்பாற்பட்டதாக விளங்கமுடியாது. இந்த அளவிற்கு அல்லாஹ்வின் ஞானவல்லமையும் பேராற்றலும் விண்ணுலகிலும் மண்ணுலகிலும பரந்து விரிந்து கிடக்கின்றன. அவற்றையெல்லாம் கட்டி காப்பாற்றி வழி நடத்திச் செல்வதில் இம்மியளவும் அல்லாஹ் களைத்து போகமாட்டான்.

256. இந்த அளவிற்கு பேராற்றலும் வல்லமையுமுடைய அல்லாஹ் பிரபஞ்சத்தில் மற்ற படைப்புகள் இயல்பாக செயல்படும்படி ஏற்பாடு செய்திருப்பது போல் மனித உலகில் மனிதனையும் அவ்வாறு செயல்பட வைத்திருக்க முடியும். மனிதனும் அதனடிப்படையில் இயல்பாக செயல்பட்டுக் கொண்டிருப்பான். ஆனால் மனித விஷயத்தில் அல்லாஹ்வின் செயல்திட்டம் வேறுவிதமாக உள்ளது. அதாவது எந்த ஒரு நிர்ப்பந்தத்தின் அடிப்படையிலும் மனிதனை

256 لَآ اِكْرَاهَ فِى الدِّيْنِ قَدْ تَّبَيَّنَ الرُّشْدُ مِنَ الْغَيِّ فَمَنْ يَّكْفُرْ بِالطَّاغُوْتِ وَ يُؤْمِنْ بِاللّٰهِ فَقَدِ اسْتَمْسَكَ بِالْعُرْوَةِ الْوُثْقٰى لَا انْفِصَامَ لَهَا وَ اللّٰهُ سَمِيْعٌ عَلِيْمٌ ○

*256. (இஸ்லாமிய) மார்க்கத்தில் (எவ்வகையான) நிர்ப்பந்தமுமில்லை; வழிகேட்டிலிருந்து நேர்வழி முற்றிலும் (பிரிந்து) தெளிவாகிவிட்டது; ஆகையால், எவர் வழி கெடுப்பவற்றை நிராகரித்து அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறாரோ அவர் அறுந்து விடாத கெட்டியான கயிற்றை நிச்சயமாகப் பற்றிக் கொண்டார் - அல்லாஹ் (யாவற்றையும்) செவியுறுவோனாகவும் நன்கறிவோனாகவும் இருக்கின்றான்.*

செயல்படவைக்க அல்லாஹ் நாடவில்லை. மாறாக மனிதனுக்கு முழு சுதந்திரத்தையும் கொடுத்துவிட்டு அல்லாஹ்வின் கொள்கை கோட்பாடுகளை விளக்கித் தந்து அதன் பிறகு அவன் முழு விருப்பத்துடன் அவற்றை ஏற்று நடக்க முன்வரவேண்டும் என்பதே அல்லாஹ்வின் செயல்திட்டம். ஆக மார்க்க விஷயத்தை ஏற்றுக் கொள்வதும் ஏற்றுக் கொள்ளாததும் மனிதனின் விருப்பத்திற்கு விடப்பட்டுவிட்டது. (18:29)

ஆக எந்த ஒரு சமுதாயம் மாற்றுக் கொள்கைகளை விட்டுவிட்டு இறை வழிகாட்டுதலை ஏற்று செயல்பட முன்வருகிறதோ அது தம் வாழ்வின் இலக்கை எளிதாக அடைந்துக் கொள்ளும். மேலும் அந்த சமுதாயம் ஒரு இணைபிரியாத உறுதிமிக்க சுமைதாங்கியை பற்றிப் பிடித்துக்கொண்டதாக பொருள்படும். ஏனெனில் அனைத்து விஷயங்களையும் அறியும் வல்லமைபெற்று விளங்கும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து இந்த வழிகாட்டுதல்கள் இறக்கியருளப்படுகின்றன.

257 اَللّٰهُ وَلِيُّ الَّذِيْنَ اٰمَنُوْا يُخْرِجُهُمْ مِّنَ الظُّلُمٰتِ اِلَى النُّوْرِ وَالَّذِيْنَ كَفَرُوْٓا اَوْلِيٰٓـئُهُمُ الطَّاغُوْتُ يُخْرِجُوْنَهُمْ مِّنَ النُّوْرِ اِلَى الظُّلُمٰتِ اُولٰٓئِكَ اَصْحٰبُ النَّارِ هُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○

*257. அல்லாஹ்வே நம்பிக்கை கொண்டவர்களின் பாதுகாவலன் (ஆவான்); அவன் அவர்களை இருள்களிலிருந்து வெளிச்சத்தின் பக்கம் கொண்டு வருகின்றான்; ஆனால் நிராகரிப்பவர்களுக்கோ - (வழி கெடுக்கும்) ஷைத்தான்கள் தாம் அவர்களின் பாது காவலர்கள்; அவை அவர்களை வெளிச்சத்திலிருந்து இருள்களின் பக்கம் கொண்டு வருகின்றன; அவர்களே நரகவாசிகள்; அவர்கள் அதில் என்றென்றும் இருப்பர்.*

257. இந்த வழிகாட்டுதலின் அடிப்படையில் செயல்படுவதன் மூலம் என்ன பலன்களைப் அந்த சமுதாயம் பெற்றுக்கொள்ளும்? அவ்வாறு செயல்பட்டால் அல்லாஹ்வின் ஏற்பாடுகள் (Allah's System) அந்த சமுதாயம் முழுஅளவில் பாதுகாப்பாக வாழ துணைபுரியும். ஆக எந்த சமுதாயம் அல்லாஹ்வின் நிர்ணயித்துள்ள வாழ்க்கை நெறிமுறைகளின் உண்மை நிலவரத்தை ஆய்ந்து அறிந்து ஏற்றுக்கொண்டு செயல்பட முன்வருமோ, அதை இருளிலிருந்து விலக்கி வெளிச்சத்தின்பால் கொண்டு வந்துவிடும். எந்த சமுதாயம் அதை ஏற்க மறுத்து உலக விவகாரங்களை தன்னிச்சையாக செயல்படுபவர்கள் கையில் ஒப்படைத்துவிடுமோ அது நேர்வழியிலிருந்து விலகி தவறான பாதையின் இருளில் சிக்கிக்கொள்ளும். அந்த இருளில் மனித ஆற்றல்கள் எல்லாம் பொசுங்கிப் போகும். மேலும் அதிலிருந்து மீள்வதற்கான எந்த முகாந்திரமும் இருக்காது.

*இறை வழிகாட்டுதலை ஏற்றுக்கொண்டவர்களே ! அல்லாஹ்வின் இந்த ஆட்சி ஆமைப்புமுறை ஏற்படுத்துவது கஷ்டமான காரியமாயிற்றே. அதற்கான எந்த வாய்ப்பும் இல்லையே. இது ஒருபோதும் இயலாத காரியம் என்று எண்ணுகிறீர்களா? ஏற்கனவே உள்ள வரலாற்று தொகுப்புகள் உங்கள் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டுள்ளன. இதைக்கொண்டு இப்படி ஒரு அமைப்பை ஏற்படுத்துவது இயலாத காரியம் அல்ல என்பதை விளங்கிக்கொள்ளலாம். அந்த முயற்சியின் தொடராக இப்ராஹிம் நபியின் வரலாற்று சம்பவங்கள் உங்கள் கவனத்திற்கு கொண்டு வரப்படுகின்றன.*

أَلَمْ تَرَ إِلَى الَّذِي حَاجَّ إِبْرَاهِيمَ فِي رَبِّهِ أَنْ آتَاهُ اللَّهُ الْمُلْكَ إِذْ قَالَ إِبْرَاهِيمُ رَبِّيَ الَّذِي يُحْيِي وَيُمِيتُ قَالَ أَنَا أُحْيِي وَأُمِيتُ قَالَ إِبْرَاهِيمُ فَإِنَّ اللَّهَ يَأْتِي بِالشَّمْسِ مِنَ الْمَشْرِقِ فَأْتِ بِهَا مِنَ الْمَغْرِبِ فَبُهِتَ الَّذِي كَفَرَ وَاللَّهُ لَا يَهْدِي الْقَوْمَ الظَّالِمِينَ ۝ 258

ருகூஃ 35

*258. அல்லாஹ் தனக்கு அரசாட்சி கொடுத்ததின் காரணமாக (ஆணவங்கொண்டு), இப்ராஹீமிடத்தில் அவருடைய இறைவனைப் பற்றித் தர்க்கம் செய்தவனை (நபியே!) நீர் கவனித்தீரா? இப்ராஹீம் கூறினார்: "எவன் உயிர் கொடுக்கவும், மரணம் அடையும்படியும் செய்கிறானே, அவனே என்னுடைய ரப்பு (இறைவன்)" என்று; அதற்கவன், "நானும் உயிர் கொடுக்கிறேன்; மரணம் அடையும் படியும் செய்கிறேன்" என்று கூறினான்; (அப்பொழுது) இப்ராஹீம் கூறினார்: "திட்டமாக அல்லாஹ் சூரியனைக் கிழக்கில் உதிக்கச் செய்கிறான்; நீ அதை மேற்குத் திசையில் உதிக்கும்படிச் செய்!" என்று; (அல்லாஹ்வை) நிராகரித்த அவன், திகைத்து வாயடைப்பட்டுப் போனான்; தவிர, அல்லாஹ் அநியாயம் செய்யும் கூட்டத்தாருக்கு நேர் வழி காண்பிப்பதில்லை.*

258 இப்ராஹிம் மார்க்க பிரச்சாரத்தை மேற்கொண்டபோது அந்நாட்டு அரசனும் மக்களும் அவரை எதிர்த்தனர். அரசனுடைய எதிர்ப்பு கல்வி ஞானத்தின் அடிப்படையில் இருக்கவில்லை. வெறும் அதிகாரப்பலம் என்ற அடிப்படையில் இருந்தது. அவனிடம் விவாதம் துவங்குகையில் இப்ராஹிம், ''யாருடைய அதிகாரத்தின் கீழ் மனிதனின் வாழ்வும் மரணமும் நிகழ்ந்து வருகின்றனவோ அந்த ஏகஇறைவனின் கொள்கை கோட்பாடுகளின்பால் என்னுடைய அழைப்பு பணி இருந்து வருகிறது. தனி நபர் அதிகாரத்தின் அடிப்படையில் நிகழக்கூடிய ஒன்றல்ல.'' என்றார். அதற்கு அந்த அரசன் என்னுடைய நாட்டில் வாழ்வும் மரணமும் என்னுடைய அதிகாரத்தின் கீழ் நடப்பவையாக இருக்கின்றன. இதன் மீது வேறு யாருக்கும் அதிகாரம் கிடையாது என்றான்.

''இந்த நாட்டில் அந்த அதிகாரம் என்னவோ உம்முடையதாக இருக்கலாம். ஆனால் அந்த ஏகஇறைவன் சூரியனை கிழக்கிலிருந்து உதிக்கச் செய்கின்றான். உமக்கு அதிகாரம் இருந்தால் அதை மேற்கிலிருந்து உதிக்கச் செய்.'' என்று இப்ராஹிம் சவால் விட்டார். இறைவனின் இந்த பிரம்மாண்டமான சட்ட விதிமுறைகள் யாருடைய அதிகாரத்திற்கும் உட்பட்டு செயல்படக் கூடிய ஒன்றல்ல. இப்ராஹிம் நபியின் விளக்கத்தை கேட்ட அரசன் திகைப்பில் வாயடைந்துப் போனான். இருப்பினும் அவன் அந்த ஏகஇறைவனின் வழிகாட்டுதல்களை ஏற்க முன்வரவில்லை. ஏனெனில் யார் வரம்பு மீறி செயல்படுகிறார்களோ அவர்களுக்கு நேர்வழி எவ்வாறு கிடைக்கும்?

முன் குறிப்பு: *வரலாற்றின் இன்னொரு தொகுப்பும் உங்கள் சிந்தனைக்கு கொண்டு வரப்படுகிறது. அதைக் கொண்டு அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற செயல்வினைச் சட்டம் எவ்வாறு நூற்றாண்டுகள் அல்லது யுகங்கள் என்ற அளவில் செயல்படுகிறது என்பதை தெரிந்துக்கொள்ளலாம். பனி இஸ்ராயில் சமூகத்தவர்கள் ஒரு கட்டத்தில் ஜெருசலேம் நகரத்தில் பக்தெ நசர் என்ற அரசன் கையில் வீழ்ச்சியடைந்து ஏறத்தாழ நூறு ஆண்டுகள் வரையில் கொத்தடிமைகளாக வாழ்ந்து சீரழிந்துபோயினர். கே:.கஸ்ரூ என்பவர் அவர்களை மீட்டு பைத்துல் மு:.கத்தஸ் என்ற இடத்தில் குடிபெயரச் செய்து மீண்டும் அவர்களுக்கு மறுவாழ்வு கிடைக்கச் செய்தார். வரலாற்றில் இது போன்ற சம்பவங்கள் ஏராளமாக கிடைக்கின்றன. குர்ஆன் இதை மையமாக வைத்து ஒரு உதாரணமாக மேற்கோள்காட்டி உண்மை நிலவரத்தை விளக்க முன் வருகிறது.*

259 أَوْ كَالَّذِي مَرَّ عَلَىٰ قَرْيَةٍ وَهِيَ
خَاوِيَةٌ عَلَىٰ عُرُوشِهَا قَالَ أَنَّىٰ
يُحْيِي هَٰذِهِ اللَّهُ بَعْدَ مَوْتِهَا
فَأَمَاتَهُ اللَّهُ مِائَةَ عَامٍ ثُمَّ بَعَثَهُ
قَالَ كَمْ لَبِثْتَ قَالَ لَبِثْتُ يَوْمًا
أَوْ بَعْضَ يَوْمٍ قَالَ بَلْ لَبِثْتَ
مِائَةَ عَامٍ فَانْظُرْ إِلَىٰ طَعَامِكَ
وَشَرَابِكَ لَمْ يَتَسَنَّهْ وَانْظُرْ إِلَىٰ
حِمَارِكَ وَلِنَجْعَلَكَ آيَةً لِلنَّاسِ
وَانْظُرْ إِلَى الْعِظَامِ كَيْفَ نُنْشِزُهَا
ثُمَّ نَكْسُوهَا لَحْمًا فَلَمَّا تَبَيَّنَ لَهُ
قَالَ أَعْلَمُ أَنَّ اللَّهَ عَلَىٰ كُلِّ
شَيْءٍ قَدِيرٌ

*259. அல்லது, ஒரு கிராமத்தின் பக்கமாகச் சென்றவரைப் போல் - (அந்த கிராமத்திலுள்ள வீடுகளின்) உச்சிகளெல்லாம் (இடிந்து, விழுந்து) பாழடைந்து கிடந்தன; (இதைப் பார்த்த அவர்) "இவ்வூர் (இவ்வாறு அழிந்து) மரித்தபின் இதனை அல்லாஹ் எப்படி உயிர்ப்பிப்பான்?" என்று (வியந்து) கூறினார்; ஆகவே, அல்லாஹ் அவரை நூறாண்டுகள் வரை இறந்து போகும்படிச் செய்தான்; பின்னர் அவரை உயிர்பெற்றெழும்படிச் செய்து, "எவ்வளவு காலம் (இந்நிலையில்) இருந்தீர்?" என்று அவரைக் கேட்டான்; அதற்கவர், "ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறு பகுதியில் (இவ்வாறு) இருந்தேன்" என்று கூறினார்; "இல்லை! நீர் (இந்நிலையில்) நூறாண்டுகள் இருந்தீர்! இதோ பாரும், உம்முடைய உணவையும், உம்முடைய பானத்தையும்; (கெட்டுப் போகாமையினால்) அவை எந்த விதத்திலும் மாறுதலடையவில்லை; ஆனால் உம்முடைய கழுதையைப் பாரும்; உம்மை மனிதர்களுக்கு ஓர் அத்தாட்சியாக்குவதற்காக (இவ்வாறு மரிக்கச் செய்து உயிர் பெறச்) செய்கிறோம்; இன்னும் (அக்கழுதையின்) எலும்புகளைப் பாரும்; அவற்றை நாம் எப்படிச் சேர்க்கிறோம்; பின்னர் அவற்றின்மேல் சதையைப் போர்த்துகிறோம்" எனக்கூறி (அதனை உயிர் பெறச் செய்தான் - இதுவெல்லாம்) அவருக்குத் தெளிவான போது: அவர், "நிச்சயமாக அல்லாஹ் எல்லாப் பொருள்களின் மீதும் வல்லமையுடையவன் என்பதை நான் அறிந்து கொண்டேன்" என்று கூறினார்.*

259. இந்த உதாரணத்தைக் கொண்டு புலனாவது என்ன ? மனிதனின் வாழ்க்கைப் பயணம் என்பது தொடரக்கூடிய ஒன்றாகும். அந்த பயணத்தொடரில் அவன் இந்த பூமியில் பிரவேசிக்கின்றான். இங்கிருக்கும் சீர்கேடுகளைப் பார்த்து நமக்கென்ன வந்தது ? நம்மால் இதை சரிசெய்ய முடியுமா ? அல்லாஹ்வின் வழிமுறைகளில் இதை புத்துயிர் பெற்று விளங்கச் செய்ய வழி ஏதாகிலும் உண்டா என்று எண்ணி மனம் போல போக்கில் வாழ்ந்தால் அவனும் அந்த சீர்கேடுகள் என்ற பாதாளத்தில் விழுந்து உயிரோட்டம் இல்லாத ஜட வாழ்க்கையை தொடர்வான். யுகம் யுகமாக அப்படி கேடுகெட்ட நிலையில் வாழ்ந்து வருவதும் அவனுக்கு தெரியாது. அவனிடம் கேட்டால் ஒரு நாள் அல்லது அரை நாள் என்ற கணக்கில்தான் பேசுவான். மேலும் ஒரு சமுதாயம் உயிர்பெற்று வாழ்கிறதா இல்லையா என்பதை அறிந்துக்கொள்வதற்கு தராதரம் உணவு, பானம், பிரயாணச் சாதனங்கள் அல்ல. ஏனெனில் அவை எல்லா காலக் கட்டங்களிலும் தொடர்ந்து நீடிக்கக்கூடியவை. ஆவை உயிரனங்கள் உயிர் வாழ அல்லாஹ் செய்துள்ள முன்னேற்பாடு. ஆவை காலா காலத்திற்கு நிலைக்கக் கூடியவை. மாறாக எல்லா வகையிலும் அல்லாஹ்வின் நெறிமுறைகளுக்கு உட்பட்டு மனிதன் வாழும் போதுதான் சிறந்த சமுதாயமாக விளங்கமுடியும். அது மிக வேகமான முன்னேற்றத்தையும் காணும். அப்படி அந்த சமுதாயத்தை உருவாக்கும் ஆற்றல் இறைவன் வகுத்துத் தந்துள்ள நெறிமுறைகளுக்கு உண்டு. அதை மக்கள் மத்தியில் பரவச்செய்து விழிப்புணர்ச்சி ஏற்படுத்த முயற்சிகளை மேற்கொள்வது ஒவ்வொருடைய கடமையும் ஆகும். அதே சமயத்தில் அல்லாஹ்வின் படைப்பு விஷயத்தையும் கவனித்துப் பாருங்கள். எல்லாமே முறைப்படி படிப்படியாக நடந்து வருகின்றன. முதலில் சிசு அதன் பின் எலும்பு அதன் பின் சதை என்ற முறையில் உருவாகின்றன. அவ்வாறே சமூக நலத்திட்டங்களும் படிப்படியாக கொண்டு வரவேண்டும். அவைகளை நன்கறிந்து செயல்பட வைப்பதில் அல்லாஹ்வின் வழிகாட்டுதலுக்கு உண்டு என்பதை விளங்கிக்கொள்ளுங்கள். அதே போல் சமுதாயத்தின் வளர்ச்சியும் வீழ்ச்சியும் படிப்படியாகத் தான் நடைபெற்று வரும். திடீர் திருப்பங்கள் என்ற அடிப்படையில் நிகழாது.

எனவேதான் ஒரு மனிதனின் வாழ்க்கையை உதாரணம் காட்டி ஒட்டு மொத்த உலக மக்களுக்கு அல்லாஹ்வின் நடைமுறை சட்டங்களை விளக்குவதாக இந்த வாசகம் விளங்குகிறது.

260 وَإِذْ قَالَ إِبْرٰهِمُ رَبِّ أَرِنِيْ كَيْفَ تُحْيِ الْمَوْتٰى ؕ قَالَ أَوَلَمْ تُؤْمِنْ ؕ قَالَ بَلٰى وَلٰكِنْ لِّيَطْمَئِنَّ قَلْبِيْ ؕ قَالَ فَخُذْ أَرْبَعَةً مِّنَ الطَّيْرِ فَصُرْهُنَّ إِلَيْكَ ثُمَّ اجْعَلْ عَلٰى كُلِّ جَبَلٍ مِّنْهُنَّ جُزْءًا ثُمَّ ادْعُهُنَّ يَأْتِيْنَكَ سَعْيًا ؕ وَاعْلَمْ أَنَّ اللّٰهَ عَزِيْزٌ حَكِيْمٌ ○

*260. இன்னும், இப்ராஹீம்: "என இறைவா! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப் பிக்கிறாய் என்பதை எனக்குக் காண்பிப்பாயாக!" எனக் கோரியபோது, அவன், "நீர் (இதை) நம்ப வில்லையா?" எனக் கேட்டான்; "மெய்(யாக நம்புகிறேன்)! ஆனால் என் இதயம் அமைதி பெறும் பொருட்டே (இவ்வாறு கேட்கிறேன்)" என்று கூறினார்; "(அப்படியாயின்,) பறவைகளிலிருந்து நான்கைப்பிடித்து, (அவை உம்மிடம் திரும்பி வருமாறு) பழக்கிக் கொள்ளும்; பின்னர் (அவற்றை அறுத்து) அவற்றின் ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு மலையின் மீது வைத்து விடும்; பின், அவற்றைக் கூப்பிடும்; அவை உம்மிடம் வேகமாய்(ப் பறந்து) வரும்; நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவன், பேரறிவாளன் என்பதை அறிந்து கொள்ளும்" என்று (அல்லாஹ்) கூறினான்.*

260. இறை வழிகாட்டுதலைக் கொண்டு சமுதாயத்தை புத்துயிர் பெறச்செய்ய முடியுமா என்ற சந்தேகம் இப்ராஹிம் நபியிடமும் இருந்து வந்தது. எனவே ஒரு நாள் இறைவனிடம் இப்படி அறியாமையில் செத்துக் கிடக்கும் சமுதாயத்தை எவ்வாறு உயிர்ப்பிப்பாய் என்று கேட்க, அதற்கு இறைவன் இந்த வழிகாட்டுதலில் உமக்கு நம்பிக்கை இல்லையா என்று திருப்பிக் கேட்கின்றான். இல்லை. தெளிவு பெறத்தான் அவ்வாறு கேட்பதாக இப்ராஹிம் இறைவனிடம் கூறினார். அதற்கு இறைவன் "நான்கு பறவைகளை பிடித்து நன்றாக பழக்கு. முதலில் அவை உம்மை கண்டு பயந்து ஓடும். பழகபழக உம் சைகைக்கு இணங்கி வரும். அதன்பின் அவற்றை எவ்வளவு தூரம் பறக்க விட்டு விட்டாலும் உன்னுடைய ஒரு சைகைக்கு இணங்கி உன்னிடம் பறந்தோடி வந்துவிடும். அவற்றை தனித்தனியே பிரித்து வெவ்வேறு மலை உச்சிகளில் வைத்துவிட்டு அழைப்பு விடுத்தாலும் அவை உன்னுடைய ஒரு கட்டளைக்கு இணங்கி உன்னிடம் வந்து விடும்" என்று இறைவ்ன் கூறினான்.

ஆக ஐந்தறிவைப் பெற்ற அந்த பறவைகளே நன்றாக பழகினபின் உன் அசைவிற்கு இணங்கி வரக்கூடியதாக இருக்கும்போது ஆறறிவு பெற்ற மனிதனுக்கு அந்த தகுதி கிடையாதா? கண்டிப்பாக உண்டு. ஆனால் அதற்காக அவனையும் நன்றாக பழக்கவேண்டும். அதாவது கல்வி, போதனை, ஒழுக்கம் மற்றும் ஆற்றல்கள் வளர அனைத்து முயற்ச்சிகளையும் மேற்கொள்ளவேண்டும். அவ்வாறு செய்து வந்தால் அவனும் நீர் விரும்பியவாறு சிறப்பான முறையில் புத்துயிர் பெற்று வாழ்வான். அதே சமயம் இது எளிதான காரியமல்ல என்பதையும் அறிந்துக் கொள்ளுங்கள். அதற்காக அல்லும்பகலும் தொடர்ந்து பாடுபட வேண்டிவரும். (3 :157), (26:214) ஆக இந்த வழிகாட்டுதல்கள் எல்லாவற்றையும் அறியும் பேராற்றல்களுடைய அல்லாஹ்விடம் வந்துள்ளன என்பதில் சந்தேகம் இருக்கின்றதா ?

مَثَلُ الَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمْ 261
فِيْ سَبِيْلِ اللّٰهِ كَمَثَلِ حَبَّةٍ اَنْۢبَتَتْ
سَبْعَ سَنَابِلَ فِيْ كُلِّ سُنْۢبُلَةٍ مِّائَةُ
حَبَّةٍ ؕ وَاللّٰهُ يُضٰعِفُ لِمَنْ يَّشَآءُ ؕ
وَاللّٰهُ وَاسِعٌ عَلِيْمٌ ○

**ருகூஃ 36**

*261. அல்லாஹ்வின் பாதையில் தங்கள் செல்வத்தைச் செலவிடுபவர்களுக்கு உவமையாவது: ஒவ்வொரு கதிரிலும் நூறு தானிய மணிகளைக் கொண்ட ஏழு கதிர்களை முளைப்பிக்கும் ஒரு வித்தைப் போன்றது; அல்லாஹ் தான் நாடியவர்களுக்கு (இதை மேலும்) இரட்டிப்பாக்குகின்றான்; இன்னும் அல்லாஹ் விசாலமான (கொடையுடைய)வன்; யாவற்றையும் நன்கறிபவன்.*

261. இந்த வரலாற்று தொகுப்புகளுக்குப் பின் மீண்டும் அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பிற்காக உதவி புரிவது பற்றிய விஷயத்திற்கு வாருங்கள். (2 : 254) இந்த ஆட்சிக்காக தம் செல்வங்களை அர்ப்பணிப்பது விவசாயி நிலத்தில் பயிரிடுவதற்கு ஒப்பானதாகும். விதைகளை பூமியில் விதைப்பது வீண் என்று அவன் எண்ணியிருந்தால் அவனால் பன் மடங்கு மகசூலை பெற்றிருக்க முடியுமா? மேலோட்டமாக பார்ப்பதற்கு அவன் செய்வது சரி அல்ல என்று தோன்றலாம். ஆனால் அதன் பலன்கள் தோற்றத்திற்கு வரும்போது அவன் செய்தது மகத்தான செயல்தான் என்பது தெரிந்துவிடும். அதே போல அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பிற்கு உதவி செய்வது வீண் என்று தோன்றும். ஆனால் அதன் பலன்கள் பண்மடங்களாகி திரும்ப அனைவருக்கும் பொதுவாக வந்து சேரும்போது நாம் அதற்காக செலவிட்டது வீணில்லை என்பதை உணர்ந்துக்கொள்வீர்கள். இப்படியாக எந்த சமுதாயம் அல்லாஹ் நிர்ணயித்துள்ள வழிகாட்டுதலின்படி செயல்படுமோ விசாலமான வாழ்வாதாரங்களை பெற்று சிறந்த சமுதாயமாக விளங்கும். ஆக அல்லாஹ்வின் நடைமுறை சட்டங்கள் விசாலத்தன்மையும் ஞானத்தின் அடிப்படையிலும் செயலாக்கம் பெறுகின்றன என்பதை தெரிந்துக் கொள்ளுங்கள்.

اَلَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمْ فِيْ 262
سَبِيْلِ اللّٰهِ ثُمَّ لَا يُتْبِعُوْنَ مَآ
اَنْفَقُوْا مَنًّا وَّلَآ اَذًى ۙ لَّهُمْ اَجْرُهُمْ
عِنْدَ رَبِّهِمْ ۚ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ
وَلَا هُمْ يَحْزَنُوْنَ ○

*262. அல்லாஹ்வின் பாதையில் எவர் தங்கள் செல்வத்தைச் செலவிட்ட பின்னர், அதைத் தொடர்ந்து அதைச் சொல்லிக் காண்பிக்காமலும், அல்லது (வேறு விதமாக) நோவினை செய்யாமலும் இருக்கின்றார்களோ அவர்களுக்கு அதற்குரிய நற்கூலி அவர்களுடைய இறைவனிடத்தில் உண்டு; இன்னும் - அவர்களுக்கு எத்தகைய பயமுமில்லை; அவர்கள் துக்கமும் அடையமாட்டார்கள்.*

262. ஒட்டுமொத்த சமுதாய நலனைக்கருதி ஏற்படுத்தப்படும் அல்லாஹ்வின் ஆட்சி அமைப்பிற்கு உதவி செய்பவர்கள். தாம் செய்த உதவிகளைப் பற்றி சொல்லி பெருமிதம் அடையமாட்டார்கள். நன்றிக் கடனுக்காக செய்ததாகவும் எண்ணிக் கொள்ளமாட்டார்கள். இப்படி பேசி மற்றவர்களுக்கு மனவேதனையும் ஏற்படுத்த மாட்டார்கள். உதவி பெறுபவரிடம் பிரதிப்பலனை எதிர்பார்க்கவும் மாட்டார்கள் (76:9) இவ்வாறு தாம் உழைத்து பெற்ற செல்வங்களை இந்த அமைப்பிற்காக செலவு செய்தது அந்த ஆட்சியினால் ஏற்படுகின்ற வளர்ச்சியைக் கொண்டு திரும்ப உங்களுக்கு வந்து சேரும். மேலும் இவர்களுக்கு ஆபத்துகள் நீங்கி நிம்மதியான வாழ்வை பெறுவார்கள். இன்னும் யாதொரு துக்கமுமின்றி சந்தோஷமாக வாழ்வார்கள்.

26 قَوْلٌ مَّعْرُوفٌ وَّمَغْفِرَةٌ خَيْرٌ
مِّنْ صَدَقَةٍ يَّتْبَعُهَآ اَذًى ؕ وَاللّٰهُ
غَنِىٌّ حَلِيْمٌ ۝

*263. கனிவான, இனிய சொற்களும், மன்னித்தலும்; தர்மம் செய்தபின் நோவினையைத் தொடரும்படிச் செய்யும் ஸதக்காவை (தர்மத்தை) விட மேலானவையாகும்; தவிர அல்லாஹ் (எவரிடத்தும், எவ்விதத்) தேவையுமில்லாதவன்; மிக்க பொறுமையாளன்.*

263. பணப்பலம். செல்வாக்கு. செயல்திறன் உள்ளவர்கள். அரசுக்கு உதவி செய்துவிட்டு தாம் உதவி செய்யாமல் இருந்திருந்தால் இந்த அரசு நிலைத்திருக்காது என்று கண்ணியமின்றி சொல்லி காண்பித்து நோவினை செய்து வருவதைவிட தம்மால் தர இயலாது என்று முறைப்படி இனிய வார்த்தைகளால் சொல்லிவிடுவதே மேல். நினைவில் கொள்ளுங்கள்! அல்லாஹ்வின் ஆட்சி அமைப்பு இப்படிப்பட்ட பலவீனமான அஸ்திவாரத்தில் எழுப்படுகின்ற ஒன்றல்ல. யாருடைய துணையுமின்றி அகிலங்கள் அனைத்தையும் வழிநடத்திச் செல்ல சகல வல்லமையும் உறுதிப்பாடும் கொண்ட அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஏற்படுத்தப்படுகிறது.

264 يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تُبْطِلُوْا
صَدَقٰتِكُمْ بِالْمَنِّ وَالْاَذٰىۙ كَالَّذِىْ
يُنْفِقُ مَالَهٗ رِئَآءَ النَّاسِ وَ لَا
يُؤْمِنُ بِاللّٰهِ وَالْيَوْمِ الْاٰخِرِؕ
فَمَثَلُهٗ كَمَثَلِ صَفْوَانٍ عَلَيْهِ تُرَابٌ
فَاَصَابَهٗ وَابِلٌ فَتَرَكَهٗ صَلْدًا ؕ
لَا يَقْدِرُوْنَ عَلٰى شَىْءٍ مِّمَّا كَسَبُوْا ؕ
وَاللّٰهُ لَا يَهْدِى الْقَوْمَ الْكٰفِرِيْنَ ۝

*264. நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்வின் மீதும், இறுதி நாளின் மீதும் நம்பிக்கை கொள்ளாமல், மனிதர்களுக்குக் காட்டுவதற்காகவே தன் பொருளைச் செலவழிப்பவனைப்போல், கொடுத்ததைச் சொல்லிக் காண்பித்தும், நோவினைகள் செய்தும் உங்கள் ஸதக்காவை (தான தர்மங்களைப்) பாழாக்கி விடாதீர்கள்; அ(ப்படிச் செய்ப)வனுக்கு உவமையாவது: ஒரு வழுக்குப் பாறையாகும்; அதன் மேல் சிறிது மண் படிந்துள்ளது; அதன் மீது பெருமழை பெய்து (அதிலிருந்த சிறிது மண்ணையும் கழுவித்) துடைத்து விட்டது; இவ்வாறே அவர்கள் செய்த - (தானத்)திலிருந்து யாதொரு பலனையும் அடைய மாட்டார்கள்; இன்னும், அல்லாஹ் காஃபிரான மக்களை நேர் வழியில் செலுத்துவதில்லை.*

264. இறை வழிகாட்டுதலை ஏற்றுக் கொண்டவர்களே! இந்த ஆட்சியமைப்பிற்கு உதவி செய்தபின் பிரதிஉபகாரத்தை எதிர்பார்த்து மற்றவர்களிடம் சொல்லிக் காண்பித்து தர்மசங்கடத்திற்கு ஆளாக்கினால் உங்களுடைய இந்த உதவிகள் பலன்களை ஈட்டித் தருவதற்குப் பதிலாக நஷ்டத்தை ஏற்படுத்தி விடும். நீங்கள் ஒருபோதும் இவ்வாறு செய்யாதீர்கள். அல்லாஹ் வகுத்துத் தந்துள்ள வாழ்க்கை நெறிமுறைகளை ஏற்க மறுத்து வருங்கால நலன்களைப் பற்றி அக்கறை கொள்ளாதவர்கள்தாம் இவ்வாறு செய்வார்கள்.

நீங்கள் எடுத்துக் கொண்டுள்ள செயல்திட்டங்கள் நிரந்தரமாக பலனளிக்கக் கூடியவைகளாக இருக்கின்றன. எனவே அந்த திட்டங்கள் காலாகாலத்திற்கு வேரூன்றி நிலைத்து நிற்கவேண்டும். கற்பாறையின் மேல் படிந்த தூசிகள் போன்று இருக்கக் கூடாது. ஏனெனில் அந்த தூசிகள் ஒரே ஒரு மழையில் அடித்துச் சென்றுவிடும். அதுபோல உங்களுடைய செயல்திட்டங்கள் வலுவில்லாமல் இருக்கக்கூடாது. அப்போதுதான் உங்கள் செயல்களின் சரியான பலன்களைப் பெற்றுக் கொள்ளமுடியும். இல்லையென்றால் நேரான பாதையைவிட்டு வழிதவறி சென்றுவிடுவீர்கள். இத்தகையவர்களுக்கு அல்லாஹ்வின் புறத்திலிருந்து நேர்வழியும் கிடைக்காது.

265 وَمَثَلُ الَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمُ
ابْتِغَآءَ مَرْضَاتِ اللّٰهِ وَتَثْبِيْتًا
مِّنْ اَنْفُسِهِمْ كَمَثَلِ جَنَّةٍۢ بِرَبْوَةٍ
اَصَابَهَا وَابِلٌ فَاٰتَتْ اُكُلَهَا
ضِعْفَيْنِۚ فَاِنْ لَّمْ يُصِبْهَا وَابِلٌ
فَطَلٌّ ؕ وَاللّٰهُ بِمَا تَعْمَلُوْنَ
بَصِيْرٌ ۝

*265. அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை அடையவும், தங்கள் ஆத்மாக்களை உறுதியாக்கிக் கொள்ளவும், யார் தங்கள் செல்வங்களைச் செலவு செய்கிறார்களோ அவர்களுக்கு உவமையாவது: உயரமான (வளமுள்ள) பூமியில் ஒரு தோட்டம் இருக்கிறது; அதன் மேல் பெரு மழை பெய்கிறது; அப்பொழுது அதன் விளைச்சல் இரட்டிப்பாகிறது; இன்னும், அதன் மீது அப்படிப் பெருமழை பெய்யாவிட்டாலும் பொடி மழையே அதற்குப் போதுமானது; அல்லாஹ் நீங்கள் செய்வதையெல்லாம் பார்க்கின்றவனாக இருக்கின்றான்.*

265. மாறாக ஒரு மேட்டு பூமியில் உள்ள வளம்மிக்க தோட்டங்களைப் போன்று உங்கள் சமுதாயம் விளங்கவேண்டும். எத்தனை புயல் மழை வந்தாலும் அது வெள்ளப் பெருக்கிலிருந்து பாதுகாப்பாகவும் இருக்கும். கூடவே அதன் விளைச்சல்கள் இரட்டிப்பாகியும் வரும். அப்படியே சிறு தூரல்கள் இருந்தாலும் அதிலுள்ள வளம் குறையாது. அது போலத்தான் யார் தாம் உழைத்து சம்பாதித்த செல்வங்களை அல்லாஹ் வகுத்துத் தந்துள்ள நெறிமுறைகளின்படி மனிதவளம் பெருக பயன்படுத்தி தம் சமுதாயத்தை வலிமைமிக்கதாய் ஆக்கிக் கொள்கிறார்களோ அவர்கள் உயர்ந்த இடத்தில் சிறந்த வாழ்வை பெற்றுக் கொள்வார்கள். அவர்களுக்கு எந்த பாதிப்புகள் வந்தாலும் அதனால் அவர்களுடைய பலம் குன்றாது.

266 اَيَوَدُّ اَحَدُكُمْ اَنْ تَكُوْنَ لَهٗ
جَنَّةٌ مِّنْ نَّخِيْلٍ وَّاَعْنَابٍ تَجْرِىْ
مِنْ تَحْتِهَا الْاَنْهٰرُۙ لَهٗ فِيْهَا مِنْ
كُلِّ الثَّمَرٰتِۙ وَاَصَابَهُ الْكِبَرُ وَلَهٗ
ذُرِّيَّةٌ ضُعَفَآءُ ۖۚ فَاَصَابَهَاۤ اِعْصَارٌ
فِيْهِ نَارٌ فَاحْتَرَقَتْ ؕ كَذٰلِكَ
يُبَيِّنُ اللّٰهُ لَكُمُ الْاٰيٰتِ لَعَلَّكُمْ
تَتَفَكَّرُوْنَ ۝

*266. உங்களில் யாராவது ஒருவர் இதை விரும்புவாரா? - அதாவது அவரிடம் பேரீச்ச மரங்களும், திராட்சைக் கொடிகளும் கொண்ட ஒரு தோட்டம் இருக்கிறது; அதன் கீழே நீரோடைகள் (ஒலித்து) ஓடுகின்றன; அதில் அவருக்கு எல்லா வகையான கனி வர்க்கங்களும் உள்ளன; (அப்பொழுது) அவருக்கு வயோதிகம் வந்துவிடுகிறது; அவருக்கு (வலுவில்லாத,) பலஹீனமான சிறு குழந்தைகள் தாம் இருக்கின்றன - இந்நிலையில் நெருப்புடன் கூடிய ஒரு சூறாவளிக் காற்று, அ(ந்தத் தோட்டத்)தை எரித்து(ச் சாம்பலாக்கி) விடுகின்றது. (இதையவர் விரும்புவாரா?) நீங்கள் சிந்தனை செய்யும் பொருட்டு அல்லாஹ் (தன்) அத்தாட்சிகளை உங்களுக்குத் தெளிவாக விளக்குகின்றான்.*

266. ஒருவரிடம் பேரீச்சமரங்களும் திராட்சைக்கொடிகளும் கொண்ட ஒரு தோட்டம் இருக்கிறது. அதன் கீழ் நீரோடைகள் ஒலித்து ஓடுகின்றன. அதில் எல்லாவகையான கனிவர்க்கங்களும் விளைகின்றன. அந்த தோட்டத்திற்கு சொந்தக்காரர் முதுமையை அடைந்தபோது அவரிடம் பலவீனமான சிறுகுழந்தைகள் இருக்கும் நிலையில் ஒரு சூறாவளிக் காற்று நெருப்புக்கனலுடன் வீசி அந்த தோட்டத்தை எரித்துச் சாம்பலாக்கிவிட்டால் அவருடைய நிலைமை எப்படி இருக்கும்? இப்படிப்பட்ட நிலை ஏற்படுவது யாராவது விரும்புவார்களா? அவருடைய நிலைமையும் அந்த குழந்தைகளின் நிலைமையும் என்னவாக இருக்கும்?

அது போலத்தான் தனிநபர் நலம்காத்தல் என்ற அடிப்படையில் வாழ்ந்து வருபவர்கள் வருங்கால நிரந்தர பலன்களைப்பற்றி சற்றும் அக்கறை கொள்ளாமல் வாழ்ந்துவருவார்கள். காலப்போக்கில் அந்த சமுதாயத்தில் இருப்போர் இல்லாதோர் என்ற வேற்றுமை வளர்ந்து கலவரங்கள் வெடிக்கும். இதுநாள் வரையில் கட்டிக் காப்பாற்றி வந்த செல்வங்கள் எல்லாம் காப்பாற்ற முடியாமல் வேரோடு அழிந்துவிடும். எனவேதான் ஒட்டுமொத்த நாட்டு மக்களின் நிரந்தர நலன்கள் என்ற அடிப்படையில் அல்லாஹ்வின் இந்த ஆட்சியமைப்பு எற்படுத்தப்படுகிறது.

இப்படியாக பல உதாரணங்களைக் கொண்டு அல்லாஹ்வின் சட்ட திட்டங்களின் நோக்கங்கள் விளக்கப்படுகின்றன. இவற்றைக் மனதில் பதித்துக்கொண்டு செயல்பட்டால் மனித இனம் அழிவிலிருந்து பாதுகாக்கலாம்.

267 يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا أَنفِقُوا مِن
طَيِّبَاتِ مَا كَسَبْتُمْ وَمِمَّا أَخْرَجْنَا
لَكُم مِّنَ الْأَرْضِ ۖ وَلَا تَيَمَّمُوا
الْخَبِيثَ مِنْهُ تُنفِقُونَ وَلَسْتُم
بِآخِذِيهِ إِلَّا أَن تُغْمِضُوا فِيهِ ۚ
وَاعْلَمُوا أَنَّ اللَّهَ غَنِيٌّ حَمِيدٌ ○

**ருகூஉ 37**

*267. நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் சம்பாதித்தவற்றிலிருந்தும், பூமியிலிருந்து நாம் உங்களுக்கு வெளிப்படுத்தித் தந்த (தானியங்கள், கனி வகைகள் போன்ற) வற்றிலிருந்தும், நல்லவற்றையே (தான தர்மங்களில்) செலவு செய்யுங்கள்; அன்றியும் கெட்டவற்றைத் தேடி அவற்றிலிருந்து சிலவற்றை (தான தர்மங்களில்) செலவழிக்க நாடாதீர்கள்; ஏனெனில் (அத்தகைய பொருள்களை வேறெவரும் உங்களுக்குக் கொடுத்தால் வெறுப்புடன்), கண் மூடிக் கொண்டேயல்லாது அவற்றை நீங்கள் வாங்க மாட்டீர்கள்! நிச்சயமாக அல்லாஹ் (எவரிடத்தும், எந்தத்) தேவையுமற்றவனாகவும், புகழுக்கெல்லாம் உரியவனுமாகவும் இருக்கின்றான் என்பதை நீங்கள் நன்கறிந்து கொள்ளுங்கள்.*

**267.** இறை வழிகாட்டுதலை ஏற்றுக்கொண்டவர்களே ! நீங்கள் உழைத்து சம்பாதித்த தானியங்கள் கனிவர்க்கங்கள் போன்றவற்றிலிருந்து மிகச் சிறந்ததையே அல்லாஹ்வின் பரிபாலன அமைப்பிற்கு வழங்குங்கள். அவற்றில் தரம்குறைந்த பொருட்களை தந்திடலாம் என்று மனத்தளவிலும் எண்ணம் கொள்ளாதீர்கள். அப்படிப்பட்ட பொருட்களை உங்களிடம் யாராவது விற்றால் அவற்றை நீங்கள் விலைகொடுத்து வாங்கிக்கொள்வீர்களா? அது போலத்தான் இதுவும். நினைவில் கொள்ளுங்கள்! நீங்கள் கொடுப்பவற்றை எல்லாம் வாங்கிக் கொட்டிக் கொள்வதற்கு அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பு உங்களிடம் தானதர்மம் கேட்டு பிச்சை எடுப்பதாக நினைக்காதீர்கள். ஏனெனில் உங்களிடமிருந்து பெறப்படுவதெல்லாம் உங்கள் நலனையும் பாதுகாப்பையும் கருதிதான் என்பதை மறவாதீர்கள்.

268 الشَّيْطَانُ يَعِدُكُمُ الْفَقْرَ وَ
يَأْمُرُكُم بِالْفَحْشَاءِ ۖ وَاللَّهُ يَعِدُكُم
مَّغْفِرَةً مِّنْهُ وَفَضْلًا ۗ وَاللَّهُ
وَاسِعٌ عَلِيمٌ ○

*268. (தான தர்மங்கள் செய்வதினால்) வறுமை (உண்டாகிவிடும் என்று அதைக்) கொண்டு உங்களை ஷைத்தான் பயமுறுத்துகிறான்; ஒழுக்கமில்லாச் செயல்களைச் செய்யுமாறும் உங்களை ஏவுகிறான்; ஆனால் அல்லாஹ்வோ, (நீங்கள் தான தருமங்கள் செய்தால்) தன்னிடமிருந்து மன்னிப்பும், (அருளும், பொருளும்) மிக்க செல்வமும் (கிடைக்கும் என்று) வாக்களிக்கின்றான்; நிச்சயமாக அல்லாஹ் விசாலமான (கொடையுடைய)வன்; யாவற்றையும் நன்கறிபவன்.*

**268.** இந்த இடத்தில் இன்னொரு விஷயத்தையும் கவனத்தில் கொள்ளவேண்டும். இப்படி எல்லாவற்றையும் இந்த பரிபாலன அமைப்பிற்கு கொடுத்துவிட்டால் நமக்கு வறுமையும் கஷ்டமும் பீடித்துக் கொள்ளுமே என்று உங்களிடமுள்ள சுயநலக்குணமான ஷைத்தான் உங்களை வாட்டி வதைக்கும். எனவே தமக்காக கூடுமானவரையில் சேகரித்து வைத்துக்கொள்ள யோசனை கூறும். ஆனால் அல்லாஹ்வின் இந்த ஆட்சியமைப்பு உங்களை எல்லா வகையிலும் சந்தோஷமான பாதுகாப்பான வாழ்க்கைக்கு உத்தரவாதம் அளிக்கிறது. ஏனெனில் இந்த ஆட்சி எல்லாவற்றையும் அறிந்தவனுமாகிய அல்லாஹ்வின் புறத்திலிருந்து நிலை நிறுத்தப்படுகிறது.

269 يُؤْتِى الْحِكْمَةَ مَنْ يَّشَآءُ ۚ وَمَنْ يُّؤْتَ الْحِكْمَةَ فَقَدْ اُوْتِىَ خَيْرًا كَثِيْرًا ؕ وَمَا يَذَّكَّرُ اِلَّآ اُولُوا الْاَلْبَابِ ○

*269. தான் நாடியவருக்கு அவன் ஞானத தைக் கொடுக்கின்ருன்; (இத்தகு) ஞானம் எவருக்குக் கொடுக்கப்படுகிறதோ, அவர் கணக் கில்லா நன்மைகள் கொடுக்கப்பட்டவராக நிச்சயமாக ஆகி விடுகிருர்; எனினும் நல்லறி வுடையோர் தவிர வேறு யாரும் இதைச் சிந்தித் துப் பார்ப்பதில்லை.*

269. ஆனால் இந்த விசாலமான சிந்தனை மற்றும் அறிவாற்றல் தனிநபர் ஒருவரில் காணக்கிடைக்காது. ஏனெனில் தனிநபர் அறிவாற்றல் தன்வரை உள்ள பாதுகாப்பைப் பற்றியே யோசனை கூறும். தம் ஆத்ம திருப்பதியையே நோக்கமாக கொள்ளும் (28:49 & 50) & (30 :29) விசாலமான சிந்தனை மற்றும் ஞானம் வஹீ என்னும் இறை வழிகாட்டுதல்கள் மூலம்தான் கிடைக்கும். இவற்றை அல்லாஹ்வின் மஷீயத் என்னும் செயல்திட்டத்தின் அடிப்படையில் இறைத்தூதர்கள் மூலமாக இறக்கியருளப்பட்டவை ஆகும் (17:39). இறைத்தூதர்கள் மூலமாக மற்ற மனிதர்களுக்கு இந்த வழிகாட்டுதல்கள் கிடைத்து விடுகின்றன. இந்த வழிக்காட்டுதல் கிடைக்கப்பெற்ற சமுதாயத்திற்கு சந்தோஷங்களும் கண்ணியமும் உயர்வும் அளவின்றி கிடைத்துவிடுகிறது. (16:30) எனினும் இதற்கு மாற்றமான சிந்தனைகளை முற்றிலும் நீக்கி தூய உள்ளத்துடன் அறிவுப்பூர்வமாக சிந்திப்பவர்களே இதைப்பற்றி அறிவார்கள்.

270 وَمَآ اَنْفَقْتُمْ مِّنْ نَّفَقَةٍ اَوْ نَذَرْتُمْ مِّنْ نَّذْرٍ فَاِنَّ اللّٰهَ يَعْلَمُهٗ ؕ وَمَا لِلظّٰلِمِيْنَ مِنْ اَنْصَارٍ ○

*270. இன்னும், செலவு வகையிலிருந்து நீங்கள் என்ன செலவு செய்தாலும், அல்லது நேர்ச்சைகளில் எந்த நேர்ச்சை செய்தாலும் நிச்சய மாக அல்லாஹ் அதனை நன்கறிவான்; அன்றியும் அக்கிரமக்காரர்களுக்கு உதவி செய்வோர் எவரும் இலர்.*

270. மேலும் இந்த அமைப்பிற்கு நீங்கள் எதுவெல்லாம் செலவழிக்கிறீர்களோ அவைகளும் அல்லது செலவு செய்ய எண்ணி தம் மீது கடமையாக்கிக் கொண்டிருப்பதும் அல்லாஹ்வின் செயல்வினைச் சட்டத்தின் கண்காணித்து. அவர்களுக்கு எல்லாவிதமான உதவிகளும் பாதுகப்பும் கிடைக்கும். ஆனால் இறைக் கட்டளைகளுக்கு மாறு செய்பவர்களுக்கு பிற்காலத்தில் உதவிசெய்வோர் எவரும் இருக்கமாட்டார்கள்.

271 اِنْ تُبْدُوا الصَّدَقٰتِ فَنِعِمَّا هِىَ ۚ وَاِنْ تُخْفُوْهَا وَتُؤْتُوْهَا الْفُقَرَآءَ فَهُوَ خَيْرٌ لَّكُمْ ؕ وَيُكَفِّرُ عَنْكُمْ مِّنْ سَيِّاٰتِكُمْ ؕ وَاللّٰهُ بِمَا تَعْمَلُوْنَ خَبِيْرٌ ○

*271. தான தர்மங்களை நீங்கள் வெளிப் படையாகச் செய்தால் அதுவும் நல்லதே; (ஏனெனில் அவ்வாறு செய்யப் பிறரையும் அது தூண்டும்;) எனினும் அவற்றை மறைத்து ஏழையெளியோர்க்கு அவை கிடைக்கும்படிச் செய்தால் அது உங்களுக்கு இன்னும் நல்லது; அது உங்களுடைய பாவங்களையும் நீக்கும்; நீங்கள் செய்வதை(யெல்லாம்) அல்லாஹ் நன் கறிந்தவனாகவே இருக்கின்ருன்.*

271. பொதுமக்கள் நல்வாழ்விற்காக நீங்கள் வெளிப்படையாக உதவிகளை செய்துவந்தாலும் நன்மையான காரியமே ஆகும். ஆட்சி அமைப்பின் தொடக்க காலங்களில் தனிப்பட்ட முறையில் மறைமுகமாக உதவிகளை செய்துவருவதும் நன்மையான காரியமே ஆகும். நிச்சயமாக இப்படிப்பட்ட செயல்களால் உங்களிடையே இருந்து வரும் ஏற்றத்தாழ்வுகள் நீங்கி உங்களுடைய பலவீனத்தை போக்கிவிடும். அல்லாஹ் நிர்ணயித்துள்ள மனித செயலுக்கேற்ற விளைவுகள் என்ற சட்டம் எப்பவும் உங்களை கண்காணித்துக் கொண்டே இருக்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

272 لَيْسَ عَلَيْكَ هُدٰىهُمْ وَلٰكِنَّ اللّٰهَ يَهْدِيْ مَنْ يَّشَآءُ ۗ وَمَا تُنْفِقُوْا مِنْ خَيْرٍ فَلِاَنْفُسِكُمْ ۗ وَمَا تُنْفِقُوْنَ اِلَّا ابْتِغَآءَ وَجْهِ اللّٰهِ ۗ وَمَا تُنْفِقُوْا مِنْ خَيْرٍ يُّوَفَّ اِلَيْكُمْ وَاَنْتُمْ لَا تُظْلَمُوْنَ ○

*272. (நபியே!) அவர்களை நேர்வழியில் நடாத்துவது உம் கடமையல்ல; ஆனால், தான் நாடியவர்களை அல்லாஹ் நேர்வழியில் செலுத்து கின்ருன்; இன்னும், நல்லதில் நீங்கள் எதைச் செலவிடினும், அது உங்களுக்கே நன்மை பயப் பதாகும்; அல்லாஹ்வின் திருமுகத்தை நாடியே அல்லாது (வீண் பெருமைக்காகச்) செலவு செய்யாதீர்கள்; நல்லவற்றிலிருந்து நீங்கள் எதைச் செலவு செய்தாலும், அதற்குரிய நற் பலன் உங்களுக்குப் பூரணமாகத் திருப்பிக் கொடுக்கப்படும்; நீங்கள் அநியாயம் செய்யப் பட மாட்டீர்கள்.*

272. இறைச் செய்திகளை எடுத்துரைப்பவரே! அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பைப் பற்றிய நோக்கங்களை எடுத்து விளக்குவதே உன் கடமையாகும். அவர்களை நேர்வழியில் கொண்டு வரச் செய்வது உன்னுடைய பொறுப்பு அல்ல. (5:99) & (28:56) ஆனால் நேர்வழி பெற நாடி வருவோருக்குத்தான் அல்லாஹ்வின் நடைமுறைச் சட்டப்படி நேர்வழியில் கொண்டுசெல்லும். எனவே பொருள் உதவிகளை செய்து வருவது அவர்களுடைய நன்மைக்கே என்பதை எடுத்து சொல்லிவிடு. ஆனால் ஒரு நிபந்தனை. அந்த உதவிகள் எல்லாம் அல்லாஹ்வின் அமைப்புமுறைக்கே செய்திட வேண்டும். பேரும் புகழும் பெறுவதற்காக செய்யக்கூடாது. அவ்வாறு அல்லாஹ்வின் அமைப்பிற்கு அழகிய முறையில் உதவிகளை செய்தால் அவைகள் யாவும் உங்களிடத்தில் திரும்பி வந்து சேறும். இதில் சிறிதளவும் அநியாயம் செய்யப்பட மாட்டாது.

273 لِلْفُقَرَآءِ الَّذِيْنَ اُحْصِرُوْا فِيْ سَبِيْلِ اللّٰهِ لَا يَسْتَطِيْعُوْنَ ضَرْبًا فِى الْاَرْضِ يَحْسَبُهُمُ الْجَاهِلُ اَغْنِيَآءَ مِنَ التَّعَفُّفِ تَعْرِفُهُمْ بِسِيْمٰهُمْ لَا يَسْـَٔلُوْنَ النَّاسَ اِلْحَافًا ۗ وَمَا تُنْفِقُوْا مِنْ خَيْرٍ فَاِنَّ اللّٰهَ بِهٖ عَلِيْمٌ ○

*273. பூமியில் நடமாடித் (தம் வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்ற) எதுவும் செய்ய முடியாத அளவுக்கு அல்லாஹ்வின் பாதை யில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர் களுக்குத் தான் (உங்களுடைய தான தர்மங் கள்) உரியவையாகும். (பிறரிடம் யாசிக்காத) அவர்களுடைய பேணுதலைக் கண்டு, அறியா தவன் அவர்களைச் செல்வந்தர்கள் என்று எண் ணிக் கொள்கிருன்; அவர்களுடைய அடை யாளங்களால் அவர்களை நீர் அறிந்து கொள்ள லாம்; அவர்கள் மனிதர்களிடம் வருந்தி எதையும் கேட்கமாட்டார்கள்; (இத்தகை யோருக்காக) நல்லதினின்று நீங்கள் எதைச் செலவு செய்தாலும், அதை நிச்சயமாக அல் லாஹ் நன்கறிகின்ருன்.*

273. இவ்வாறு வசூலிக்கப்பட்ட பணம் கையேந்தி திரியும் பிச்சைக்காரர்களுக்கு கொடுக்கப்பட மாட்டாது. மற்ற எந்த தொழிலும் செய்யாமல் அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பை உருவாக்கும் பணியில் தம்மை முழுஅளவில் அற்பணித்துக் கொள்பவர்களுக்கு இந்த பணம் யாவும் செலவிடப்படும். இவர்களே உண்மையில் தேவையுள்ளவர்கள் ஆவார்கள். இவர்கள் எந்த அளவிற்கு அல்லாஹ்வின் நெறிமுறைகளை பேணி நடப்பவர்கள் என்றால் தாம் தேவையுள்ளவர்கள் என்பதை வெளியே காட்டிக் கொள்ளமாட்டார்கள். பார்ப்பவர்களுக்கு அவர்கள் வசதி படைத்தவர்களே என்று எண்ணத்தோன்றும். அவர்கள் தேவையுள்ள போதும் கூட யாரிடமும் கையேந்த மாட்டார்கள். ஆனால் அவர்களுடைய முகத் தோற்றங்களைக் கொண்டு அவர்களை அடையாளம் கண்டுக்கொள்ளலாம். இப்படிப் பட்டவர்களை நன்கு அடையாளங் கண்டு அவர்களுடைய தேவைகளை நிறைவேற்றுங்கள். நீங்கள் எந்த உதவிகளை செய்தாலும் அல்லாஹ்விற்கு நன்கு தெரியும் என்பதை அறிந்துக்கொள்ளுங்கள். கொடுப்பவர்கள் எண்ணம் என்ன என்பதும் பெறுபவர்கள் நிலமை என்ன என்பதும் அல்லாஹ்விற்கு நன்கு தெரியும்.

274 اَلَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمْ بِالَّيْلِ وَالنَّهَارِ سِرًّا وَّعَلَانِيَةً فَلَهُمْ اَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ ۚ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ ○

ருகூஃ 38

*274. யார் தங்கள் பொருள்களை, (தான தர்மங்களில்) இரவிலும், பகலிலும்; இரகசியமாகவும், பகிரங்கமாகவும் செலவு செய்கின்றார்களோ, அவர்களுக்கு அவர்களுடைய இறைவனிடத்தில் நற்கூலி இருக்கிறது; அவர்களுக்கு அச்சமும் இல்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.*

275 اَلَّذِيْنَ يَأْكُلُوْنَ الرِّبٰوا لَا يَقُوْمُوْنَ اِلَّا كَمَا يَقُوْمُ الَّذِىْ يَتَخَبَّطُهُ الشَّيْطٰنُ مِنَ الْمَسِّ ؕ ذٰلِكَ بِاَنَّهُمْ قَالُوْٓا اِنَّمَا الْبَيْعُ مِثْلُ الرِّبٰوا ۘ وَاَحَلَّ اللّٰهُ الْبَيْعَ وَحَرَّمَ الرِّبٰوا ؕ فَمَنْ جَآءَهٗ مَوْعِظَةٌ مِّنْ رَّبِّهٖ فَانْتَهٰى فَلَهٗ مَا سَلَفَ ؕ وَاَمْرُهٗٓ اِلَى اللّٰهِ ؕ وَمَنْ عَادَ فَاُولٰٓئِكَ اَصْحٰبُ النَّارِ ۚ هُمْ فِيْهَا خٰلِدُوْنَ ○

*275. யார் வட்டி (வாங்கித்) தின்கிறார்களோ, அவர்கள் (மறுமையில்) ஷைத்தானால் தீண்டப்பட்ட ஒருவன் பைத்தியம் பிடித்த வனாக எழுவது போலல்லாமல் (வேறுவிதமாய்) எழ மாட்டார்கள்: இதற்குக் காரணம் அவர்கள், "நிச்சயமாக வியாபாரம் வட்டியைப் போன்றதே" என்று கூறியதினாலேயாம்; அல்லாஹ் வியாபாரத்தை ஹலாலாக்கி, வட்டியை ஹராமாக்கியிருக்கிறான்; ஆயினும் யார் தன் இறைவனிடமிருந்து நற்போதனை வந்த பின் அதை விட்டும் விலகிவிடுகிறானோ, அவனுக்கு முன்னர் வாங்கியது உரித்தானது - என்றாலும் அவனுடைய விவகாரம் அல்லாஹ்விடம் இருக்கிறது; ஆனால் யார் (நற்போதனை பெற்ற பின்னர் இப்பாவத்தின் பால்) திரும்புகிறார்களோ அவர்கள் நரகவாசிகள் ஆவார்கள்; அவர்கள் அதில் என்றென்றும் தங்கிவிடுவார்கள்.*

274. இந்த நோக்கங்களை அடிப்படையாக யார் அல்லும் பகலும் அயராது மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் உதவிகளை செய்து வருகிறார்களோ அப்படிப்பட்டவர்களுடைய கரங்களால் அல்லாஹ்வின் இந்த ஆட்சியமைப்பு நிலை நிறுத்தப்படுகிறது. அப்படிப்பட்டவர்களின் வாழ்வில் எவ்வித பயமோ துயரமோ அண்டாது.

275. இப்படியாக தமக்கு தேவையுள்ள போதும் பிறர் தேவைகளை நிறைவேற்றும் தியாக உள்ளம் படைத்த மக்கள் ஒருபக்கம் (59:9) ஆனால் பிறர் உழைப்பில் சுகம் காணும் கூட்டம் மறுபக்கம். இவர்கள் ஏழை எளிய மக்களுக்கு பண உதவி செய்தால் அவற்றை திரும்ப பெறும்போது கூடுதலாக பெற்றுக்கொள்வதே இவர்களுடைய பிழைப்பாக இருக்கிறது. அல்லாஹ்வின் ஆட்சிஅமைப்பு இதை தடுப்பதாக அறிவித்தால் விஷப்பாம்பு கடித்து பைத்தியம் பிடித்தவன் போல கொதித்தெழுகிறார்கள். தாம் இவ்வாறு செய்து வருவதற்கு நியாயம் கற்பிக்கும் வகையில் பல ஆதாரங்களை எடுத்து கூறுகிறார்கள். இதுவும் ஒரு வகையில் வியாபாரம் போன்றதுதானே என்கிறார்கள். வியாபாரத்திலும் முதலீடு செய்து இலாபத்தை ஈட்டிக்கொள்கிறோம். அது போலத்தான் இதுவும் என்கிறார்கள். இவைகள் எல்லாம் இவர்களுடைய விதண்டா வாதங்களாகும். வியாபாரத்தில் பண முதலீடு செய்வதுடன் உழைப்பும் அவசியமாகிறது. எனவே அவன் ஈட்டும் இலாபம் அவனுடைய உழைப்பிற்கு கிடைத்த ஊதியமாகும். எனவே அது அவனுக்கு ஆகுமானது. மாறாக பண முதலீடு செய்துவிட்டு கூடுதலாக திருப்பப் பெற்றுக்கொள்ளும் வழிமுறைகளில் உழைப்பு எதுவும் இருப்பதில்லை. மேலும் குறிப்பிட்ட விழுக்காடு என்ற கணக்கில் அதிகமாக வசூலிக்கப்படுகிறது. எனவே இவை ஆகுமானதல்ல. எனவே அல்லாஹ்வின் இந்த நற்போதனைகள் வந்த பின் யார் இந்த போக்கைவிட்டு விலகிக் கொள்கின்றானோ அது அவனுக்கு நல்லது. ஏதோ அதுவரையில் அவன் அவ்வாறு சம்பாதித்துக் கொண்டவை அவனுக்குச் சொந்தமாக இருந்து போகட்டும். இந்த அரசு அதை விட்டுக்கொடுக்கும். ஆனால் இவர்கள் இந்த போக்கை இனியும் விட்டுவிட வில்லையென்றால் கடினமான வேதனைகள் அவர்களுக்கு காத்து நிற்கின்றன என்பதை அறிந்துக்கொள்ளட்டும்.

276 يَمْحَقُ اللّٰهُ الرِّبٰوا وَيُرْبِى الصَّدَقٰتِ وَاللّٰهُ لَا يُحِبُّ كُلَّ كَفَّارٍ اَثِيْمٍ ○

*276. அல்லாஹ் வட்டியை (அதில் எந்த பரக்கத்தும் இல்லாமல்) அழித்து விடுவான்; இன்னும் தான தர்மங்களை (பரக்கத்துகளைக் கொண்டு) பெருகச் செய்வான்; (தன் கட்டளையை) நிராகரித்துக் கொண்டிருக்கும் பாவிகள் எவரையும் அல்லாஹ் நேசிப்பதில்லை.*

276. நினைவில் கொள்ளுங்கள்! பண முதலீட்டை பெருக்கிக்கொள்வதற்கு சில காரியங்கள் சிறந்த முறை என்று மனிதனுக்கு தோன்றலாம். ஆனால் அதுவே அவனையும் அவனுடைய சமுதாயத்தையும் அழிவைத் தேடி தந்துவிடும். ஒட்டுமொத்த சமுதாய வளர்ச்சிக்காக செலவிடுவதால் பண முதலீடு குறைந்துவிடும் என்று அவனுக்கு தோன்றலாம். ஆனால் உண்மையில் அவனையும் அவனுடைய சமுதாய வளர்ச்சிக்கும் அதுவே துணை நிற்கும். ஆக வட்டியைப் பொருத்தவரையில் நாட்டில் ஏற்றத்தாழ்வு பெருகிடத்தான் வழி பிறக்கிறது. எனவே இருப்போர் இல்லாதோர் என்ற வேற்றுமை விரிவடைந்துக்கொண்டே சென்று காலப்போக்கில் ஒரு சிலரிடம் செல்வ குவிப்பு ஏற்பட்டு பலர் சிரமத்திற்கு ஆளாவார்கள். எனவே அது ஒரு சிறந்த சமுதாயமாக விளங்கமுடியாது. அல்லாஹ்வின் நேசமும் கிடைக்காது.

277 اِنَّ الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ وَاَقَامُوا الصَّلٰوةَ وَاٰتَوُا الزَّكٰوةَ لَهُمْ اَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ ۚ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ ○

*277. யார் ஈமான் கொண்டு, நற் கருமங்களைச் செய்து, தொழுகையை நியமமாகக் கடைப் பிடித்து, ஜகாத்தும் கொடுத்து வரு*

277. அல்லாஹ்வின் வழிகாட்டுதல்களை ஏற்றுக்கொள்பவர்கள் ஆற்றல்மிக்க செயல்களை எவ்வாறு செய்வார்கள் எனறால் அவர்கள் ஒட்டுமொத்த மனிதஇனத்தின் வளர்ச்சிக்காக ஒரு அமைப்பை ஏற்படுத்தி மக்களிடையே உள்ள பிரச்சனைகளை தீர்த்துவைக்க தம்மால் ஆன உதவிகளை செய்து சமூக நல்லிணக்கத்தை ஏற்படுத்த அயராது பாடுபடுவார்கள். அப்படி ஒரு சமுதாய அமைப்பை ஏற்படுத்தி அனைவரும் சந்தோஷமாக வாழ

279 فَإِنْ لَّمْ تَفْعَلُوْا فَأْذَنُوْا بِحَرْبٍ
مِّنَ اللّٰهِ وَرَسُوْلِهٖ ۚ وَاِنْ تُبْتُمْ
فَلَكُمْ رُءُوْسُ اَمْوَالِكُمْ ۚ لَا تَظْلِمُوْنَ
وَلَا تُظْلَمُوْنَ ○

*279. இவ்வாறு நீங்கள் செய்யவில்லையென்றால் அல்லாஹ்விடமிருந்தும், அவனுடைய தூதரிடமிருந்தும் போர் அறிவிக்கப்பட்டு விட்டது (என்பதை அறிந்து கொள்ளுங்கள்) - நீங்கள் தவ்பா செய்து (இப்பாவத்திலிருந்தும்) மீண்டுவிட்டால், உங்கள் பொருள்களின் அசல் - முதல் - உங்களுக்குண்டு; (கடன்பட்டோருக்கு) நீங்கள் அநியாயம் செய்யாதீர்கள் - நீங்களும் அநியாயம் செய்யப்பட மாட்டீர்கள்.*

279. நீங்கள் இவ்வாறு செய்யவில்லை என்றால் அல்லாஹ்விற்கும் அவனது அரசமைப்பிற்கும் எதிராக போர் தொடுக்க நீங்கள் தயாராகிவிட்டதாக பொருள்கொள்ளப்படும். ஏனெனில் முதலாளித்துவம், ஒட்டுமொத்த மனித இனத்தின் நலனைக் காக்கும் இஸ்லாம் என்கிற மார்க்கத்திற்கு எதிரான கொள்கையாகும். இவ்விரண்டு கோட்பாடுகளும் ஒரு போதும் இணைந்து செயல்பட முடியாது. எனவே இந்த போக்கை விட்டுவிடுங்கள். நீங்கள் கொடுத்த கடன் தொகையை நிச்சயமாக திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். அதில் எவ்வித அநியாயமும் செய்யப்படமாட்டாது.

280 وَاِنْ كَانَ ذُوْعُسْرَةٍ فَنَظِرَةٌ اِلٰى
مَيْسَرَةٍ ۚ وَاَنْ تَصَدَّقُوْا خَيْرٌ لَّكُمْ
اِنْ كُنْتُمْ تَعْلَمُوْنَ ○

*280. அன்றியும், கடன்பட்டவர் (அதனைத் தீர்க்க இயலாது) கஷ்டத்தில் இருப்பின் (அவருக்கு) வசதியான நிலை வரும்வரைக் காத்திருங்கள்; இன்னும், (கடனைத் தீர்க்க இயலாதவருக்கு அதை) தர்மமாக விட்டுவிடுவீர்களானால் - (அதன் நன்மைகள் பற்றி) நீங்கள் அறிவீர்களானால் - (அதுவே) உங்களுக்குப் பெரும் நன்மையாகும்.*

280. அன்றியும் கடன்பட்டவர் அதனை திருப்பித் தர இயலாமல் கஷ்டப்படுகிறார் என்று நீங்கள் அறிந்தால் அவருக்கு தங்க வசதி ஏற்படும்வரையில் காலஅவகாசம் கொடுங்கள். அப்படியும் அவரால் கடனைத் திருப்பித் தர இயலாது என்ற நிலை இருந்தால் அந்த கடனை மன்னித்து விடுங்கள். இது உங்களுக்கு மிகவும் நல்லதாகும். அதனால் ஏற்படும் சமூக நல்லிணக்கத்தைப் பற்றி நீங்கள் எண்ணிப்பார்த்தால் உங்களுக்கே அது எவ்வளவு சிறந்தது என்பதை அறிந்துக்கொள்வீர்கள்.

281 وَاتَّقُوْا يَوْمًا تُرْجَعُوْنَ فِيْهِ اِلَى
اللّٰهِ ۗ ثُمَّ تُوَفّٰى كُلُّ نَفْسٍ مَّا
كَسَبَتْ وَهُمْ لَا يُظْلَمُوْنَ ○

*281. தவிர, அந்த நாளைப் பற்றி அஞ்சிக் கொள்ளுங்கள்; அன்று நீங்களனைவரும் அல்லாஹ்விடம் மீட்டப்படுவீர்கள்; பின்னர் ஒவ்வோர் ஆத்மாவுக்கும் அது சம்பாதித்ததற்குரிய (கூலி) பூரணமாகக் கொடுக்கப்படும்; மேலும் (கூலி) வழங்கப்படுவதில் அவை அநியாயம் செய்யப்பட மாட்டா.*

281. நீங்கள் சமுதாய வளர்ச்சியையே நோக்கமாகக்கொண்டு செயல்படுங்கள். ஆட்சியமைப்பின் எல்லா காரியங்களும் அல்லாஹ்வின் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டே இருக்கட்டும். அப்போதுதான் ஒவ்வொரும் தம் செயலுக்கேற்ற பலன்களைப் பெற்றுக்கொள்வார்கள். யாருடைய உழைப்பும் வீண் போகாது.

282 يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِذَا تَدَايَنتُم
بِدَيْنٍ إِلَىٰٓ أَجَلٍ مُّسَمًّى فَٱكْتُبُوهُ ۚ
وَلْيَكْتُب بَّيْنَكُمْ كَاتِبٌۢ بِٱلْعَدْلِ ۚ
وَلَا يَأْبَ كَاتِبٌ أَن يَكْتُبَ كَمَا
عَلَّمَهُ ٱللَّهُ ۚ فَلْيَكْتُبْ وَلْيُمْلِلِ
ٱلَّذِى عَلَيْهِ ٱلْحَقُّ وَلْيَتَّقِ ٱللَّهَ
رَبَّهُۥ وَلَا يَبْخَسْ مِنْهُ شَيْـًٔا ۚ
فَإِن كَانَ ٱلَّذِى عَلَيْهِ ٱلْحَقُّ
سَفِيهًا أَوْ ضَعِيفًا أَوْ لَا يَسْتَطِيعُ
أَن يُمِلَّ هُوَ فَلْيُمْلِلْ وَلِيُّهُۥ
بِٱلْعَدْلِ ۚ وَٱسْتَشْهِدُوا۟ شَهِيدَيْنِ
مِن رِّجَالِكُمْ ۖ فَإِن لَّمْ يَكُونَا
رَجُلَيْنِ فَرَجُلٌ وَٱمْرَأَتَانِ مِمَّن
تَرْضَوْنَ مِنَ ٱلشُّهَدَآءِ أَن
تَضِلَّ إِحْدَىٰهُمَا فَتُذَكِّرَ إِحْدَىٰهُمَا
ٱلْأُخْرَىٰ ۚ وَلَا يَأْبَ ٱلشُّهَدَآءُ إِذَا
مَا دُعُوا۟ ۚ وَلَا تَسْـَٔمُوٓا۟ أَن تَكْتُبُوهُ
صَغِيرًا أَوْ كَبِيرًا إِلَىٰٓ أَجَلِهِۦ ۚ
ذَٰلِكُمْ أَقْسَطُ عِندَ ٱللَّهِ وَأَقْوَمُ
لِلشَّهَٰدَةِ وَأَدْنَىٰٓ أَلَّا تَرْتَابُوٓا۟ ۖ
إِلَّآ أَن تَكُونَ تِجَٰرَةً حَاضِرَةً
تُدِيرُونَهَا بَيْنَكُمْ فَلَيْسَ عَلَيْكُمْ
جُنَاحٌ أَلَّا تَكْتُبُوهَا ۗ وَأَشْهِدُوٓا۟
إِذَا تَبَايَعْتُمْ ۚ وَلَا يُضَآرَّ كَاتِبٌ
وَلَا شَهِيدٌ ۚ وَإِن تَفْعَلُوا۟ فَإِنَّهُۥ
فُسُوقٌۢ بِكُمْ ۗ وَٱتَّقُوا۟ ٱللَّهَ ۖ
وَيُعَلِّمُكُمُ ٱللَّهُ ۗ وَٱللَّهُ بِكُلِّ
شَىْءٍ عَلِيمٌ ○

ருகூஃ 39

282. ஈமான் கொண்டோரே! ஒரு குறித்த தவணையின் மீது உங்களுக்குள் கடன் கொடுக்கல் வாங்கல் செய்து கொண்டால், அதை எழுதி வைத்துக் கொள்ளுங்கள்; எழுதுபவன் உங்களிடையே நீதியுடன் எழுதட்டும்; எழுதுபவன் எழுதுவதற்கு மறுக்கக்கூடாது; (நீதமாக எழுதுமாறு) அல்லாஹ் அவனுக்குக் கற்றுக் கொடுத்தபடி அவன் எழுதட்டும்.

282. ஆக கடன் கொடுப்பல் வாங்கல் ஒரு போதும் இருக்கக் கூடாது என்பதல்ல. கடன்களைக் கொடுக்கவும் செய்யலாம். வாங்கவும் செய்யலாம். ஆனால் அதற்காக முறைப்படி எழுதிகொள்ளுங்கள். கடனுதவி பெறுபவர் யாரும் அதை எழுதிக்கொடுக்க மறுக்கவும்கூடாது. கடன் ஒப்பந்தத்தை எழுதுபவரும் நியாயமான முறையில் எழுதித்தர வேண்டும். எழுத படிக்க ஞானம் பெற்றிருப்பவர்கள் அனைவருக்கும் பலனளிக்கும் வகையில் பயன்படவேண்டும். ஆக கடன் ஒப்பந்தத்தில் எவ்வித குறைப்பாடும் இருக்கக்கூடாது. அதற்காக கடன் வாங்கியவர் மற்றும் கடன் கொடுத்தவர் முன்னிலையில் எழுதப்பட்டதை வாசித்து காட்டவேண்டும். இவ்வாறாக அல்லாஹ்வின் நெறிமுறைகளை பேணி நடந்துக்கொள்ள வேண்டும்.

கடனுதவி பெறுபவர் எழுதப் படிக்கத் தெரியாதவராக இருந்தாலோ முதுமை போன்ற காரணங்களுக்காக அதைப் படிக்க இயலாமல் இருந்தாலோ அவருக்கு துணையாக உற்ற நண்பனை வைத்து படித்துக் காட்டட்டும்.

இது விஷயமாக இரண்டு சாட்சியாளர்களையும் வைத்துக்கொள்ளுங்கள். சாட்சியாளர்களில் இரண்டு ஆண்கள் கிடைக்கவில்லை என்றால் அதில் ஒர் ஆணும் மற்ற ஆணுக்கு பதிலாக இரண்டு பெண்களையும் சாட்சிகளாக வைத்துக்கொள்ளலாம். இரண்டு பெண்கள் எதற்கு என்றால் அதில் ஒருவருக்கு மறதி ஏற்பட்டால் மற்றவர் அவரை நினைவுபடுத்தலாம். அல்லது வழக்காடுமன்றத்தில் தனியே வந்து பேசவும் சங்கோசப்படலாம் (43:18). ஆக சாட்சிக்காக நீதிமன்றத்தில் அழைக்கப்பட்டால் அவர்கள் மறுக்கலாகாது.

இன்னும், யார் மீது கடன் (திருப்பிக் கொடுக்க வேண்டிய) பொறுப்பு இருக்கிறதோ அவனே (பத்திரத்தின்) வாசகத்தைச் சொல்லட்டும்; அவன் தன் ரப்பான (அல்லாஹ்வை) அஞ்சிக் கொள்ளட்டும்; மேலும், அ(வன் வாங்கிய)தில் எதையும் குறைத்து விடக் கூடாது; இன்னும், யார் மீது கடன் (திருப்பிக் கொடுக்க வேண்டிய) பொறுப்பு இருக்கிறதோ அவன் அறிவு குறைந்தவனாகவோ, அல்லது (பால்யம், முதுமை போன்ற காரணங்களால்) பலஹீனனாகவோ, அல்லது வாசகத்தைக் கூற இயலாதவனாகவோ இருப்பின் அவனுடைய வலீ (நிர்வாகி) நீதமாக வாசகங்களைச் சொல்லட்டும்; தவிர, (நீங்கள் சாட்சியாக ஏற்கக் கூடிய) உங்கள் ஆண்களில் இருவரை சாட்சிகளாக்கிக் கொள்ளுங்கள்; ஆண்கள் இருவர் கிடைக்காவிட்டால், சாட்சிகளில் நீங்கள் பொருந்தக்கூடியவர்களிலிருந்து ஆடவர் ஒருவரையும், பெண்கள் இருவரையும் சாட்சிகளாக எடுத்துக் கொள்ளுங்கள்; (பெண்கள் இருவர்) ஏனென்றால் அவ்விருவரில் ஒருத்தி தவறினால், இருவரில் மற்றவள் நினைவூட்டும் பொருட்டேயாகும்; அன்றியும், (சாட்சியம் கூற) சாட்சிகள் அழைக்கப்பட்டால் அவர்கள் மறுக்கலாகாது; தவிர, (கொடுக்கல் வாங்கல்) சிறிதோ, பெரிதோ அதை, அதன் கால வரையறையுடன் எழுதுவதில் அலட்சியமாக இராதீர்கள்; இதுவே அல்லாஹ்வின் முன்னிலையில் மிகவும் நீதமானதாகவும், சாட்சியத்திற்கு உறுதியுண்டாக்குவதாகவும், இன்னும் இது உங்களுக்கு சந்தேகங்கள் ஏற்படாமல் இருக்க சிறந்த வழியாகவும் இருக்கும்; எனினும் உங்களிடையே சுற்றி வரும் ரொக்க வியாபாரமாக இருப்பின், அதை எழுதிக் கொள்ளாவிட்டாலும் உங்கள் மீது குற்றமில்லை; ஆனால் (அவ்வாறு) நீங்கள் வியாபாரம் செய்யும்போதும் சாட்சிகளை வைத்துக் கொள்ளுங்கள் - அன்றியும் எழுதுபவனையோ, சாட்சியையோ (உங்களுக்கு சாதகமாக இருப்பதற்காகவோ, வேறு காரணத்திற்காகவோ) துன்புறுத்தப்படக் கூடாது; நீங்கள் அப்படிச் செய்வீர்களாயின் அது உங்கள் மீது நிச்சயமாகப் பாவமாகும்; அல்லாஹ்வுக்கு அஞ்சிக் கொள்ளுங்கள்; ஏனெனில் அல்லாஹ் தான் உங்களுக்கு (நேரிய இவ் விதிமுறைகளைக்) கற்றுக் கொடுக்கின்றான். தவிர, அல்லாஹ்வே எல்லாப் பொருட்களையும் பற்றி நன்கறிபவன்.

283 وَإِنْ كُنْتُمْ عَلَىٰ سَفَرٍ وَلَمْ تَجِدُوا كَاتِبًا فَرِهَانٌ مَقْبُوضَةٌ ۖ فَإِنْ أَمِنَ بَعْضُكُمْ بَعْضًا فَلْيُؤَدِّ الَّذِي اؤْتُمِنَ أَمَانَتَهُ وَلْيَتَّقِ اللَّهَ رَبَّهُ ۗ وَلَا تَكْتُمُوا الشَّهَادَةَ ۚ وَمَنْ يَكْتُمْهَا فَإِنَّهُ آثِمٌ قَلْبُهُ ۗ وَاللَّهُ بِمَا تَعْمَلُونَ عَلِيمٌ

கடன் தொகை சிறியதோ பெரியதோ காலக்கெடு வைத்து கடன் ஒப்பந்தத்தை எழுதுவதில் முறைக்கேடுகள் எதுவும் இருக்கக்கூடாது. இதுவே நியாயமான முறையில் நடந்துக் கொள்வதற்காகவும் கடன் கொடுப்பல் வாங்கல் விஷயத்தில் பிரச்சனை எதுவும் இல்லாமலிருக்க சாட்சியங்கள் நியமனம் ஆக்கியதும் அல்லாஹ்வின் புறத்திலிருந்து ஏற்படுத்தப்பட்ட சிறந்த வழிமுறைகளாகும்.

இது தவிர உங்களிடையே நடைபெற்று வரும் ரொக்க வியாபரங்களுக்காக அதை எழுதிக் கொள்ளாவிட்டாலும் உங்கள் மீது குற்றமில்லை. அவ்வாறு நீங்கள் வியாபரம் செய்யும் போதும் பில், ரசீது போன்ற தக்க ஆதாரங்களை ஏற்படுத்திக் கொள்வதும் மிகவும் நல்லது.

இதை நினைவில் கொள்ளுங்கள். கடன் ஒப்பந்தங்களை எழுதுபவன் எந்த வகையிலும் யாருக்கும் தீங்கிழைக்கக் கூடாது. இவ்வாறு செய்தால் அல்லாஹ்வின் சட்டங்களின்படி குற்றவாளியாவார். எனவே ஒவ்வொரு விஷயத்திலும் அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை பேணி நடந்துக் கொள்ளுங்கள். இவை வஹீ என்னும் இறை வழிகாட்டுதல்கள் மூலமாக உங்களுக்கு அறிவிக்கப்படுகிறது. ஒவ்வொரு விஷயத்தைப் பற்றிய ஞானமும் அல்லாஹ்விடம் நிச்சயமாக உள்ளது.

283. ஒரு வேளை நீங்கள் பிரயாணத்தில் இருக்கும் நிலையில் கடனுதவி செய்ய நேர்ந்து கடன் ஒப்பந்தங்களை எழுத வாயிப்பில்லை என்றால் கடன் வாங்குபவரிடமிருந்து ஏதாவது பொருளை அடமானமாகப் பெற்றுக்கொள்ளலாம். இவ்வாறு நம்பி ஒப்படைக்கப்பட்ட அமானிதப் பொருளை கடன் தீர்ந்ததும் திருப்பித் கொடுத்து விடவேண்டும். இப்படியாக அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை பேணி நடந்துக் கொள்ளுங்கள். மேலும் நீங்கள் இதற்கு சாட்சியாக நின்றால் அந்த சாட்சியத்தை மறைக்காதீர்கள். இவ்வாறு மறைப்பது மற்றவர்களுக்கு தெரியாமல் போகலாம். ஆனால் நீங்கள் செய்யும் இந்த

*283.* இன்னும், நீங்கள் பிரயாணத்திலிருந்து, (அச்சமயம்) எழுதுபவனை நீங்கள் பெற்றுக் கொள்ளாவிட்டால், (கடன் பத்திரத்திற்கு பதிலாக ஏதேனும் ஒரு பொருளைக் கடன் கொடுத்தவன்) அடமானமாகப் பெற்றுக் கொள்ளலாம். உங்களில் ஒருவர் மற்றவரை நம்பி (இவ்வாறு ஒரு பொருளைக் காப்பாக வைத்தால்,) யாரிடத்தில் அமானிதம் வைக் கப்பட்டதோ அவன் அதனை ஒழுங்காகத் திருப் பிக் கொடுத்துவிட வேண்டும்; அவன் தன் இறைவனாகிய அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளட்டும்; அன்றியும், நீங்கள் சாட்சியத்தை மறைக்க வேண்டாம் - எவன் ஒருவன் அதை மறைக்கின்றானோ நிச்சயமாக அவனுடைய இருதயம் பாவத்திற்குள்ளாகிறது - இன்னும்

செயலால் உங்கள் இதயம் நிச்சயமாக பாவத்திற்குள்ளாகிறது. மேலும் இதனால் உங்களுடைய வளர்ச்சி தடைபட்டு போயிவிடுகிறது. ஏனெனில் உங்களுடைய எந்த ஒரு செயலும் அல்லாஹ்வின் செயல்வினைச் சட்டத்திலிருந்து தப்பித்துச் செல்ல இயலாது. ஆக உங்களுடைய எல்லா செயல்களும் அல்லாஹ்விற்கு நன்கு தெரியும்.

284 நினைவில் கொள்ளுங்கள் வானங்களிலும் பூமியிலும்

*285. (இறை) தூதர், தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்றதை நம்புகிறார்; (அவ்வாறே) முஃமின்களும் (நம்புகின்றனர்; இவர்கள்) யாவரும் அல்லாஹ்வையும், அவனுடைய மலக்குகளையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும் நம்புகிறார்கள்: "நாம் இறை தூதர்களில் எவர் ஒருவரையும் பிரித்து வேற்றுமை பாராட்டுவதில்லை; (என்றும்) இன்னும் நாங்கள் செவிமடுத்தோம்; (உன் கட்டளைகளுக்கு) நாங்கள் வழிப்பட்டோம்; எங்கள் இறைவனே! உன்னிடமே மன்னிப்புக் கோருகிறோம்; (நாங்கள்) மீளுவதும் உன்னிடமே தான்" என்று கூறுகிறார்கள்.*

286 لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا اِلَّا وُسْعَهَا ؕ
لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا
اكْتَسَبَتْ ؕ رَبَّنَا لَا تُؤَاخِذْنَآ اِنْ
نَّسِيْنَآ اَوْ اَخْطَاْنَا ۚ رَبَّنَا وَلَا تَحْمِلْ
عَلَيْنَآ اِصْرًا كَمَا حَمَلْتَهٗ عَلَى
الَّذِيْنَ مِنْ قَبْلِنَا ۚ رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا
مَا لَا طَاقَةَ لَنَا بِهٖ ۚ وَاعْفُ
عَنَّا ٙ وَاغْفِرْ لَنَا ٙ وَارْحَمْنَا ٙ
اَنْتَ مَوْلٰٮنَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ
الْكٰفِرِيْنَ ۠

*286. அல்லாஹ் எந்த ஓர் ஆத்மாவுக்கும் அது தாங்கிக் கொள்ள முடியாத அளவு கஷ்டத்தைக் கொடுப்பதில்லை; அது சம்பாதித்ததின் நன்மை அதற்கே; அது சம்பாதித்த தீமையும் அதற்கே! (முஃமின்களே! பிரார்த்தனை செய்யுங்கள்:) "எங்கள் இறைவா! நாங்கள் மறந்து போயிருப்பினும், அல்லது நாங்கள் தவறு செய்திருப்பினும் எங்களைக் குற்றம் பிடிக்காதிருப்பாயாக! எங்கள் இறைவா! எங்களுக்கு முன் சென்றோர் மீது சுமத்திய சுமையைப் போன்று எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் இறைவா! எங்கள் சக்திக்கப்பாற்பட்ட (எங்களால் தாங்க முடியாத) சுமையை எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் பாவங்களை நீக்கிப் பொறுத்தருள்வாயாக! எங்களை மன்னித்தருள் செய்வாயாக! எங்கள் மீது கருணை புரிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன்; காஃபிரான கூட்டத்தாரின் மீது (நாங்கள் வெற்றியடைய) எங்களுக்கு உதவி செய்தருள்வாயாக!"*

மற்றவர்களை ஏற்க மறுக்கும் கொள்கையுடையவர்கள் அல்லர். இறைத்தூதர்கள் விஷயத்தில் வேற்றுமை பாராட்டமாட்டார்கள்.

இவர்களுடைய செயல்முறைகள் எவ்வாறு இருக்கும் என்றால் அல்லாஹ்வின் கட்டளைகளை செவியேற்று அ நன்படியே நடந்துக் கொள்வார்கள். இவர்களிடையே ஏற்படும் ஒருமைப்பாட்டினால் சமுதாயத்தில் எவ்வித சீர்கேடுகளின் ஆபத்துகள் இல்லாமல் பாதுகாப்பாக வாழ்வார்கள். இப்படியாக தம் வாழ்க்கைப் பயணத்தை தொடர்ந்து படிப்படியாக இறைவன் வகுத்துள்ள இலக்கை அடைந்துக்கொள்வார்கள்.

**286**. நினைவில் கொள்ளுங்கள். உங்களிடையே மனித நேயமும் ஆற்றல்களும் வளரச் செய்வதற்காகவே இந்த சட்டதிட்டங்கள் அருளப்பட்டு அதன்படி செயல்படும்படி அறிவுருத்தப்படுகின்றன. இதனால் கிடைக்கப் போகும் பலன்கள் உங்களுக்கே அன்றி அல்லாஹ்விற்கு அல்ல. (6:153) (7:42) (23:62). ஆ க மனித மாண்புகளின் உயர்வும் தாழ்வும் அவரவர் செய்துவரும் செயல்களைப் பொருத்தே அமையும். எந்த செயல்கள் தமக்கு நன்மை பயப்பதோடு மற்றவர்களுக்கும் நன்மை தரக்கூடியதாக இருக்குமோ அந்த செயல்களால் மட்டுமே மனித மாண்புகள் வளரவும் சமுதாய ஒருமைப்பாடு ஏற்படவும் உதவி புரியும். மாறாக சுயநலத்தை அடிப்படையாகக் கொண்டு செய்யும் செயல்களால் சமுதாயம் சீரழிந்துவிடுகிறது. ஆக இறைக் வழிகாட்டுதலை ஏற்று நடப்பவர்கள் இப்படிப்பட்ட செயல்களை செய்வதிலிருந்து தவிர்த்துக்கொள்வார்கள். இது மட்டுமின்றி தம் மனதில் உதிக்கும் அழகான எண்ணங்கள் உதடுகளில் இவ்வாறு வந்த வண்ணம் இருக்கும் :

இறைவனே! எங்கள் அணுகுமுறையில் தவறு ஏதாவது நடந்திருந்தால், இதனால் சமூக வளர்ச்சியில் தடை ஏற்படாது காத்தருள்வாயாக.

இறைவா! எங்களுக்கு முன் சென்ற சமுதாயங்கள் தம் முன்னோர்களின் பாவச் சுமைகளால் நசுக்கப்பட்டது போல் நாங்களும் நசுங்காமல் இருந்திட எங்களுக்கு மனவலிமையும் நேரான பாதையும் கிடைத்திட செய்வாயாக.

இறைவா! நாங்கள் எடுத்துக்கொண்ட பொறுப்புகளை எளிதாக நிறைவேற்றிட எங்களுக்கு ஆற்றல்களை தந்தருள்வாயாக. இதில் குறைபாடுகள் ஏதாவது இருந்தால் அ ன் தீய விளைவுகளிலிருந்து காத்தருள்வாயாக.